# அழகப்பா பல்கலைக்கழகம்

தேசியத் தர நிர்ணயக் குழுவின் மூன்றாம் சுற்றுத் தர மதிப்பீட்டில் A+(CGPA: 3.64) தகுதியும்
மனிதவள மேம்பாட்டு அமைச்சகம் - பல்கலைக்கழக மானியக்குழுவின் முதல் தரப்
பல்கலைக்கழகம் மற்றும் தன்னாட்சித் தகுதியும் பெற்றது)

காரைக்குடி - 630003

## தொலைநிலைக்கல்வி இயக்ககம்


## முதுகலை வரலாறு

## நான்காம் பருவம்

## 321 42

# அறிவுசார் தமிழக வரலாறு

# தமிழ்நாட்டின் அறிவுசார் வரலாறு

## முதுகலை வரலாறு

### பொருளடக்கம்

## தொகுதி 1 சங்ககால இலக்கியங்களும் அதன் வளர்ச்சியும்

**அமைப்பு**

**அலகு I சங்க கால இலக்கியங்கள்**



**அமைப்பு**

**அலகு II திருவள்ளுவர்**

**அமைப்பு**

**அலகு III இளங்கோவடிகள்**



**அமைப்பு**

**அலகு IV தமிழ் மொழி மற்றும் இலக்கியத்தின் மறுமலர்ச்சி**

## தொகுதி – 2 அறிவுசார்ந்த தமிழ் சமுதாய மதச் சிந்தனைகள்

**அமைப்பு**

**அலகு V சுந்தரம் பிள்ளை**



**அமைப்பு**

**அலகு VI சமூகம்**

**அமைப்பு**

**அலகு VII அயோத்திதாச பண்டிதர்**



**அமைப்பு**

**அலகு VIII பாரதியார்**

## தொகுதி – 3 மதத்தின் பரப்பாளர்கள் மற்றும் அதன் முக்கியத்துவமும்

**அமைப்பு**

**அலகு IX ஆழ்வார்கள் மற்றும் நாயன்மார்கள்**



**அமைப்பு**

**அலகு X திருமூலர்**

**அமைப்பு**

**அலகு XI கால்டுவெல்**



## தொகுதி – 4 பிராமணல்லாதோர் இயக்கம் மற்றும் தலைவர்கள் பங்கேற்பும்

**அமைப்பு**

**அலகு XII பிராமணர் அல்லாதோர் சங்கம்**

**அமைப்பு**

**அலகு XIII டி எம் நாயர்**



**அலகு XIV இராமசாமி முதலியார் அமைப்பு**

# தொகுதி I

# சங்ககால இலக்கியங்களும் அதன் வளர்ச்சியும்

## அலகு 1

## சங்க கால இலக்கியங்கள் - சங்ககால பாடல்கள்

குறிப்பு

**அலகு I சங்க கால இலக்கியங்கள்**



## 1.0 முன்னுரை

தமிழகத்தில் இலக்கியக் காலத்தைத் தொடர்ந்து தமிழை வளர்த்த சங்ககால புலவர்கள் உட்பட பக்திஇயக்ககால நாயன்மார்கள் மற்றும் ஆழ்வார்கள் போன்றோர் ஆங்கிலேயர்கள், திராவடர்கள் கிறித்தவர்கள் என தமிழ் வளர்ச்சிக்கு ஆற்றிய பணிகளை தமிழ்நாட்டின் அறிவுசார் வரலாறு என்ற நுர்லீனு் வாயிலாக பின்வருமாறு விளக்கப்படுகின்றன.உலகின் மூத்த மொழிகளுள் ஒன்றாக விளங்குகின்ற மொழி தமிழ் மொழியாகும். “கல் தோன்றி மண் தோன்றாக் காலத்தே வாளொடு முன்தோன்றி மூத்தகுடி“ என்று புறப்பொருள் வெண்பா மாலை என்ற புற இலக்கண நூல் கூறுவதைக் கொண்டு தமிழின் பழமையை உணரலாம். தொடக்க காலத்தில் தமிழ் எந்தப் பகுதியில் பேசப்பட்டது என்பதைத் தொல்காப்பியம் என்ற பழம்பெரும் இலக்கணநூல் கூறுகிறது. தொல்காப்பியத்திற்குப் பாயிரம் எழுதிய பனம்பாரனார் என்பவர்

***வடவேங்கடம் தென்குமரி ஆயிடைத்***
***தமிழ்கூறும் நல்லுலகம்***

என்று தமிழ்நாட்டின் எல்லையைக் கூறுகின்றார். எனவே, வடக்கே வேங்கடமலை முதல் தெற்கே குமரிமுனை வரை தமிழ் பேசப்பட்டதாக

குறிப்பு

நாம் இதன் மூலம் அறிகிறோம். தமிழ்நாட்டைச் சேர, சோழ, பாண்டியர் என்ற மூவேந்தர்களும், பல குறுநில மன்னர்களும் ஆண்டதாகச் சங்க இலக்கியங்கள் கூறுகின்றன. சேர நாட்டிற்கு வஞ்சி மாநகரும், சோழ நாட்டிற்குப் பூம்புகாரும், பாண்டிய நாட்டிற்கு மதுரையும் தலைநகர்களாக இருந்துள்ளன. மூவேந்தர்களில் பாண்டிய மன்னர்கள் தமிழ்மொழியைப் போற்றி வளர்க்கும் வண்ணம் தமிழ்ச் சங்கங்கள் வைத்து நடத்தியதாகப் பல்வேறு சான்றுகள் கிடைக்கின்றன.

அச்சங்கங்களில் தமிழ்ப் புலவர்கள் இருந்து தமிழ் ஆய்வு செய்ததாகவும், தமிழில் பல்வேறு செய்யுள்களை இயற்றியதாகவும் சங்க இலக்கியங்கள், இறையனார் களவியல் உரை போன்ற நூல்களால் அறியலாம். தமிழ் என்ற சொல் இனிமை என்ற பொருளை உடையது. இனிமையும், நீர்மையும் தமிழ் எனலாகும்" என்று பிங்கல நிகண்டு கூறுகின்றது. மதுரமான மொழி என வால்மீகி இராமாயணம் கூறுகின்றது. இந்த இனிமையான தமிழ் மொழியைச் சங்கம் மூலம் புலவர்களும் கற்றறிந்தோரும் சிற்றரசர்களும், பேரரசர்களும் பல்வேறு வகைப்பட்ட செய்யுட்களைப் பாடி வளர்த்தனர். புலவர்கள் அரசர்களால் பெரிதும் போற்றப்பட்டனர்.

தமிழ் இலக்கியம் இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு மேலான தொடர்ச்சி கொண்ட உலகின் சிறந்த இலக்கியங்களில் ஒன்று. வாழ்வின் பல்வேறு கூறுகளை தமிழ் இலக்கியங்கள் இயம்புகின்றன. தமிழ் இலக்கியத்தில் வெண்பா, குறள், புதுக்கவிதை, கட்டுரை, பழமொழி, தொண்ணூற்றாறு வகை சிற்றிலக்கியங்கள் என பல வடிவங்கள் உள்ளன. தமிழில் வாய்மொழி இலக்கியங்களும் முக்கிய இடம் வகிக்கின்றன.

**வரலாறு:** மு. வரதராசனின் தமிழ் இலக்கியம் என்னும் நூலில் தரப்பட்டிருக்கும் தமிழ் இலக்கிய கால வகைப்பாட்டை அடிப்படையாகக் கொண்ட வகைப்பாடு பின்வருமாறு.

**பழங்காலம்**

- சங்க இலக்கியம் (கிமு 500 - கிபி 300)
- நீதி இலக்கியம் (கிபி 300 - கிபி 500)

**இடைக்காலம்**

- பக்தி இலக்கியம் (கிபி 700 - கிபி 900)
- காப்பிய இலக்கியம் (கிபி 900 கிபி 1200)
- உரைநூல்கள் (கிபி 1200 - கிபி 1500)
- புராண இலக்கியம் (கிபி 1500 - கிபி 1800)
- புராணங்கள், தலபுராணங்கள்
- தமிழ் இலக்கியம்

**தற்காலம்** (பத்தொன்பதாம் நூற்றாண்டு)

- தமிழ் இலக்கியம்
- புதினம்

**இருபதாம் நூற்றாண்டு**

- கட்டுரை
- சிறுகதை
- புதுக்கவிதை
- ஆராய்ச்சிக் கட்டுரை

**இருபத்தோராம் நூற்றாண்டு**

- அறிவியல் தமிழ்
- கணினித் தமிழ்



### 1.1 நோக்கம்

- சங்கம் என்றால் என்ன என்பதைப் பற்றி அறிய முடிகின்றது.
- முச்சங்கங்களின் வரலாற்றை பற்றி அறிய முடிகின்றது.
- எட்டுத்தொகை, பத்துப்பாட்டு ஆகியவற்றைப் பற்றி அறிய முடிகின்றது.
- சங்க இலக்கியங்களில் அக இலக்கியங்கள் எவை என்பதையும், புற இலக்கியங்கள் எவை என்பதையும் பற்றி அறிய முடிகின்றது.
- சங்ககால வரலாற்றுச் செய்திகளையும், வாழ்வியல் செய்திகளையும் பற்றி அறிய முடிகின்றது.

## 1.2 சங்க கால இலக்கியங்கள்

பல்லாயிரம் ஆண்டுக் காலப் பழமையான இலக்கிய இலக்கணங்களைக் கொண்ட மொழியாகத் தமிழ் மொழி விளங்குகின்றது. அதனால் அம்மொழி நீண்டகால இலக்கிய வரலாற்றினைக் கொண்டிருக்கிறது. இதில் முதன்மையான இலக்கிய வரலாற்றுக் காலம் சங்க காலமாகும்.

### 1.2.1. முச்சங்கங்கள்

பாண்டிய மன்னர்கள் தொடக்கத்தில் கடல் கொண்ட தென்மதுரையைத் தலைநகராகக் கொண்டு ஆண்டனர். அங்கு, தமிழ் அறிஞர் பெருமக்களைக் கொண்டு தமிழ் இலக்கிய ஆய்வும், செய்யுள் இயற்றுதலும் நடைபெற்றன. அதுவே முதற் சங்கம் எனப்பட்டது. தென்மதுரை கடல் பெருக்கெடுத்து வந்ததால் அழிந்தது. அதன் பிறகு கபாடபுரம் என்ற ஊரைத் தலைநகராகக் கொண்டு பாண்டியர்கள் ஆண்டார்கள். அங்கும் ஒரு தமிழ்ச் சங்கம் தொடங்கப்பட்டுப்

புலவர்களும், அரசர்களும் தமிழ் ஆய்ந்தனர். இது இடைச் சங்கம் என்று அழைக்கப் பட்டது.



கபாடபுரமும் கடலால் அழிவுற்ற பிறகு இன்றைய மதுரைக்குப் பாண்டியர் தலைநகரை மாற்றினர். இங்கும் ஒரு தமிழ்ச் சங்கம் தொடங்கப் பெற்று கி.பி.200 வரை நடைபெற்றது. இது கடைச்சங்கம் என்று அழைக்கப்பட்டது. இவ்வாறு மூன்று சங்கங்கள் நடத்தப் பெற்று, புலவர்களும், அரசர்களும் பல்வேறு செய்யுட்களைப் பாடி, தமிழை வளர்த்தனர். இம் முச்சங்கங்களின் காலமே சங்க காலம் என்று இன்றுவரை அழைக்கப்படுகிறது. இனி ஒவ்வொரு சங்கம் பற்றியும் விவரமாகக் காணலாம்.

### 1.2.2 சங்கம் பெயர் விளக்கம்

சங்கம் என்ற பெயரை முதலில் ஆராய்வோம். சங்க இலக்கியங்கள் என்று சொல்லப்படுகின்ற எட்டுத்தொகை, பத்துப்பாட்டு இலக்கியங்களில் சங்கம் என்ற சொல்லே பயன்படுத்தப்படவில்லை. கி.பி.400 வாக்கில் வச்சிரநந்தி என்பவர் நான்காம் சங்கம் தொடங்கினார். பிறகு சமணத் துறவிகள் சங்கம் என்ற சொல்லைப் பயன்படுத்திச் சமயத் தொண்டு ஆற்றினர். அந்தச் சொல்லைத் தான் பிற்கால இலக்கிய ஆசிரியர்கள் கி.பி.200க்கு முன் தோன்றிய இலக்கியங்களைச் சங்க இலக்கியங்கள் என்று அழைத்தனர். பாண்டிய மன்னர்கள் புலவர்களைக் கூட்டி வைத்துத் தமிழாய்ந்து, செய்யுட்கள் இயற்றிய அவையைச் சங்கம் என்று கூறினர். மதுரையில் சங்கம் போன்ற அமைப்பு ஒன்று இருந்ததைத் தமிழ் இலக்கியங்கள் பல்வேறு பெயர்களில் சுட்டுகின்றன. பத்துப்பாட்டில் ஒன்றான சிறுபாணாற்றுப்படை,

*தமிழ்நிலை பெற்ற தாங்கரு மரபின்*
*மகிழ்நனை மறுகின் மதுரை (அடிகள் 66-67)*

என்று கூறுகிறது. இதை வைத்துப் பார்க்கும் போது மதுரையில் தமிழ் நிலை பெற்றிருந்தது என்பது புலனாகிறது. மதுரைக் காஞ்சி எனும் இலக்கியம்

*தொல்லாணை நல்லாசிரியர்*
*புணர்கூட்டுண்ட புகழ்சால் சிறப்பின்*
*நிலந்தரு திருவின் நெடியோன் (அடிகள் 761-763)*

என்று கூறுவதைக் காணும்போது நிலந்தரு திருவின் நெடியோன் என்ற பாண்டியன் அவையில் புலவர்கள் ஒருங்கிணைந்து செய்யுள் இயற்றினர் எனப் புலனாகிறது.

*புறநானூற்றில் 72ஆம் பாடல்,*
*ஓங்கிய சிறப்பின் உயர்ந்த கேள்வி*

குறிப்பு

*மாங்குடி மருதன் தலைவனாக*
*உலகமொடு நிலைஇய பலர்புகழ் சிறப்பின்*
*புலவர் பாடாது வரைகஎன் நிலவரை*

என்று கூறுகிறது. இதில் சங்கத்துத் தலைவராக மாங்குடி மருதன் என்னும் புலவர் இருந்ததும், புலவர்கள் செய்யுள் பாடியதும் கூறப்பட்டுள்ளது. காப்பிய இலக்கியமாகிய சிலப்பதிகாரம் "தென்தமிழ் நன்நாட்டுத் தீதுதீர் மதுரை" என்றும், மணிமேகலை "தென் தமிழ் மதுரைச் செழுங்கலைப் பாவாய்" என்றும் கூறுகிறது.

கி.பி. 600 வாக்கில் வாழ்ந்த திருநாவுக்கரசர் சிவபெருமானைச் சங்கத்தோடு இணைத்து போற்றிப் பாடுகிறார். தருமி என்னும் ஏழைப் புலவனுக்குக் கொங்குதேர் வாழ்க்கை" என்ற குறுந்தொகைப் பாடலை எழுதிக் கொடுத்தார் என்பதை,

*நன்பாட்டுப் புலவனாய்ச் சங்கமேறி*
*நற்கனகக்கிழி தருமிக்கு அருளினோன்காண் (6.76.3)*

என்று கூறுகின்றார்.

திருநாவுக்கரசருக்குப் பின் வந்த பல்வேறு இலக்கிய ஆசிரியர்களும் சங்கம் என்ற சொல்லையே பயன்படுத்துகின்றனர். சின்னமனூர்ச் செப்பேடு, சங்கத்தில் இலக்கியம் இயற்றும் பணியோடு, மொழிபெயர்ப்புப் பணியும் நடைபெற்றதாக ஒரு செய்தியைக் கூறுகிறது.

*மாபாரதம் தமிழ்ப்படுத்தும்*
*மதுராபுரிச் சங்கம் வைத்தும்*

என்று கூறுவதால் மகாபாரதத்தைத் தமிழில் மொழிபெயர்த்த பணியும் சங்கத்தில் நடந்ததை நாம் அறிகிறோம்.

வடமொழி இலக்கியமாகிய வால்மீகி இராமாயணம் சங்கம் இருந்தமைக்குச் சான்றாக விளங்குகின்றது. அந்த இலக்கியத்தில் சீதையைத் தேடச் சென்ற வானரரை நோக்கிச் சுக்கிரீவன் "பொதிகை மலையில் அகத்திய முனிவரின் தமிழ்ச் சங்கம் உள்ளது அதனைக் காண்பீர்" என்று கூறியதாக வருகிறது. பிளினி, தாலமி போன்ற மேலைநாட்டு அறிஞர்களும் சங்கம் பற்றி உரைக்கின்றனர். இலங்கை வரலாற்று நூல்களான மகாவம்சம், இராஜாவளி, இராஜரத்னாகிரி போன்ற நூல்களும் சங்கம் இருந்தமைக்குச் சான்று பகர்கின்றன.

**முதற் சங்கம்:** கடல் கொண்ட தென்மதுரையில் பாண்டிய மன்னர்களால் நிறுவப் பெற்ற சங்கம் தான் முதற்சங்கமாகும். இச்சங்கத்தை நிறுவிய மன்னன் காய்சின வழுதி என்பவனாவான். காய்சின வழுதி முதலாகக் கடுங்கோன் என்ற பாண்டிய மன்னன் ஈறாக 89 அரசர்கள் 4440 ஆண்டுகள் இச்சங்கத்தை நடத்தியதாக இறையனார்களவியல் உரை கூறுகிறது. இச்சங்கத்தில் அகத்தியர்,

திரிபுரம் எரித்த விரிசடைக் கடவுள், குன்றெறிந்த முருகவேள், முரஞ்சியூர் முடிநாகராயர், நிதியின் கிழவன் போன்ற புலவர்கள் இருந்து தமிழ் ஆராய்ந்தனர். 4449 புலவர்கள் தமிழ் ஆராய்ந்து செய்யுள் பாடினர். அவர்களால் பரிபாடல், முதுநாரை, முதுகுருகு, களரியாவிரை போன்ற நூல்கள் பாடப்பட்டன.

**இடைச்சங்கம்** :தென்மதுரையைக் கடல் கொண்ட பிறகு கபாடபுரத்தில் தொடங்கப் பெற்ற இடைச்சங்கம் 3700 ஆண்டுக் காலம் நடைபெற்றது. வெண்தேர்ச் செழியன் என்ற பாண்டிய மன்னனால் தொடங்கப் பெற்ற இச்சங்கம் முடத்திருமாறன் முடிய 59 மன்னர்களால் நடத்தப் பெற்றது. இச்சங்கத்தில் அகத்தியர், தொல்காப்பியர், இருந்தையூர் கருங்கோழியார் வெள்ளூர்க் காப்பியனார் போன்ற 3700 புலவர்கள் பாடினர். இவர்களால் பாடப்பெற்றவை கலி, குருகு, வெண்டாளி, வியாழ மாலை அகவல் போன்ற நூல்களாகும்.

**கடைச் சங்கம்:** கபாடபுரமும் கடலால் அழிந்த பிறகு தற்போது உள்ள மதுரையில் கடைச் சங்கம் எனப்படுகின்ற மூன்றாம் சங்கம் தொடங்கப் பெற்றது. இரண்டாம் சங்கத்தை நடத்தி, கபாடபுரம் அழியும் போது அங்கிருந்து பிழைத்து வந்த முடத்திருமாறனால் இது, தொடங்கப் பெற்றது. இச்சங்கம் முடத்திருமாறன் முதலாக உக்கிரப்பெருவழுதி ஈறாக 49 அரசர்களால் நடத்தப் பெற்றது. 1850 ஆண்டுகள் இச்சங்கம் நடைபெற்றது. இச்சங்கத்தில் சிறுமேதாவியார், சேந்தம்பூதனார், அறிவுடையரனார், பெருங்குன்றூர்க்கிழார், இளந்திருமாறன், மதுரை ஆசிரியர் நல்லந்துவனார், மருதன் இளநாகனார், நக்கீரனார் என 449 புலவர்கள் பாடினர்.

இதில் எழுதப்பட்ட நூல்கள் அகநானூறு, குறுந்தொகை, நற்றிணை, புறநானூறு, ஐங்குறுநூறு, பதிற்றுப்பத்து, கலித்தொகை, பரிபாடல் போன்றவை ஆகும். முச்சங்கங்கள் பற்றிய மேற்கண்ட செய்திகளை இறையனார் களவியல் உரை என்ற கி.பி. 8ஆம் நூற்றாண்டில் எழுதப்பட்ட நூல்தான் கூறுகின்றது. இந்நூல் கூறும் செய்திகள் முழுமையான நம்பிக்கைக்குரியனவா என்பது ஆராய்ச்சிக்குரியதாகும். இருப்பினும் சங்கம் என்ற ஓர் அமைப்பு, பாண்டியர்களால் நடத்தப் பெற்றமை குறித்துச் சங்க இலக்கியங்களிலும், பிற்கால இலக்கியங்களிலும் நிறையச் சான்றுகள் கிடைக்கின்றன. முச்சங்கங்களும் இருந்த கால அளவு, பாடிய புலவர்களின் எண்ணிக்கை, சங்கம் நடத்திய அரசர்கள் பற்றி இறையனார் களவியல் உரை கூறும் செய்திகள் முழுமையும் உண்மையாக இருக்க வாய்ப்பு இல்லை. கி.மு. 500 முதல் கி.பி.200 முடிய உள்ள காலமே சங்கம் நடைபெற்ற காலமாக இருக்க முடியும்.

### 1.2.3. சங்க இலக்கியங்கள்

சங்கம் என்ற ஓர் அமைப்பு இருந்ததாகப் பல்வேறு ஆதாரங்கள் கிடைத்தாலும், சங்கத்திலே அமர்ந்து புலவர்கள் பாடிய பாடல்கள்

சிலவாகத் தான் இருக்க முடியும். பெரும்பாலான பாடல்கள், பல்வேறு இடங்களில், பல்வேறு காலங்களில், பல்வேறு புலவர்களால் பாடப்பட்டவையாகத்தான் இருக்க வேண்டும். அவை கி.மு.500 முதல் கி.பி.200 முடிய உள்ள காலத்தில் பாடப்பட்டவையாக இருக்கலாம். சங்கப் பாடல்கள் எட்டுத்தொகை நூல்கள் என்றும், பத்துப்பாட்டு என்றும் பிரிக்கப்பட்டிருத்தல் காணத்தக்கது. ஏராளமான பாடல்கள் ஓலைச் சுவடிகளில் இருந்து அழிந்துபோக, எஞ்சியவற்றைத் தொகுக்க வேண்டும் என்ற எண்ணத்தில் அக்காலத்து அரசர்கள் புலவர்களின் துணையோடு செயல்பட்டனர். அவ்வாறு தொகுக்கப்பட்டவையே எட்டுத்தொகையும், பத்துப்பாட்டுமாகும். இக்காலப்பகுதியில் படைக்கப்பட்ட இலக்கண நூல்களுள் தொல்காப்பியம் மட்டுமே கிடைத்துள்ளது. எட்டுத் தொகுதிகளாகத் தொகுக்கப்பட்ட எட்டு நூல்கள் எட்டுத்தொகை என்றும், பத்துப் பெரிய பாடல்கள் பத்துப்பாட்டு என்றும் பெயர் பெற்றன.

**தொல்காப்பியம்:** சங்க இலக்கியங்களை நாம் அறிந்து கொள்வதற்கு முன்னால் சங்க இலக்கியங்களுக்கு இலக்கணமாகத் திகழ்ந்த தொல்காப்பியம் பற்றி அறிந்து கொள்வது தேவையான ஒன்றாகும். சங்க இலக்கியங்களை அகம், புறம் எனப் பிரித்துப் பார்ப்பதற்கும், தமிழ் மொழியின் முழுமையான இலக்கணத்தை அறிந்து கொள்வதற்கும் தொல்காப்பியம் துணை நிற்கிறது. சங்க இலக்கியங்களுக்கு முன்னால் பல நூறு ஆண்டுக்காலத் தமிழிலக்கியங்கள் இருந்திருக்க வேண்டும். கடல் பெருக்கெடுத்து ஊர்களை அழித்ததாலும், ஓலைச் சுவடிகள் பல்வேறு காரணங்களால் அழிந்ததாலும் அவ்விலக்கியங்கள் இன்றைக்குக் கிடைக்கவில்லை.

அவ்விலக்கியங்களுக்கு அகத்தியர் எழுதிய அகத்தியம் என்ற இலக்கண நூல் இருந்ததாகவும், அதனைத் தொடர்ந்து அகத்தியரின் மாணவரான தொல்காப்பியர் தொல்காப்பியத்தை எழுதியதாகவும் தமிழ் ஆய்வாளர்கள் இறையனார் களவியல் உரையை அடிப்படையாகக் கொண்டு கூறுகின்றனர். தொல்காப்பியர் கி.மு. 500 அளவில் வாழ்ந்ததாக, பல்வேறு ஆய்வுகள் தெரிவிக்கின்றன. தொல்காப்பியர் எழுதிய தொல்காப்பியமே சங்க இலக்கியத்தின் இலக்கணமாகத் திகழ்ந்தது. தொல்காப்பியம் மூன்று பெரும் பிரிவுகளாகப் பிரிக்கப்பட்ட இலக்கண நூலாகும். எழுத்ததிகாரம், சொல்லதிகாரம், பொருளதிகாரம் என்பன அவை. ஒவ்வொரு அதிகாரமும் ஒன்பது இயல்களாகப் பிரிக்கப்பட்டிருக்கிறது.

**எழுத்ததிகாரம்**

- நூல் மரபு
- மொழி மரபு
- பிறப்பியல்
- புணரியல்
- தொகை மரபு
- உருபியல்

- உயிர் மயங்கியல்
- புள்ளி மயங்கியல்
- குற்றியலுகரப் புணரியல்



என ஒன்பது இயல்களாகப் பிரிக்கப்பட்டு எழுத்தின் பிறப்பு, தொகை, வகை, பெயர் மயக்கம், சொற்களின் புணர்ச்சி ஆகியவற்றை விளக்குகின்றது. இதில் 483 நூற்பாக்கள் உண்டு.

**சொல்லதிகாரம்:** தமிழ்ச் சொற்றொடர்களின் ஆக்கம், வேற்றுமைகள், பெயர், வினை, இடை, உரி என நால்வகைச் சொற்கள் ஆகியவை பற்றிக் கூறுகிறது. இதில் 463 நூற்பாக்கள் உள்ளன. இது

- கிளவியாக்கம்
- வேற்றுமையியல்
- வேற்றுமை மயங்கியல்
- விளிமரபு
- பெயரியல்
- வினையியல்
- இடையியல்
- உரியியல்
- எச்சவியல்

என்று 9 இயல்களாகப் பிரிக்கப்பட்டுள்ளது.

**பொருளதிகாரம்:** வாழ்க்கைக்கும், இலக்கியத்திற்கும் இலக்கணம் கூறும் பகுதியாகும். உலகில் எல்லா மொழிகளும் எழுத்துக்கும், சொல்லுக்கும் மட்டுமே இலக்கணம் கூற, தொல்காப்பியம் தமிழில் வாழும் நெறிக்கு இலக்கணம் கூறுகிறது. பொருளதிகாரத்தில் 665 நூற்பாக்கள் உள்ளன. தொல்காப்பியர் வாழ்க்கையை அகம், புறம் எனப் பிரித்து அதற்கான இலக்கணத்தைக் கூறியுள்ளார். பொருளதிகாரத்தில் அவர்,

- அகத்திணையியல்
- புறத்திணையியல்
- களவியல்
- கற்பியல்
- பொருளியல்
- மெய்ப்பாட்டியல்
- உவமவியல்
- செய்யுளியல்
- மரபியல்

என ஒன்பது இயல்களாகப் பிரித்து விவரித்துள்ளார்.

இந்த இலக்கண நூல்தான் தமிழர் நாகரிகத்தை உலகின் தலைசிறந்த நாகரிகமாக எடுத்து விளக்குவதற்குச் சான்றாக நிற்கின்றது. மேலும், இளங்கோவடிகளின் சிலப்பதிகாரம், கம்பனின் இராமகாதை

குறிப்பு

ஆகிய செவ்வியல் காவியங்களை முன்னுதாரணங்களாகக் கொண்டு, பெரிய புராணம் முதலிய பிற தமிழ்க் காப்பியங்களைப் பார்ப்பதும் இதன் அடிப்படையில் அதுசரியான காப்பியமே என்றோ காப்பியம் அன்று என்றோ மதிப்பிடுவதும் முடிபுமுறைத் திறனாய்வு ஆகும்.

**எட்டுத்தொகை நூல்கள்** எட்டுத்தொகையில் உள்ளவை எட்டு, தொகை நூல்களாகும். இவற்றைக் குறிக்கும் பழம் பாடல் ஒன்று உள்ளது. இப்பாடலை மனப்பாடம் செய்து கொண்டால் இந்நூல்களின் பெயர்களை நாம் நன்கு நினைவில் வைத்துக் கொள்ளலாம்.

***நற்றிணை நல்ல குறுந்தொகை ஐங்குறுநூறு***
***ஒத்த பதிற்றுப்பத்து ஓங்கு பரிபாடல்***
***கற்றறிந்தார் ஏத்தும் கலியொடு அகம்புறம் என்று***
***இத்திறத்த எட்டுத் தொகை.***

**அகநூல்கள்**

- நற்றிணை
- குறுந்தொகை
- ஐங்குறுநூறு
- கலித்தொகை
- அகநானூறு

**புறநூல்கள்**

- பதிற்றுப்பத்து
- புறநானூறு

**அகமும், புறமும் கலந்தது**

- பரிபாடல்

**பத்துப்பாட்டு** சிறிய பாடல்கள் எல்லாம் எட்டுத்தொகையுள் அடங்கிவிட, பத்துப் பெரிய பாடல்களின் தொகுதி பத்துப்பாட்டு எனப் பெயரிடப்பட்டது. இப்பத்துப் பாடல்களையும் குறிக்கும் பழம்பாடல் ஒன்று உள்ளது.

***முருகு பொருநாறு பாணிரண்டு முல்லை***
***பெருகு வளமதுரைக் காஞ்சி - மருவினிய***
***கோலநெடு நல்வாடை கோல்குறிஞ்சி பட்டினப்***
***பாலை கடாத்தொடும் பத்து***

- திருமுருகாற்றுப்படை
- பொருநராற்றுப்படை
- சிறுபாணாற்றுப்படை
- பெரும்பாணாற்றுப்படை
- நெடுநல்வாடை
- குறிஞ்சிப் பாட்டு

குறிப்பு

- முல்லைப்பாட்டு
- மதுரைக் காஞ்சி
- பட்டினப் பாலை
- மலைபடுகடாம்

**பதினெண் கீழ்க்கணக்கு நூல்கள்**

- திருக்குறள்
- நான்மணிக்கடிகை
- இன்னா நாற்பது
- இனியவை நாற்பது
- களவழி நாற்பது
- திரிகடுகம்
- ஆசாரக்கோவை
- பழமொழி நானூறு
- சிறுபஞ்சமூலம்
- முதுமொழிக்காஞ்சி
- ஏலாதி
- கார் நாற்பது
- ஐந்திணை ஐம்பது
- திணைமொழி ஐம்பது
- ஐந்திணை எழுபது
- திணைமாலை நூற்றைம்பது
- கைந்நிலை
- நாலடியார்

## 1.3 சங்ககால பாடல்கள்

சங்க இலக்கியங்களை அகம், புறம் என்று பிரிப்பர். காதலைப் பற்றிப் பாடும் பாடல்களை அகம் என்றும், காதல் தவிர, பிற செய்திகளைப் பாடும் பாடல்களைப் புறம் என்றும் கூறுவர். இதற்கான இலக்கணத்தைத் தொல்காப்பியம் கூறுகிறது. அகப்பாடல்கள் கற்பனையான தலைவன், தலைவியின் காதலைப்பற்றி விளக்கியுரைக்கின்றன. புறப்பாடல்கள் நாட்டை ஆளும் அரசனின் வீரம், கொடை, சமூகத்திற்கு அரசன் ஆற்ற வேண்டிய கடமைகள், கல்வியின் சிறப்பு போன்றவற்றைக் கூறுகின்றன. பெரும்பாலான புறப்பாடல்கள் அரசனின் புகழைப் பாடுவனவாகவே உள்ளன. பூம்புகார், உறையூர், மதுரை, வஞ்சி போன்ற நகரங்களைத் தவிர, பெரும்பாலும் சிற்றூர்களே அக்காலத்தில் இருந்தமையால் மக்கள் இயற்கையோடு இயைந்த சீரிய வாழ்க்கையை வாழ்ந்ததைச் சங்க இலக்கியங்கள் கூறுகின்றன.

### 1.3.1 அகப்பாடல்கள்

ஒருவனும் ஒருத்தியும் தமக்குள்ளே கண்டு காதலிப்பது, காதலைத் தோழி மூலம் செவிலித்தாய், நற்றாய் ஆகியோருக்கு மெல்லத் தெரியப்படுத்துவதும் அக்காலத்தில் வழக்கத்தில் இருந்துள்ளன. இவ்வாறு காதலைத் தெரியப்படுத்துவதற்கு அறத்தொடு நிற்றல் என்ற பெயரும் உண்டு. பெற்றோர் திருமணத்திற்கு ஒத்துக் கொள்ளாத சூழலில் காதலனும் காதலியும் ஊரை விட்டு வெளியூர் சென்று விடுதல் உண்டு. இதற்கு உடன்போக்கு என்று பெயர். அக்காலத்தில் காதலித்த பெண்ணை மணந்து அவளோடு இன்பத்துடன் வாழ்ந்து வரும் தலைமகன் வேறு பெண்களை நாடிச் செல்வதும் வழக்கமாக இருந்திருக்கிறது. இதற்குப் பரத்தையிற் பிரிவு என்று பெயர். அதனால் தலைவி அவனிடம் சினம் கொண்டு ஊடல் கொள்ளுதலும் பழக்கமாக இருந்துள்ளது. அகப்பாடல்கள் பெரும்பாலும் கற்பனைப் பாடல்களாக இருந்தாலும், அக்கால மக்களின் காதல் வாழ்க்கையை முழுமையாகவே வெளிப்படுத்துகின்றன.

### 1.3.2 புறப்பாடல்கள்

புறப்பாடல்கள் பெரும்பாலும் கற்பனையாகப் பாடப்படவில்லை. இரு அரசர்களுக்கிடையே போர் ஏற்படும் போது புலவர்கள் தலையிட்டுப் போரைத் தடுத்துள்ளனர். அரசன் மக்களிடம் அளவுக்கதிகமாக வரி வாங்கும் நேரத்தில் புலவர்கள் தலையிட்டு அரசனுக்கு அறிவுரை கூறியுள்ளனர். இந்நிகழ்வுகள் புறப்பாடல்களில் இடம்பெற்றுள்ளன. புறப்பாடல்களில் இயற்கைக்கு மீறிய செய்திகள் கூறப்படவில்லை. சங்க கால வரலாற்றைத் தொகுப்பதற்கு, சங்கப் புறப்பாடல்கள் ஓரளவுக்குத் துணை நிற்கின்றன. அரசர்கள் தமக்குள் போரிட்டுக் கொண்டாலும் புலவர்களைப் பெரிதும் மதித்துள்ளனர். யாருமே தொட அஞ்சும் முரசு கட்டிலில் ஏறிப்படுத்து உறங்கிய மோசிகீரனார் என்னும் புலவரைத் தண்டிக்காது, அவர் தூங்கி எழுகின்றவரை கவரி கொண்டு அவருக்கு விசிறினான் சேரமன்னன் தகடூர் எறிந்த பெருஞ்சேரல் இரும்பொறை என்று புறநானூறு கூறுகிறது.

அரசன் கோப்பெருஞ்சோழன் மேல் நட்புக் கொண்டிருந்த காரணத்தால், அவன் வடக்கிருந்து உயிர் துறக்கும் நேரத்தில் புலவர் பிசிராந்தையாரும் அவனுடன் உயிர் துறந்தார் எனவும் செய்தி உண்டு. பேகன் என்னும் அரசன் தன் மனைவி கண்ணகியை விட்டு நீங்கி இன்னொருத்தியுடன் வாழ்ந்ததை மாற்றி, கண்ணகியுடன் சேர்த்து வைத்தனர் கபிலரும் பரணரும் என்ற செய்தி கூறப்படுகிறது. இவ்வாறு அரச குடும்பங்களின் துன்ப நிகழ்வுகளிலும் புலவர்கள் பங்கு கொண்டு செயல்பட்டமை குறித்த செய்திகள் புறநானூற்றில் உண்டு. மேலும் மலையமான் திருமுடிக்காரியின் சிறு குழந்தைகளைச் சோழன் குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளிவளவன் யானையின் காலில் இட்டு மிதிக்கச் செய்ய முற்பட்டபோது கோவூர்கிழார் கூறியதால்

அக்குழந்தைகள் காப்பாற்றப்பட்டனர் என்ற செய்தியும் புறநானூற்றில் இருக்கிறது.

குறிப்பு

**உங்கள் முன்னேற்றத்தைச் சரிபார்க்கவும்**

1. மாங்குடி மருதன் என்பவர் யார்?
2. கல்தோன்றி மண்தோன்றாக் காலத்தே... மூத்தகுடி“ என்று கூறிய நூல் எது?
3. முச்சங்கங்கள் பற்றி விரிவாகக் கூறிய நூல் எது?

## 1.4 உங்கள் முன்னேற்றத்தைச் சரிபார்க்கும் வினாக்களுக்கான விடைகள்

- மாங்குடி மருதனார் பாண்டியன் தலையாலங்கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியனின் சங்கத்தில் இருந்த தலைமைப் புலவர்.
- புறப்பொருள் வெண்பாமாலை
- இறையனார் களவியல் உரை

## 1.5 சுருக்கவுரை

- உலக மொழிகளில் முதன்மை மொழிகளுள் ஒன்றாகக் கருதப்படும் தமிழ்மொழி 2500 ஆண்டு காலப் பழைய இலக்கியங்களைக் கொண்டது என்பதை நாம் அறிந்து கொண்டோம்.
- தமிழ் வளர்ப்பதற்குப் பாண்டிய மன்னர்கள் ஓர் அமைப்பினை ஏற்படுத்தி வைத்திருந்தனர் என்பதையும், அவ் அமைப்பிற்குப் பிற்காலத்தில் சங்கம் என்ற பெயர் வழங்கப்பட்டது என்பதையும் தெரிந்து கொண்டோம்.
- அக்காலத்தில் புலவர்கள் பாடிய பாடல்கள் அகப்பாடல்கள், புறப்பாடல்கள் என்று பிரித்து அமைக்கப்பட்டன என்பதையும் புரிந்து கொண்டோம்.
- சங்கப் பாடல்கள் எட்டுத்தொகை நூல்கள் என்றும், பத்துப்பாட்டு என்றும் பிரிக்கப்பட்டமையை நாம் அறிந்து கொண்டோம்.
- சங்ககால வாழ்வியலையும், சங்க இலக்கிய யாப்பு, சங்க இலக்கியத்தில் உவமைகள் ஆகியவை பற்றியும் தெரிந்து கொண்டோம்.

## 1.6 முக்கிய கருத்துப்படிமங்கள்

- சங்க கால இலக்கியங்கள் எட்டுத்தொகை, பத்துப்பாட்டு, பதிணென்கீழ்கணக்கு நூல்கள்
- சங்ககால பாடல்கள் அகப்பாடல்கள் மற்றும் புறப்பாடல்கள்

## 1.7 சுயமதிப்பீட்டு பயிற்சி வினாக்கள்

**குறுகிய வினாக்களுக்கு விடையளிக்கவும்**

1. எட்டுத்தொகை நூல்களைப் பற்றிக் குறிப்பிடவும்?
2. முச்சங்கம் சிறு குறிப்பு வரைக?

**விரிவான வினாக்களுக்கு விடையளிக்கவும்**

1. சங்கப் பாடல்கள் விவரிக்கவும்?
2. சங்கால இலக்கியங்கள் பற்றி கட்டுரை வரைக?

குறிப்பு

## 1.8 மேலும் படிக்க


- ஐயங்கார்,சீனிவாசஃ. வு (2001), *தமிழர்களின் வரலாறு: ஆரம்ப காலத்திலிருந்து 600 கி.பி வரை.* டெல்லி
- கிருஸ்ணசுவாமி.அ, (1977) விஜயநகரபப் பேரரசின் வரலாறு (கிபி1525 வரை) தமிழ்நாட்டுப் பாடநூல் நிறுவனம், அண்ணாமலைநகர்.
- சர்மா,சு.ளு. (2006). *பண்டைய இந்தியாவின் முந்தைய காலம்.* ஆக்ஸ்ஃபோர்ட் யுனிவர்சிட்டி பிரஸ்.
- சாஸ்திரி, ராமசாமி. (2002) *தமிழர்கள்: மக்கள், அவர்களின் வரலாறு மற்றும் கலாச்சாரம்.* புதுடெல்லி, காஸ்மோ பப்ளிகேஷன்ஸ்
- சிராஜீத்தின, (2010), *தமிழ்நாட்டு வரலாறு (கி.பி. 1987 வரை),* பாவை பப்ளிகேசன், சென்னை
- தேவநேயப்பாவணர். (1992) *பண்டைத் தமிழர் நாகரிகமும் பண்பாடும்*, கழக வெளியீடு சென்னை
- மாதவன்,சித்ரா, (2005), *தமிழ்நாட்டின் வரலாறு மற்றும் கலாச்சாரம்: தொகுதி-1 (கி.பி.1310 வரை).* டெல்லி

# அலகு II

## திருவள்ளுவர்- ஔவையார்- தொல்காப்பியர்



## அலகு II திருவள்ளுவர்



## 2.0 முன்னுரை

தொல்காப்பியம் தமிழ் மொழியின், தமிழர்களின் சிறப்பிற்கும் பெருமைக்கும் சான்றாகத் திகழும் இலக்கண நூலாகும். காலத்தால் முந்திய தமிழ்ச் சமுதாயப் பண்பாடுகளை நமக்கு எடுத்துக்காட்டும் கருவூலமாகத் தொல்காப்பியம் அமைகின்றது. தொன்மையான காப்பியக்குடியில் பிறந்தவரான தொல்காப்பியரால் இயற்றப்பட்ட நூலாதலின் இப்பெயர் பெற்றது என்பர்.

## 2.1 நோக்கம்

- திருவள்ளுவர் இயற்றிய திருக்குறளின் கருத்துக்களைப் பற்றி அறிந்துக் கொள்ள முடிகின்றது
- ஔவையார் பெரும் சிறப்பு வாய்ந்த தமிழ்ப்புலவி என்பதைப் பற்றி அறிந்துக் கொள்ள முடிகின்றது
- காப்பியக் குடியில் பிறந்த தொல்காப்பியரைப் பற்றி அறிந்துக் கொள்ள முடிகின்றது

## 2.2 திருவள்ளுவர்



அகர முதல எழுத்தெல்லாம் ஆதி பகவன் முதற்றே உலகு' என்று தொடங்கி, ஈரடி குறளில் உலகத் தத்துவங்கள் அனைத்தையும் 'திருக்குறள்' என்னும் உன்னதப் படைப்பில் மக்களுக்கு எடுத்துச் சொன்னவர், திருவள்ளுவர். உலகளாவிய தத்துவங்களைக் கொண்ட திருக்குறளைப் படைத்து, உலக இலக்கிய அரங்கில் தமிழ்மொழிக்கென்று ஓர் உயர்ந்த இடத்தை நிலைப்பெற செய்தவர். 1330 குறள்களை தந்து அதன் மூலம் மக்களுக்கு தன நன்னெறிகளை குறிப்புணர்த்தியவர் தான் திருவள்ளுவர். மக்கள் தங்கள் வாழ்க்கையில் எவ்வாறு நடந்துகொள்ளவேண்டும் என்பதனை தனது 133 அதிகாரரங்கள் மூலம் தெளிவாக பல நூறு வருடங்களுக்கு முன்னரே இந்த உலகிற்கு தெரிவித்து சென்றவர் என்ற பெருமை திருவள்ளுவருக்கு உண்டு. இன்றும் "உலக பொதுமறை" என்று அனைத்து மக்களாலும் ஏற்று கொள்ளப்பட்ட ஒரு நூலினை நமது தமிழ் இனத்தினை சேர்ந்த ஒருவர் எழுதியுள்ளார் என்பது தமிழர்களாகிய நமக்கு மிகப்பெரும் பெருமை என்றே கூறலாம்.

### 2.2.1 திருவள்ளுவர் பிறப்பு

திருவள்ளுவரது பெயர் பெற்றோர் மற்றும் பிறப்பிடம் ஆகிய அனைத்தும் இன்று வரை உறுதிசெய்யப்படவில்லை. இருந்தாலும் அவர் கி.பி. 2ஆம் நூற்றாண்டில் பிறந்திருக்க கூடும் என்று ஆய்வு முடிவுகள் தெரிவிக்கின்றன. மேலும் அவர் தற்போதைய சென்னையில் உள்ள "மயிலாப்பூர்" பகுதியில் பிறந்து வளர்ந்தவர் என்றும் ஒரு தகவல் உண்டு . மேலும் காவேரிபக்கம் பகுதியில் வாழ்ந்த மார்கசெயன் என்பவர் திருவள்ளுவரது கவித்திறனை நேரில் கண்டு பூரித்து தனது மகளான வாசுகியை திருவள்ளுவருக்கு மணமுடித்து தந்ததாகவும் கூறப்படுகிறது.

- பெயர் – திருவள்ளுவர்
- பிறந்த வருடம் – கி .பி. 2ஆம் நூற்றாண்டு (சரியான ஆதாரம் இல்லை)
- பிறந்த இடம் – மயிலாப்பூர் (சரியான ஆதாரம் இல்லை)
- மனைவியின் பெயர் – வாசுகி
- வசித்த இடம் – மயிலாப்பூர்

### 2.2.2 திருக்குறள் என்னும் அற்புத படைப்பு

"வள்ளுவன் தன்னை உலகிற்கு தந்து வான்புகழ் கொண்ட தமிழ்நாடு" என்று அனைவராலும் போற்றப்படும் அளவிற்கு தமிழுக்கு புகழை சேர்த்த இவரது மிகச்சிறந்த படைப்பு இந்த திருக்குறள் எனும் நூல். திருக்குறளை படிக்காத தமிழன் இல்லை என்று கூட கூறலாம். அந்த அளவிற்கு தமிழ் நன்னெறி நூலாக உள்ளது . திருக்குறளின் உன்னதத்தினை உணர்ந்த இதனை "ஜி.யு. போப்" என்பவர்

குறிப்பு

ஆங்கிலத்தில் மொழி பெயர்த்துள்ளார் என்பது குறிப்பிடத்தக்கது. ஈரடிகளில் உலகின் தத்துவத்தினை தெள்ளத்தெளிவாக கூறி அனைவரும் எளிமையாக புரிந்து கொள்ளும் அளவிற்கு தன் கருத்துகளை அதில் முத்து முத்தாக பொறித்துள்ளார். மொத்தம் 3 பிரிவுகளாக பிரிக்கப்பட்ட இந்த நூல் முறையே "அறத்துப்பால்", "பொருட்பால்" மற்றும் "காமத்துப்பால்" என்று வகைப்படுத்தப்பட்டுள்ளது.

- அறத்துப்பால் - 38 அத்தியாயங்கள்
- பொருட்பால் - 70 அத்தியாயங்கள்
- காமத்துப்பால் - 25 அத்தியாயங்கள்

**அறத்துப்பால்**: முதல் பிரிவான அறத்துப்பாலில் 38 அதிகாரங்கள் தொகுக்கப்பட்டுள்ளது. அதில் அறம் சார்ந்த வாழ்வியல் கருத்துக்கள் முதல் இல்லறம் போன்ற பல கருத்துக்களை கூறி அறத்தின்படி எவ்வாறு வாழ்க்கையினை முறைப்படுத்தி கொண்டு செல்லவேண்டும் என்று கருத்துகளை விவரித்து உள்ளார்.

**பொருட்பால்:** இரண்டாவது பாலான பொருட்பாலில் 70 அதிகாரங்கள் இடம்பெற்றுள்ளன. உட்பிரிவுகள் மூலம் அரசியல், ஊழியல் மற்றும் துறவறிவியல் போன்ற கருத்துக்களை இடம்பெற வைத்துள்ளார்.

**காமத்துப்பால்**: மூன்றாம் பாலான காமத்துபாலில் களவியல் மற்றும் கற்பியல் என்ற உட்பிரிவுகள் மூலம் காதல், இன்பம் மற்றும் இல்லறம் குறித்த கருத்துக்களை அவர் தெரிவித்துள்ளார். இந்த மூன்று வகைப்பாட்டின் மூலம் வாழ்வியல் கருத்துக்களை கூறி வாழ்வின் உன்னதத்தை கூறி மக்களை நெறிப்படுத்திய புலவர் திருவள்ளுவர் உலகத்திற்கு அழியா பொக்கிஷமான திருக்குறளை தந்து சென்றார்.

### 2.2.3 திருக்குறளின் சிறப்பு பெயர்கள்

திருக்குறள் ஒரு பொக்கிஷ நூலாக இன்றுவரை கருதப்படுகிறது. அவற்றிற்கு பல சிறப்பு பெயர்கள் உள்ளன . அதனை கீழே குறிப்பிட்டுள்ளோம்.

- உலக பொதுமறை
- முப்பால் ஈரடி நூல்
- உத்திரவேதம்
- தெய்வநூல்
- தமிழ் மறை
- பொய்யாமொழி
- வாயுறை வாழ்த்து
- திருவள்ளுவம்

**திருவள்ளுவரின் சிறப்புப்பெயர்கள்** : திருக்குறளினை தந்த திருவள்ளுவருக்கும் பல சிறப்பு பெயர்களை பலரும் அளித்தனர். அதில் முக்கியமானவைகளை கீழே தொகுத்து உள்ளோம்.

- பொய்யில்புலவர்
- தெய்வபுதல்வர்
- முதற்பாவலர்
- செந்நாப்போதானார்
- தேவர் நாயனார்
- பெருநாவலர்

**திருவள்ளுவரின் இறப்பு:** தமிழ் புலவரான திருவள்ளுவர் இறப்பு குறித்து இன்றுவரை அதிகாரபூர்வமான குறிப்புக்கள் இல்லை. ஆனால் , மயிலாப்பூரில் பிறந்து வளர்ந்த இவர் ஔவையர் உதவியுடன் மதுரையில் உள்ள தமிழ்ச்சங்கத்தில் திருக்குறளினை அரங்கேற்றினார் என்றும் நம்பப்படுகிறது.

### 2.2.4 திருவள்ளுவரின் நினைவுச்சின்னங்கள்

- வள்ளுவரின் மண்டபம் – வள்ளுவர் கோட்டம்
- வள்ளுவரின் சிலை – கன்னியாகுமரி
- சிற்பி – கணபதி ஸ்தபதி
- வள்ளுவரின் கோயில் – மயிலாப்பூர்

**வள்ளுவர் கோட்டம்** – இன்றைய சென்னையில் உள்ள ஒரு முக்கிய பகுதி ஆகும் இந்த வள்ளுவர் கோட்டத்தில் திருவள்ளுவருக்காக ஒரு மணிமண்டபம் அமைக்கப்பட்டுள்ளது. அந்த குறள் மண்டபத்தில் திருக்குறளின் அனைத்து குறள்களும் பதிக்கப்பட்டுள்ளன. இன்றுவரை தமிழக அரசு அதனை சிறப்பாக பேணிக்காத்து வருகிறது.

**வள்ளுவரின் சிலை** – தமிழக மற்றும் இந்திய தேசத்தின் கடைக்கோடியான கன்னியாகுமரியில் முக்கடல் சங்கமிக்கும் இடத்தில் இவரது திருஉருவ சிலை நிருவப்பட்டுள்ளது. அவரது 133 அதிகாரிங்களின் நினைவாக அந்த சிலையானது 133அடிகள் உயரத்தில் அமைக்கப்பட்டுள்ளது. அந்த சிலையினை செய்த சிற்பியின் பெயர் கணபதி ஸ்தபதி.

**வள்ளுவரின் கோயில்** – திருவள்ளுவருக்காக அவரது பிறப்பிடமாக கருதப்படும் மயிலாப்பூரில் ஒரு கோயில் அமைக்கப்பட்டுள்ளது. இன்றுகூட அதனை நீங்கள் காண முடியும். அந்த கோவிலானது மயிலாப்பூர் முண்டக கன்னியம்மன் கோயில் அருகில் உள்ளது. மேலும் பல நாடுகளின் வள்ளுவரின் புகழினை உணர்ந்து பல சிலைகள் உள்ளன என்பதும் குறிப்பிடத்தக்கது.

## 2.3 ஔவையார்

குறிப்பு

ஔவையின் வாழ்க்கை வரலாற்றினை நோக்குங்கால், அவர் 12ம் நூற்றாண்டுக்கு முன்னர் தமிழகத்தில் வாழ்ந்தவர் என்று அறியப்படுகிறது. இவர் தந்தையார் பகவன் எனவும் தாய் ஆதி எனவும், அவர்களுக்கு ஏழாவது குழந்தையாக ஔவை பாணரகத்தில் அவதரித்ததாகவும் ஒரு குறிப்பு கானப்படுகிறது. ஆயினும் இவரின் படைப்புகளின் காலக்கட்டங்களை இன்ன பிற புலவர்களின் காலக்கட்டங்களோடு ஒப்பிட்டு நோக்குங்கால், ஔவை பிராட்டியார் காலத்தை வென்று வாழ்ந்தவர் என்று கணிக்க முடிகிறது. இக்கூற்றுக்கு வலு சேர்க்கும் விதமாக அரசன் அதியமான் நெடுமான் அஞ்சி ஔவைக்கு ஈந்த மரணத்தை வெல்லும் வல்லமை படைத்த அற்புத நெல்லிக்கனி கதையும் கூறப்படுகின்றது. இத்தமிழ் மூதாட்டியின் பெயர் சிறப்பினை நோக்குங்கால், அகர வரிசையில் பதினோராம் எழுத்தாகிய ”ஔ” எனும் எழுத்தில துவங்கும் ஔவை என்ற பெயர் அவ்வா என்ற சொல்லின் திரிபாக கருதப்படுகிறது. அதன் பொருள் மூதாட்டி அல்லது தவப்பெண் என்பதாகும் என்று பழந்தமிழ் அகராதி பகர்கிறது. அத்துடன் பிந்தையகாலத்தில் ஔவை எனும் சொல், வயது அல்லது அறிவாற்றல் ஆகியவற்றில் முதிர்ச்சி பெற்றவர்க்கு வழங்கப்படும் குறியீடாகவும் அமைந்துள்ளது. இதிலிருந்தே பெரும் சிறப்பு வாய்ந்த தமிழ்ப்புலவி ஆவார்.

சிரஞ்சீவியாக வாழ்ந்தவர் ஔவை என்று எண்ணப்பட்டாலும், வரலாற்று ஆசிரியர்களின் கூற்றின்படி மூன்று பெண்புலவர்கள் 12ம் நூற்றாண்டுக்கு முன் ஔவை எனும் பெயருடனும் ஒருமித்த குணாதிசயங்களோடும், புலமையோடும் வெவ்வேறு காலக்கட்டங்களில் தமிழகத்தில் வாழ்ந்தனர், கவி பாடிச் சென்றுள்ளனர் என்றும் தெரிவிக்கின்றன. மேற்குறிப்பிட்ட வரலாற்று ஆசிரியர்களின் கூற்றுப்படி முதலாம் ஔவை கடைச்சங்க காலத்தில் வள்ளுவர், நக்கீரர் போன்றோரின் காலக்கட்டத்தில் வாழந்ததாகவும், இரண்டாம் ஔவை பக்தி இலக்கியப் புலவர்களாகிய சுந்தரமூர்த்தி நாயனார், சேரமான் பெருமாள் நாயனார் ஆகியோர் காலத்திலும் மூன்றாமவர் கம்பர், புகழேந்தி, செயங்கொண்டார், சேக்கிழார், ஒட்டக்கூத்தர் போன்றோர் வாழ்ந்த காலத்திலும் வாழ்ந்தார் என்றும் சான்று பகர்கின்றனர்.இவையன்றி 14ஆம் நூற்றாண்டிலிருந்து 18ஆம் நூற்றாண்டுக்கு மத்தியிலான காலக்கட்டத்தில் மேலும் இரண்டு ஔவைகள் வாழ்ந்தனர் என்பது வரலாற்று ஆசிரியர்களின் கருத்தாகும். ஓர் ஔவை 14ஆம் அல்லது 15ஆம் நூற்றாண்டிலும் அடுத்தவர் 18ஆம் நூற்றாண்டிலும் வாழ்ந்ததாகவும் கூறப்படுகிறது. எனினும் இந்த இரு ஔவைகளின் வாழ்க்கைக் குறிப்புக்கள் முழுமையாகக் பெறப்படவில்லை.

ஔவையின் தோற்றப்பொலிவுப் பற்றி விவரிக்கையில் அறியப்படும் தகவல்கள் யாதெனில் ஔவை என்பவர் ஒரு விறலி

(அதாவது ஒரு பாடலின் பொருளை உணரும் வகையில் மெய்ப்பாடு தோன்ற ஆடிக்காட்டுபவள் விறலி என்று அழைக்கப்படுபவராவார்). இவர் மடப்பத்தன்மை பொருந்திய மடவரல். இவர் மைதீட்டிய கண்களும் வாட்டமான நெற்றியும் அமைந்தவராக அறியப்படுகிறார். மேலும் எடுப்பான இலுப்பில் அழகிய அணிகலன்களையும் அணிந்திருந்தார் என அறியப்படுகிறார். மனித வாழ்வுக்கேற்ற மகத்தான தத்துவங்களை வாரி வழங்கிய அவ்வையின் பொதுச் சிறப்பியல்புகள் என சில விசயங்கள் கூறப்படுவதுண்டு. அவையாவன ஔவையானவர் பிறவியிலேயே தமிழறிவுடன் பிறந்தவர், பெற்றோரிடத்தில் வளராதவர், பாணரகத்தில் வளர்ந்தவர், சிவபரத்துவம் தெளிந்தவர், வரகவித்துவம் வாய்க்கப்பெற்றவர்.இலௌகிகம்,வைதிகம் இரண்டும் தெரிந்தவர். உள்ளம்,உண்மை,மொழி ஆகியவற்றில் உயர்ந்தவர். அறம், பொருள், இன்பம், வீடு எனும் நான்கும் புரிந்தவர். தமிழ் நாடு முழுதும் திரிந்தவர். கோவலூரிலும் புல்வேளூரிலும் வெகுநாட்கள் வாழ்ந்தவர். பலரை பற்றி கவிபாடிப் பரிசு பெற்றவர். சிறியோராயினும், வறியோராயினும் தமக்கு பரிசு ஈந்தவரை பெரியோராய் மதித்துப் பாடியவர். பரிசு கொடுத்தாலும் பாட்டுக் கேட்டலிலும் பாராமுகம் காட்டியவரையும், பாடலருமை அறியா மூடரையும் வெறுத்துப் பாடியவர். மேற்கூறிய சிறப்பியல்புகள் அனைத்து ஔவைகளிலும் ஒருமித்து இருந்ததாகக் கூறப்படுகிறது.

### 2.3.1 ஔவையார் காலவரிசை (ஆறுபேர் கால வரிசை)

- **சங்க காலம்:** கி.பி. 2-ஆம் நூற்றாண்டுக்கு முன் பாடல்: அகம், புறம், நற்றிணை, குறுந்தொகை பாடல் பெற்றோர் :சேர சோழ பாண்டியர், நாஞ்சில் வள்ளுவன் முதலானோர்
- **இடைக்காலம்** கி.பி. 10-ஆம் நூற்றாண்டுக்கு முன் பாடல் பெற்றோர்: மூவேந்தர் அங்கவை சங்கவை மணம்
- **சோழர் காலம்:** 12-ஆம் நூற்றாண்டு பாடல்: ஆத்திசூடி, கொன்றை வேந்தன், நல்வழி, மூதுரை, அசதிக்கோவை பாடல் பெற்றோர்: சோழர், அசதி
- **சமயப் புலவர்**: 14-ஆம் நூற்றாண்டு பாடல்: ஔவை குறள், விநாயகர் அகவல் பாடல் பெற்றோர்: விநாயகர்
- **பிற்காலம் –** 1 16, 17-ஆம் நூற்றாண்டு
- **பிற்காலம் –** 2 17, 18-ஆம் நூற்றாண்டு பாடல்: பந்தன் அந்தாதி பாடல் பெற்றோர்: பந்தன் என்னும் வணிகன்

## 2.4 தொல்காப்பியர்

உலகிலுள்ள ஒவ்வொரு மொழியும் ஒரு சிறப்பான தன்மையைப் பெற்றிருக்கும். அச்சிறப்பு மக்கள், அவர்கள் வாழும் சூழலுக்கு ஏற்ப அமைந்திருக்கும். இதே வகையான நிலை தமிழுக்கும் இருந்தாலும் மற்ற மொழி பேசுவோர் சிந்தித்ததைவிடப் பழந்தமிழர் மேலும் அதிகமாகச் சிந்தித்துள்ளார்கள். இதனாலேயே மற்றைய உலக மொழிகளுக்கு இல்லாத பெருமை தமிழுக்கு இருக்கின்றது. இதனாலேயே உலக

குறிப்பு

அளவில் அறிஞர் பெருமக்கள் தமிழை உயர்தனிச் செம்மொழி என்று பாராட்டுகின்றார்கள். தமிழுக்கு அந்தப் பெருமை வருவதற்கான காரணம் மொழிக்கு மட்டுமல்லாமல் வாழ்வியலுக்கும் இலக்கணம் வகுத்ததேயாகும். பொதுவாக, உலகிலுள்ள பழமையான மொழிகளில் காலந்தோறும் இலக்கண நூல்கள் தோன்றியுள்ளன. மொழியின் எழுத்து, சொல், தொடர் பற்றியே அவை விளக்குகின்றன. இம்முறை தொல்காப்பியம் முதலான எல்லாத் தமிழ் இலக்கணங்களிலும் காணப்படுகின்றது. கூடுதலாகப் பழந்தமிழ்ச் சான்றோர் அவர்கள் வாழ்ந்த மண்ணுக்கும் மக்களுக்கும் இலக்கணம் எழுதி வைத்துள்ளனர்.

### 2.4.1 தொல்காப்பியர் வரலாறு

தொல்காப்பியர் அகத்தியரின் மாணாக்கர் பன்னிருவருள் ஒருவர் என்றும், காப்பியக் குடியில் பிறந்ததால் தொல்காப்பியர் எனப் பெயர் பெற்றார் என்றும் இறையனார் களவுரை காலத்திலிருந்து கூறப்படும் கருத்தாகும். நச்சினார்க்கினியர் இன்னொரு கருத்தைக் குறிப்பிடுகின்றார்: தொல்காப்பியரின் இயற்பெயர் திரணதூமாக்கினி என்றும், தந்தை பெயர் சமதக்கினி என்றும், தொல்காப்பியருடன் உடன் பிறந்தவர் பரசுராமர் என்றும் குறிப்பிடுகின்றார். நச்சினார்க்கினியரின் கருத்தை அனைவருமே ஐயங் கொண்டே பார்க்கின்றார்கள். உண்மையான வரலாறு இல்லாமையால் தொல்காப்பியரைப் போலப் பல சங்க காலப் புலவர்களும் கற்பனைக் கடலில் மிதக்கின்றார்கள்

### 2.4.2 தொல்காப்பியர் காலம்

தொல்காப்பியரின் வரலாற்றைப் போன்றே அவருடைய காலமும் இன்னும் ஆய்வுக்கு உரியதாகவே திகழ்கின்றது. இது எதிர்காலத்திலும் தொடர்ந்து கொண்டிருக்கும். அறிஞர்கள் அவரவர் சிந்தனைக்கு ஏற்பக் குறிப்பிடுகின்றார்கள். அனைவரின் கருத்துக்களையும் ஏற்றுக்கொள்ளவும் முடியாது ஒதுக்கிவிடவும் முடியாது. தொல்காப்பியம் தமிழுக்கும் கிடைத்துள்ள முதல் இலக்கண நூல் தொல்காப்பியரின் காலம் மூவாயிரம் ஆண்டுகளுக்கு முற்பட்டது என்பதைப் பலரும் ஏற்றுக் கொள்கின்றார்கள்.

தொல்காப்பியர் எழுத்ததிகாரம், சொல்லதிகாரம் என்னும் இரண்டு அதிகாரங்களில் எழுத்து, சொல், தொடர் என்னும் மொழி இலக்கணங்களை விளக்குகின்றார். தொல்காப்பியப் பொருளதிகாரத்தில் பழந்தமிழ் மக்களின் அக, புற வாழ்வியலை மிகவும் தெளிவாக வரையறை செய்து விளக்குகின்றார். இவ்வகையான ஒரு வாழ்வியல் இலக்கணம் உலகில் வேறு எந்த மொழியிலும் இல்லை எனத் தமிழ் அறிந்த உலக அறிஞர்கள் குறிப்பிடுகின்றார்கள். தமிழ் மொழிக்குத் தற்போது கிடைத்துள்ள தரவு அடிப்படையில் பார்க்கும்போது ஒரு நீண்ட வரலாறு இருக்கின்றது. தொல்காப்பியமே தமிழுக்குக் கிடைத்துள்ள முதல் இலக்கண நூலாகும். பத்துப்பாட்டு, எட்டுத் தொகையும் தொன்மையான இலக்கியங்கள் ஆகும். இந்நூல்கள்வழி ஒரு

குறிப்பு

செழுமையான இலக்கண - இலக்கிய மரபை அறிந்துகொள்ள முடிகின்றது, இவ்வகையான ஒரு செழுமை கிடைத்துள்ள நூல்களில் இருப்பதற்குக் காரணம் அவற்றுக்கு முன் ஒரு செழுமையான மரபு இருந்ததேயாகும்.

தமிழ் இலக்கியங்கள் வழியும் தொல் பொருட் சான்றுகள் வழியும் ஆழிப் பேரலையால் பழந் தமிழகத்தின் தெற்கிலும் கிழக்கிலும் நிலப்பகுதி கடல் கொண்டதை அறிய முடிகின்றது. பழந்தமிழர் மூன்று சங்கங்களை நிறுவித் தமிழை வளர்த்துள்ளார்கள். முதல் இரண்டு சங்கங்கள் இருந்த பகுதி கடல் கோளால் அழிய அக்காலங்களில் தோன்றிய இலக்கண இலக்கியங்களும் அழிந்து விட்டன. தொல்காப்பியத்தில் என்ப, மொழிப, என்மலர் எனக் குறிக்கப்படும் சொற்களைக் கொண்டே தமிழில் இப்போது கிடைத்துள்ளவற்றுக்கு முன்னுள்ள மரபை அறிந்துகொள்ளலாம்.

தொல்காப்பியத்தின் காலம் பற்றி அறிஞர் களிடையே வேறுபட்ட கருத்துக்கள் காணப்படுகின்றன. கி.பிக்கு முந்தையது என்று பல அறிஞர்களும் பிந்தையது என்று சிலரும் குறிப்பிடுகின்றார்கள். காலக் கணக்கில் வேறுபட்ட கருத்துக்கள் இருந்தாலும் தோராயமாகத் தொல்காப்பியம் மூவாயிரம் ஆண்டுகளுக்கு முன் தோன்றி இருக்க வேண்டும் என்பதைப் பெரும்பாலான அறிஞர்கள் ஏற்றுக் கொள்கின்றார்கள். தமிழுக்குக் கிடைத்துள்ள முதல் இலக்கண நூல் எனப் போற்றப்படும் தொல்காப்பியம் காலந்தோறும் போற்றிப் பாதுகாக்கப்பட்டுள்ளது. வாய்மொழி மரபாகவும் சுவடிகள் வழியாகவும் பாதுகாக்கப்பட்டிருக்கின்றது. உரைகள் தோன்றிய பிறகு தொல்காப்பியத்தின் பெருமை மேலும் பரவலாக்கப்பட்டுள்ளது. அச்சுக்கலை வளர்ந்தபிறகு தமிழறிஞர்கள் உரையோடு கூடிய தொல்காப்பியத்தையும் சங்க இலக்கியங்களையும் பிற இலக்கிய, இலக்கணங்களையும் ஆர்வத்தோடு பதிப் பித்துள்ளனர். இவ்வகையான ஆன்றோர்களின் அரும் பணியாலேயே தமிழ் இன்று உலகோர் அறிந்து போற்றப்படும் நிலையைப் பெற்றுள்ளது.

**உங்கள் முன்னேற்றத்தைச் சரிபார்க்கவும்**

1. உலக பொதுமறை என்றால் என்ன?
2. தமிழ்ப்புலவி என்பவர் யார்?
3. தொல்காப்பியரின் இயற்பெயர் என்ன?

## 2.5 உங்கள் முன்னேற்றத்தைச் சரிபார்க்கும் வினாக்களுக்கான விடைகள்

1. உலக பொதுமறை என்பது திருக்குறள் ஆகும்.
2. தமிழ்ப்புலவி என்பவர் ஔவையார் ஆவார்.
3. தொல்காப்பியரின் இயற்பெயர் திரணதூமாக்கினி ஆகும்.

குறிப்பு

## 2.6 சுருக்கவுரை

- திருவள்ளுவர் இயற்றிய திருக்குறளின் கருத்துக்களை உலகமே வியக்கும் அளவுக்கு உயர்ந்தது.
- ஔவையார் பெரும் சிறப்பு வாய்ந்த தமிழ்ப்புலவி ஆவார்
- காப்பியக் குடியில் பிறந்த தொல்காப்பியரின இலக்கணமானது சிறப்பு வாய்ந்தது ஆகும்

## 2.7 முக்கிய கருத்துப்படிமங்கள்

- திருக்குறள்
- தொல்காப்பியம்
- தமிழ்ப்புலவி

## 2.8 சுயமதிப்பீட்டு பயிற்சி வினாக்கள்

**குறுகிய வினாக்களுக்கு விடையளிக்கவும்**

1. திருவள்ளுவரின் வாழ்க்கை வரலாற்றைப் பற்றி சிறு குறிப்பு வரைக?
2. ஔவையாரைப் பற்றி மதிப்பிடுக?

**விரிவான வினாக்களுக்கு விடையளிக்கவும்**

1. தொல்காப்பியரைப் பற்றி விளக்கவும்?
2. திருக்குறளின் சிறப்புகளைப் பற்றி கட்டுரை வரைக?

## 2.9 மேலும் படிக்க


- ஐயங்கார்,சீனிவாசீ. வு (2001), *தமிழர்களின் வரலாறு: ஆரம்ப காலத்திலிருந்து 600 கி.பி வரை.* டெல்லி
- கிருஸ்ணசுவாமி.அ, (1977) விஜயநகரபப் பேரரசின் வரலாறு (கிபி1525 வரை) தமிழ்நாட்டுப் பாடநூல் நிறுவனம், அண்ணாமலைநகர்.
- சர்மா,சு.ளு. (2006). *பண்டைய இந்தியாவின் முந்தைய காலம்.* ஆக்ஸ்.ஃபோர்ட் யுனிவர்சிட்டி பிரஸ்.
- சாஸ்திரி, ராமசாமி. (2002) *தமிழர்கள்: மக்கள், அவர்களின் வரலாறு மற்றும் கலாச்சாரம்.* புதுடெல்லி, காஸ்மோ பப்ளிகேஷன்ஸ்
- சிராஜீத்தின, (2010), *தமிழ்நாட்டு வரலாறு (கி.பி. 1987 வரை),* பாவை பப்ளிகேசன், சென்னை
- தேவநேயப்பாவணர். (1992) *பண்டைத் தமிழர் நாகரிகமும் பண்பாடும்,* கழக வெளியீடு சென்னை
- மாதவன்,சித்ரா, (2005), *தமிழ்நாட்டின் வரலாறு மற்றும் கலாச்சாரம்: தொகுதி-1 (கி.பி.1310 வரை).* டெல்லி

# அலகு III
## இளங்கோவடிகள் - சமூகம் மற்றும் அரசியல் எண்ணங்கள்

குறிப்பு

## அலகு III இளங்கோவடிகள்



## 3.0 முன்னுரை

சிலம்பு காரணமாக விளைந்த கதை ஆனதால் சிலப்பதிகாரம் ஆயிற்று. இந்நூல் தமிழில் எழுதப்பட்ட ஐம்பெருங் காப்பியங்களில் ஒன்று. இந்நூல் "பாட்டிடையிட்ட தொடர்நிலைச் செய்யுள்" எனவும் வழங்கப்படுகிறது. இக்காப்பியத்தில் இயல், இசை, நாடகம் என்னும் மூன்றனையும் காணலாம். கி.பி. இரண்டாம் நூற்றாண்டில் எழுதப்பட்டது என்பர். ஏனைய நூல்கள் அரசனையோ தெய்வங்களையோ பாட்டுடைத் தலைவனாகக் கொண்டிருக்க சிலப்பதிகாரம் கோவலன் என்ற குடிமகனைப் பாட்டுடைத் தலைவனாகக் கொண்டதால் இதனை "குடிமக்கள் காப்பியம்" என்றும் கூறுவர். இன்பியலும் துன்பியலும் கலந்து எழுதப்பட்ட இந்நூலை இயற்றியவர் இளங்கோ அடிகள் என்பவராவார். இவர் புகழ் பெற்ற சேரமன்னன் செங்குட்டுவனுடைய தம்பி எனக் கருதப்படுகின்றது.

## 3.1 நோக்கம்

- இளங்கோவடிகள் வாழ்க்கை வரலாற்றினைப் பற்றி அறிந்துக்கொள்ள முடிகின்றது
- இளங்கோவடிகள் இயற்றிய சிலப்பதிகாரத்தைப் பற்றி அறிந்துக்கொள்ள முடிகின்றது

- சிலப்பதிகாரத்தில் மக்களின் வாழ்க்கை நெறிமுறைகள் மற்றும் சமதாயத்தைப் பற்றி அறிந்துக்கொள்ள முடிகின்றது



## 3.2 இளங்கோவடிகள்

யாமறிந்த புலவரிலே கம்பனைப்போல், வள்ளுவன்போல், இளங்கோவைப் போல் பூமிதனில் யாங்கணுமே கண்டதில்லை என்று பாரதியாரால் புகழப்பெற்ற முப்பெரும் புலவருள் ஒருவர் இளங்கோ. இளங்கோ சேரவேந்தன் சேரலாதனின் இளைய மகன் மூத்தவன் சேரன் செங்குட்டுவன். இவர் இளவரசன் ஆதலால் இளங்கோ என அழைக்கப்பட்டார் துறவு பூண்டதால் அடிகள் என்ற சிறப்புப் பெயருடன் இளங்கோ அடிகள் எனச் சிறப்பிக்கப் பெற்றார். சேரன் செங்குட்டுவன் கண்ணகிக்குக் கோயில் எழுப்பி விழா நடத்தியபோது, தெய்வமாகிய கண்ணகி தேவந்திமேல் வந்து தோன்றி அங்கு வந்திருந்த இளங்கோவடிகளை நோக்கி அவரது உயர் பண்பைப் பாராட்டிப் பேசுகிறாள். அதுமட்டுமன்றி, இளங்கோவடிகள் சமண சமயத்தைச் சார்ந்தவர் என்றாலும், அவர் எல்லாச் சமயத்தையும் சமமாக மதித்தவர். எந்தவிடத்தும் அவர் சமயக் காழ்ப்புணர்ச்சியை வெளிப்படுத்தவில்லை. பிற சமயத்தை, சமயத்தினரைப் பழித்ததில்லை. மாறாகப் பிற சமயத்தை - சமயக் கணக்கரைப் போற்றியுள்ளார்.

### 3.2.1: சிலப்பதிகாரம்

சிலப்பதிகாரம் சிலம்பு- அதிகாரம் என்ற இரு சொற்களால் ஆனது. சிலம்பு காரணமாக விளைந்த கதை ஆனதால் சிலப்பதிகாரம் ஆயிற்று. ஐம்பெருங்காப்பியங்களில் ஒன்றான இந்நூல் மாபெரும் கவியான இளங்கோ அடிகளால் தமிழில் இயற்றப்பட்டது. இந்நூல் சங்க காலத்தின் பின் வந்த நீதி நூல் காலத்தில் காலக்கிரம அட்டவணையின்படி 5-6 ஆம் நூற்றாண்டுகளில் இளங்கோ அடிகளால் இயற்றப்பட்ட காவியமாகும். இது இன்பியலும் துன்பியலும் கலந்து எழுதப்பட்ட காவியம். இப்படைப்பு, புகார்க் காண்டம், மதுரைக் காண்டம் மற்றும் வஞ்சிக் காண்டம் என மூன்று காண்டங்களை உள்ளடக்கி, 5270 கவிதைவரிகளால் கதை இயம்புவதாய் அமையப்பெற்றுள்ளது. இக்காப்பியத்தில் இயல், இசை, நாடகம் என்னும் மூன்றனையும் காணலாம்.

கி. பி. இரண்டாம் நூற்றாண்டில் எழுதப்பட்டது என்பர். ஏனைய நூல்கள் அரசனையோ தெய்வங்களையோ பாட்டுடைத் தலைவனாகக் கொண்டிருக்க சிலப்பதிகாரம் கோவலன் என்ற குடிமகனைப் பாட்டுடைத் தலைவனாகக் கொண்டதால் இதனை “குடிமக்கள் காப்பியம்“ என்றும் கூறுவர். சேர , சோழ, பாண்டிய ராஜ்யங்களை உட்படுத்துகையும் , வரலாற்று சம்பவங்களை குறிப்பு சுட்டுகுகையுமாய் அமையப்பெற்றுள்ளது இந்நூலின் சிறப்பாகும் . தமிழ் கலாச்சாரம், அதின் பல்வேறு மதங்கள், பண்பு, மரபு, குடிசிறப்பு, ஆட்சி,கொடை, நகர், ஆடற்கலை, பாடற்கலை

குறிப்பு

முதலியவைகளைப் பற்றிய கவித்துவமான ஒரு விரித்துரை நிரூபணம் இந்நூல் என்றால் அது மிகையாகாது.

**சிலப்பதிகாரம் என்ற பெயர் வந்ததன் காரணம்:** சிலம்பு ஓர் அணிகலன் மகளிர் காலில் அணிவது. சிலப்பதிகாரத்தில் இருவர் சிலம்புகள் இடம் பெறுகின்றன. கண்ணகி அணிந்த சிலம்பு ஒன்று அதன் உள்ளீடு மாணிக்கம் பாண்டிமாதேவி அணிந்த சிலம்பு ஒன்று அதன் உள்ளீடு முத்து. இவ் இரு சிலம்புகளால் விளைந்த பூசலே காப்பியக் கதை. இவ்விருவர் சிலம்பும் அழகில், தரத்தில், புற அமைப்பில் ஒரே மாதிரியாக அமைந்ததே இதற்குக் காரணம். எனவேதான் சிலம்பால் விளைந்த அதிகாரம் சிலப்பதிகாரம் ஆயிற்று கண்ணகி சிலம்பு தான் காப்பியப் பெயரில் இருப்பது என்பது பலரும் ஏற்கும் கருத்து. கண்ணகியே காப்பியத் தலைவி அவள் கோவலனிடம் தன் சிலம்புகளைக் கொடுத்து இருக்காவிட்டால், இந்தக் கதை மதுரை வரை வந்திராது என்பதுக் குறிப்பிட்த்தக்கது

### 3.2.2 சிலப்பதிகாரத்தின் தோற்றம்

சிலப்பதிகாரம் கி.பி. இரண்டாம் நூற்றாண்டில் எழுந்த காப்பியம் என்பது பலரால் ஏற்றுக் கொள்ளப்பட்ட கருத்து. இதற்கான அடிப்படைச் சான்றுகளில் ஒன்று இளங்கோ சேரன் செங்குட்டுவனின் தம்பி என்பது. இச்செங்குட்டுவன் சங்க இலக்கியத்தில் ஒன்றான பதிற்றுப்பத்தில் பாடப் பட்டவன் இவன் காலம் கி.பி. இரண்டாம் நூற்றாண்டு. அடுத்த சான்று, வரந்தரு காதையில் இடம் பெறும் கண்ணகி வழிபாட்டில் இலங்கை வேந்தன் கயவாகு கலந்து கொண்டான் என்பது. இவன் காலமும் கி.பி. இரண்டாம் நூற்றாண்டு என்பது இலங்கை வரலாற்றால் அறியப்படுகிறது. மூன்றாவதாகச் சிலப்பதிகாரம், மணிமேகலை ஆகிய இரு காப்பியங்களிலும் இடம்பெறும் பதிகங்களில் ''இளங்கோ சிலம்பு பாடச் சாத்தனார் கேட்டார்'' எனவும், ''சாத்தனார் மணிமேகலை பாட இளங்கோ கேட்டார்'' எனவும் கூறப்பட்டுள்ளன. இங்குக் குறிக்கப்பெறும் சாத்தனார் சங்க இலக்கியத்தில் இடம்பெறும் கூலவாணிகன் சீத்தலைச் சாத்தனார் ஆவார். இவற்றால் சிலப்பதிகாரம் கி.பி. இரண்டாம் நூற்றாண்டில் எழுந்த காப்பியம் என்பது உறுதி செய்யப்படுகிறது.

## 3.3 சமூகம் மற்றும் அரசியல் எண்ணங்கள்

பன்முகத்தன்மை கொண்ட நவீனத்துவத்துடன் விளங்கும் காப்பியம் சிலப்பதிகாரம் ஆகும். பல்வேறுபட்ட குடிமாந்தர்களின் வாழ்க்கை முறைமைகளைப் பிரதிபலிப்பது மட்டுமல்லாது பண்பாட்டுக்கூறுகளின் வடிவங்களையும் தன்னகத்தே பொதித்துள்ள கருவூலமாகத் திகழ்கிறது. அத்தகைய காப்பியத்தை எழுதிய இளங்கோ அரச மரபில் வந்தவர் என்பதோடு துறவு மேற்கொண்டவர் என்பதால் குறிப்பிடத்தக்க அம்சத்தை இக்காப்பியம் பெற்றிருக்கிறது. அன்றைய நிலையிலான அரசியல், பொருளாதாரம், சமூகம் ஆகியவற்றின்

நிலையிலிருந்து உணர்த்தி நீதி, அறம், ஊழ்வினை, துறவு போன்றவற்றை போதிக்கின்றனவாக அமைந்துள்ளன.

### 3.3.1 சமூகம்

தமிழ் மொழியின் தலைக் காப்பியமாக, பல புதுமைகளை மேற்கொண்டு இளங்கோவடிகள் படைத்த சிலப்பதிகாரம், ஒரு கதையைப் பின்னணியாகக் கொண்ட காவியமா அல்லது ஒரு இனத்தின் வரலாற்றை பேசும் சரித்திர நூல் என்ற பிரமிப்பு எற்படுவது இயற்கை. இங்கு தெய்வங்களக மானுடத்தை ஒட்டி ஏற்றம் பெறுகிறது. ஒரு கணவன் மனைவி கதை. கணவன் கலை உணர்வும் இசைப் புலமையும் நிறைந்தவன். மனைவியின் குணாதிசயங்களோ, பாரம்பரியமாகத் தமிழ் நாட்டுக்கே உரிய குடும்பக் கவுரவங்களை ஒட்டியே அமைந்தது. இசையிலும், நடனக் கலையிலும் வல்ல ஒரு கலையரசியிடம் கணவன் மனம் சென்றுவிட்டது. விதி விளையாடியது. கணவன் கொல்லப்பட்டான். மதுரை மாநகர் பற்றி எரிந்தது. மனைவி தெய்வமானாள் சான்றோர்கள் பலர் அந்த தெய்வத்தை போற்றினார்கள். மூன்று காண்டங்கள், முப்பது காதைகள், காவியம் கம்பீரமாகத் தமிழிலக்கிய ஆசாரவாசலில் கோபுரமாக பல நுண்குண்டுகளாக உலகை வியப்புக்குள்ளாக்கியுள்ளது. இதற்குள் இருப்பது ஒரு சமுதாய வரலாறு. காவிரி வரலாறு. காவிரி நாகரிக வரலாறு. இது சிலப்பதிகார வரலாறு என்பதுக் குறிப்பிடத்தக்கது

காவியங்களில் நாட்டுப்படலம் பாடுதல் ஒரு மரபு. நாட்டில் சிறந்து விளங்கும் பல்வேறு வளங்கள் இப்பகுதியில் விரிவாக பேசப்படும். சிலப்பதிகாரத்தில் இந்திர விழா ஊர் எடுத்த காதையில் சோழ வள நாட்டின் சிறப்பியல்புகள் பேசப்படுகின்றன. காவிரிப் பூம்பட்டினத்தின் இருபெரும் பகுதிகளான மருவூர்ப் பாக்கம், பட்டினப் பாக்கம், என்னும் பெரும் பிரிவுகளில் சோழ நாட்டு வணிகவளம், கட்டட அமைப்பு, தொழில்வளம் ஆகியவற்றுடன் அந்நாட்டில் நீதி தவறாத ஆட்சிக்கு ஆதாரமாக அமைந்துள்ள ஐவகை மன்றங்களின் சிறப்பு, ஒரு நாகரிக மக்களின் வரலாறு புதைந்து காணப்படுகிறது. நாளங்காடி அல்லங்காடி பெருமைகள் நாட்டின் வர்த்தக சிறப்பை காட்டுகின்றன. சோழ நாட்டின் தலைநகர் காவிரிப் பூம்பட்டினத்தின் அமைப்பு, நகர் நிர்மாணக் கலையில் தமிழரது கூர்மையான திறமையை எடுத்துக்காட்டுகிறது. இப்பெருநகர் இரண்டு பகுதிகளைக் கொண்டது. மருவூர்ப் பாக்கம், பட்டினப் பாக்கம் இரண்டும் சேர்ந்து ட்வின் சிட்டி என்ற பெருமையைப் பெறுகின்றன.

**மருவூர்ப் பாக்கம்:** சிலப்பதிகாரம் இந்திர விழா ஊர் எடுத்த காதையில் 33 வரிகளில் ஆசிரியர் இளங்கோவடிகள் மருவூர்ப் பாக்கத்தின் அமைப்பைக் கூறுகிறார். கடற்கரை ஓரக்குடியிறுப்புகள் பெரிதாகவும், கவர்ச்சியாகவும் கட்டப்பட்டுள்ளன. ஒரு பெரிய வணிகப் பகுதியாதலால், பாதுகாப்பு மட்டுமல்லாது, மானின் கண்கள் போன்ற துளைகளை அமைத்து நல்ல காற்றோட்டமுள்ளதாக இவை

அமைந்துள்ளன. இங்கு யவனர்களுக்கான இருப்பிடங்களும் உண்டு. வரலாற்று ஆசிரியர்கள் கூற்றுப்படி யவனர் என்ற சொல் கிரேக்கர்களைக் குறிப்பதாகும். இரு நாட்டாரின் வர்த்தகப் பரிவர்த்தனைகள் தொடர்ச்சியாகத் தொய்வின்றி நடந்து வந்ததால், அவர்களுக்குக்காகவே ஒரு தனிப்பகுதி அமைந்திருந்தது என்பதை

***"கயவாய் மருங்கிள் காண்போர் தடுக்கும்***

***பயன் அளவு அறியா யவனர் இருக்கையும்""***

என்ற வரிகளால் அறிகிறோம். தற்காலத்தில் பன்னாட்டு வணிப உறவுகளை நிரந்தரப்படுத்திக் கொள்ள, சம்பந்தப்பட்டவர் தங்கள் அலுவலகங்களைப் பிற நாடுகளில் அமைத்து வருவதோடு, அரசுகளும் டிரேட் கவுன்சில்கள் அமைத்து வர்த்தக ஏற்பாடுகள் மேற்கொள்வதைக் காண்கிறோம். பல நூற்றாண்டுகளுக்கு முன் தமிழர் இம்முறைறையை கையாண்டுள்ளதை மருவூர்பாக்கம் கிரேக்கப் பகுதி காட்டுகிறது. எந்தெந்தப் பகுதியில் என்னென்ன பண்டங்கள் வாங்கலாம் என்பதையும், மக்கள் தாங்கள் தேவைகளுக்கு நாடவேண்டிய பகுதிகளையும் இந்த 33 வரிகள் தெளிவாகக் காட்டுகின்றன.

வண்ண வாசனைப் பொருட்கள், பட்டு, பருத்தி நூல் மற்றும் எலி மயிர்களை கொண்டு தயாரிக்கப்பட்ட ஆடை வகைகள், உணவுப் பண்டங்கள் விற்கப்படும் பகுதி, நகை விற்பனைப் பகுதிகள் மட்டுமின்றி, உணவகங்கள் ஒரு புறத்தும். சித்திரக்காரர்கள், பொம்மை செய்வோர், சிலை வடிப்போர், நுணுக்கமான கலை வேப்பாடுகளுடன் ஆபரணங்கள் செய்வோர் தையற்காரர்கள், தோல் பொருள் விற்போர் மற்றும் பிழையில்லாது ஒலி இசைகளையும் குற்றமின்றி இசைக்கும் யாழ், குழல் போன்ற கருவிகள் செய்வாரும் மருவூர்ப் பாக்கத்தை சோழப் பொருளாதார மையமாக வளர்த்து நின்றனர்.

**பட்டினப்பாக்கம்:** ஒரு பேரரசின் இறையாண்மைப் பெருமை இப்பகுதியில் விரிவாகப் பேசப்படுகிறது. அகன்ற ராஜவீதிகள், செல்வந்தர்களின் மாளிகைகள், அரவர் தொழிலுக்கு ஏற்றவாறு தனித்தனி வீதிகள், கலைஞர்கள், இசைப்புலவர், சான்றோர்கள், குடியிறுப்புகள் எனப் பட்டினப்பாக்கத்தின் பெருமையை இளங்கோவடிகள் விரிவாகக் காட்டுகிறார். நாட்டின் பாதுகாப்புக் குறிப்புகளும் உண்டு.

எந்தவொரு நாட்டு அரசியலிலும் நீதித்துறைக்கு முக்கியத்துவம் உண்டு. பழந்தமிழ் நாட்டில் நீதியில் கலங்கம் படிந்துவிடலாகாது என்பதில் ஆட்சியாளர்கள் இருந்தமையால் அந்தப் பொறுப்பை ஒரு தெய்வுத்திடம் விட்டுவிட்டனர். தீர்ப்பில் தவறு ஏற்பட்டு விடுமானால், சங்ககால சோழ நாட்டின் ஐவகை மன்றத்தில் ஒன்றான பாவை மன்றத்தில் தெரிந்துவிடும். அந்த பாவை பேசாது கண்ணீர் சிந்தும்.

குறிப்பு

தவறு திருத்தப்படும் சோழ நாட்டின் உச்ச நீதி மன்றத்தின் அமைப்பு இது.

*"உனா நூல்கோடி ஒரு திறம் பற்றினும்,*
*நாவொடு நவிலாது, நவை நீர் உகுத்துப்*
*பாவை நின்றழும் பாவை மன்றமும்.""*

பட்டினப் பாக்கம் நீதி மன்றத்துக்குச் சாட்சி கூற வருவோர் பொய்சாட்சி கூற முடியாது. கூறினால், அங்கு ஒரு சதுக்கத்தில் வாழும் பூதம் அவர்களைப் பிடித்து அறைந்து தின்றுவிடும். இந்த சதுக்க பூத பாவை மன்றச் செய்திகள் கற்பனையாகவே இருப்பினும் அதன் பின்னணி மக்களில் ஒரு தார்மீக பயத்தை உண்டாக்கி, நீதி சரிந்து விடாதிருக்க உதவக்கூடும். காவியத்தின் பின் பகுதியில், கோவலன் சிறப்பியல்புகளை பேசும் நண்பன், ஒரு ஏழைத் தாயின் மகனைக் காப்பாற்ற அவனைக் கொல்ல வந்த சதுக்க பூதத்துக்குத் தன்னைத் தந்து அவனை விடுவிக்க பூதத்திடம் முறையிட்டதும், பூதம் மறுத்ததும், காவியத்தில் மதுரைக் காண்டத்தில் காண்கிறோம். இதே போன்று நோய் தீர்க்கும் இலஞ்சி மன்றம், நெடுங்கல் மன்றம் போன்ற நீதி காக்கும் அமைப்பும் பட்டினப்பாக்கத்தில் இருந்தது.

மனித நாகரிகத்தின் வெளிப்பாடாக விளங்கும் புற அமைப்புகள் மட்டுமில்லாது, மனிதநேயப் பண்பாடுகளும் நிறைந்த முழுமையான நாகரிகத்தை, இளங்கோவடிகள் காவியத்தில் காட்டுகிறார். சோழ நாட்டில் குணவாயிற் கோட்டம் என்னும் ஆசிரமத்தில் யோக நிலையில் இருந்து அவர் இக்காவியத்தை பாடியிருக்க முடியாது. சோழ நாட்டின் ஒவ்வொரு பகுதியிலும் அவர் நேரடியாகவே பயணம் செய்து திரட்டிய செய்தியாகவே இப்பகுதி அமைந்துள்ளது. சிலப்பதிகாரத்தின் கட்டுமானத்தில் தனது கவித்துவத்தை மட்டுமே இளங்கோவடிகள் நம்பியிருக்கவில்லை. சிலப்பதிகாரத்தின் வரலாற்றை எழுதுவதில், நவீன கால ஆராய்ச்சியாளர்கள் போலவே, நீண்ட பயணம் மேற்கொண்டு சேகரித்த, கண்கூடாக நேரில் கண்ட உண்மைகளுக்குக் காவிய, வரலாற்று வடிவம் தந்துஇளங்கோவடிகள் படைத்திருக்கிறார். உழைப்பின் கடுமையை இவ்வரிகளில் காணலாம்.

**அரசியல்:** அரசியல் என்னும் சொல் பாயிரத்தில் மட்டும்தான் வந்துள்ளன. ஆனால் அரசு என்பதன் செயல்பாடுகள் குறித்து நூலில் பல இடங்களில் செயதி வந்துள்ளது. அதிலும் குறிப்பாக "கொலைக்களக் காதை வழக்குரை காதை காட்சிக் காதை கால்கோள் காதை நீர்படைக் காதை நடுகற் காதை முதலிய காதைகள் அரசனை மையமாகக் கொண்டுள்ளன. அந்த வகையில் இந்நூலில் அரசியல் தொடர்பு கொண்டுள்ளன என்பதை அறிய முடிகிறது.

**மன்னர்களும் அறமும்:** பொதுவாக அனைத்து அறநூல்களும் அரசன் செய்யவேண்டிய செயல்களை அறமாகக் கூறிச் செல்கின்றன.

அந்தவகையில் சுக்கிரநீதி அரசன் நீதியோடு இருக்கவேண்டும் என்பதை கூறுகிறது. அரசவைக்கு எப்பொழுதும் நன்மக்களைக் காத்தலும் கொடியவர்களை யொறுத்தலம் சிறந்த அறங்களாகும். இவ்விரண்டும் நீதியுணர்வின்றி உண்டாகா". மேலும் நீதியுடைய அரசனை யாவரும் போற்றுவர்ளூ அல்லாதவனை யாரும் போற்றார். "எவன்மாட்டு நீதியும் பலமும் உள்ளனவோ அவன்பால் திருமகள் பல்லாற்றானும் வந்தெய்துவள். அரசன் தன் நாட்டிலுள்ளாரனைவரும் ஏவப்படாமலே நல்லன புரியும்படி நீதியைத் தன் நலங்குறித்து மேற்கொள்ளற்பாலன் என்று மன்னன் நீதியுள்ளவனாக இருக்க வேண்டும் என்கிறது. அது போலவே நீதி தவறிய மன்னன் எவ்வாறான நிலையை அடைவான் என்பதையும் சுக்கிரநீதி விளக்கியுள்ளது.

நீதியை யிகந்து தன் விருப்பின்படி செல்கின்ற அரசன் துன்புறுவான். நீதியில்லாத அரசன் மாட்டு அனுகி வினை செய்வோன் வாட்படையின் கூறிய நுனியை நாவால் நக்குபவன் ஆவான் என்கிறது. மேலும், "அரசனுக்கு நீதிதவறுதலான் எப்பொழுதும் தன் நாடு வேறுபடும்ளூ பலம் வேறுபடும்ளூ அமைச்சர் முதலியோரும் வேறுபடுவர். இங்ஙனமாதல் அவன் ஆளுந்திறனிலனாதலை வெளிப்படத்துவதாகும்" என்று கூறுகின்றது. பொதுவாகவே அரசன் நல்லவனாக இருந்தால் அறக்குணம் உடையவனாக இருந்தால் அந்த நாடு நலம்பெறும். அறம் தவறிய அரசனின் நாடு வளம் பெறுவது கடினம் என்பதைப் பல பாடல்களும் நூல்களும் சான்றாக இருந்து விளக்குகிறது. அந்தவகையில சிலப்பதிகார மன்னர்கள் தமது அறச்சிந்தனையை எவ்வறு வெளிக்காட்டியுள்ளனர் அதனால் ஏற்பட்டவற்றை சிலப்பதிகாரத்தில் மன்னர்களின் தன்மையோடு காணமுடிகிறது.

**சிலப்பதிகாரத்தில் அரசன்:** சிலப்பதிகாரத்தில் அரசன் என்பது மூவரையும் குறிக்கிறது. சேர சோழ பாண்டியர் இவர்கள் மூன்று பேரும் பேரரசுகள் என்கிற தன்மையைக் காணமுடிகிறது. அந்த வகையில் சேர சோழ பாண்டிய மன்னர்களின் அறம் குறித்த சிந்தனைகளை சிலப்பதிகாரத்தின் வழி காணமுடிகிறது. மூவேந்தர்களும் தென்னிந்தியாவான தமிங்கத்தை ஆண்டு வந்தனர் என்னும் செய்தியை இளங்கோவடிகள் வேனிற்காதையில்

***நெடியோன் குன்றமும் தொடியோள் பௌவமும்***
***தமிழ் வரம்பு அறுத்த தன்புனல் நன்னாட்டு***
***மாடமதுரையும் பீடார் உறந்தையும்***
***கலிகெழு வஞ்சியும் ஒலிபுனற் புகாரும்***
***அரைசு விற்றிருந்த உரைசால் சிறப்பின் (8.1-5)***

என்று பதிவு செய்கிறார். இங்கு முடியுடை வேந்தர்கள் தமிழ்நாட்டை வடக்கே வேங்கட மலையையும் தெற்கே குமரிக் கடலையும் எல்லையாகக் கொண்டு மதுரை உறையூர் வஞ்சி

மாநகரங்களைத் தலைநகராகக் கொண்டு அறம் தவறாத ஆட்சியைச் செய்து வந்தார்கள் என்று உரைக்கிறார்.

குறிப்பு

சங்ககாலத்தில் அரசுகள் நாடுகளாகவும், நாடுகள் கூற்றங்களாகவும் பிரிக்கப்பட்டிருந்தன. கிராமங்கள் தனித்தனியாக ஆளப்பட்டன. ஒவ்வொரு கிராமத்திலும் ஓர் ஆட்சிச் சபையுண்டு. அச்சபை மன்றம் எனப்படும். சான்றோர் அம்மன்றங்களிலிருந்து கிராம நிகழ்ச்சிகளை மேற்பார்வை பார்த்து வந்தனர். காடுகளிலும் மலைகளிலும் சில தனிக் குடிகள் இருந்தன. எயினர் குடி இதைப் போன்றதாகும். இத்தனிக்குடிகள் நீங்கலாக, ஏனை மக்கட்தொகுதி பிற தொகுதிகளினின்றும் தனியே பிரித்துவைத்து எண்ணப் பெறாதவையாம். ஒரு கிராமத்திலிருந்து மற்றொரு கிராமத்திற்கும் பிற நகரங்களுக்கும் அரசியல், வாணிகம் ஆகிய நீங்காத தொடர்புகள் இருந்தன. காடுகள் நிறைந்த தனி வழிகளிலும் வழிப்போக்கர்களுக்கு எத்துன்பமும் விளைந்ததில்லை. கிராமங்களின் நலன்களைக் காக்க கிராம அதிகாரிகள் அரசரால் நியமிக்கப்பட்டிருந்தனர். இதனால் கிராமங்களில் அமைதியும் ஊறின்மையும் நிலைபெற்றன. அவ்வதிகாரிகளோடு கிராமசபையினர் பெருந்துணை புரிந்தனர்.

**உங்கள் முன்னேற்றத்தைச் சரிபார்க்கவும்**

1. இளங்கோவடிகள் இயற்றிய நூல் எது?
2. செங்குட்டுவனின் தம்பி யார்?

## 3.4 உங்கள் முன்னேற்றத்தைச் சரிபார்க்கும் வினாக்களுக்கான விடைகள்

- இளங்கோவடிகள் இயற்றிய நூல் சிலப்பதிகாரம் ஆகும்.
- செங்குட்டுவனின் தம்பி இளங்கோவடிகள் ஆவார்.

## 3.5 சுருக்கவுரை

- சிலம்பு காரணமாக விளைந்த கதை ஆனதால் சிலப்பதிகாரம் ஆயிற்று. இந்நூல் தமிழில் எழுதப்பட்ட ஐம்பெருங் காப்பியங்களில் ஒன்று.
- இந்நூல் "பாட்டிடையிட்ட தொடர்நிலைச் செய்யுள்" எனவும் வழங்கப்படுகிறது. இக்காப்பியத்தில் இயல், இசை, நாடகம் என்னும் மூன்றனையும் காணலாம்.
- கி.பி. இரண்டாம் நூற்றாண்டில் எழுதப்பட்டது என்பர். ஏனைய நூல்கள் அரசனையோ தெய்வங்களையோ பாட்டுடைத் தலைவனாகக் கொண்டிருக்க சிலப்பதிகாரம் கோவலன் என்ற குடிமகனைப் பாட்டுடைத் தலைவனாகக் கொண்டதால் இதனை "குடிமக்கள் காப்பியம்" என்றும் கூறுவர்.

- இன்பியலும் துன்பியலும் கலந்து எழுதப்பட்ட இந்நூலை இயற்றியவர் இளங்கோ அடிகள் என்பவராவார். இவர் புகழ் பெற்ற சேரமன்னன் செங்குட்டுவனுடைய தம்பி எனக் கருதப்படுகின்றது.

குறிப்பு

## 3.6 முக்கிய கருத்துப்படிமங்கள்

- இளங்கோவடிகள்
- சிலப்பதிகாரம்

## 3.7 சுயமதிப்பீட்டு பயிற்சி வினாக்கள்

**குறுகிய வினாக்களுக்கு விடையளிக்கவும்**

1. சிலப்பதிகாரம் குறிப்பு வரைக?
2. இளங்கோவடிகள் பற்றி மதிப்பிடுக?

**விரிவான வினாக்களுக்கு விடையளிக்கவும்**

1. சிப்பதிகாரத்தில் காட்டப்படும் சமூகச் சிந்தனைகளைப் பற்றி கட்டுரை வரைக?

## 3.8 மேலும் படிக்க


- ஐயங்கார்,சீனிவாசீ. வு (2001), *தமிழர்களின் வரலாறு: ஆரம்ப காலத்திலிருந்து 600 கி.பி வரை.* டெல்லி
- கிருஸ்ணசுவாமி.அ, (1977) விஜயநகரபப் பேரரசின் வரலாறு (கிபி1525 வரை) தமிழ்நாட்டுப் பாடநூல் நிறுவனம், அண்ணாமலைநகர்.
- சர்மா,சு.ளு. (2006). *பண்டைய இந்தியாவின் முந்தைய காலம்.* ஆக்ஸ்.ஃபோர்ட் யுனிவர்சிட்டி பிரஸ்.
- சாஸ்திரி, ராமசாமி. (2002) *தமிழர்கள்: மக்கள், அவர்களின் வரலாறு மற்றும் கலாச்சாரம்.* புதுடெல்லி, காஸ்மோ பப்ளிகேஷன்ஸ்
- சிராஜீத்தின, (2010), *தமிழ்நாட்டு வரலாறு (கி.பி. 1987 வரை),* பாவை பப்ளிகேசன், சென்னை
- தேவநேயப்பாவணர். (1992) *பண்டைத் தமிழர் நாகரிகமும் பண்பாடும்,* கழக வெளியீடு சென்னை
- மாதவன்,சித்ரா, (2005), *தமிழ்நாட்டின் வரலாறு மற்றும் கலாச்சாரம்: தொகுதி-1 (கி.பி.1310 வரை).* டெல்லி

குறிப்பு

# அலகு IV

# தமிழ் மொழி மற்றும் இலக்கியத்தின் மறுமலர்ச்சி - தூய தமிழ் இயக்கம் - மறைமலையடிகள் - திருவி.கா

## அலகு IV

## தமிழ் மொழி மற்றும் இலக்கியத்தின் மறுமலர்ச்சி



## 4.0 முன்னுரை

18-ஆம் நூற்றாண்டு தமிழின் மறுமலர்ச்சிக் காலம் எனலாம். உ. வே. சாமிநாதையர், சி. வை. தாமோதரம்பிள்ளை, ஆறுமுக நாவலர் உட்பட பல தமிழறிஞர்கள் ஏட்டுத் தமிழ் இலக்கியங்களைத் தேடிப் பதிப்பித்துப் பாதுகாத்தனர். 1916-ஆம் ஆண்டில் தமிழில் மிகுதியாகக் காணப்பட்ட சமற்கிருத சொற்களையும் மணிப்பிரவாள நடையையும் தடுக்க தனித் தமிழ் இயக்கம் தொடங்கப்பட்டது. தேவநேயப் பாவாணர், மறைமலை அடிகள், பாரதிதாசன், பெருஞ்சித்திரனார் ஆகியோர் முன்னின்று தனித் தமிழ் இயக்கத்தைத் தொடங்கினர். தற்காலத் தமிழ் இலக்கியத்தின் முன்னோடிக் கவிஞராகச் சுப்பிரமணிய பாரதியார் கருதப்படுகிறார். இக்காலத்தில் புதுக்கவிதை பிறந்தது. புதினம், சிறுகதை, கட்டுரை ஆகிய எழுத்து வடிவங்கள் தமிழில் வளர்ச்சி பெற்றன. இந்த காலப்பகுதிகளில் தமிழ்க் கலைக்களஞ்சியம் பல அறிஞர்களின் உழைப்பால் உருவாக்கப்பட்டது.

## 4.1 நோக்கம்

- தமிழ் மொழி மற்றும் இலக்கியத்தின் மறுமலர்ச்சி பற்றி அறந்துக்கொள்ள முடிகின்றது
- தமிழ் இயக்கங்களைப் பற்றி அறந்துக்கொள்ள முடிகின்றது
- மறைமலையடிகள் மற்றும் திருவி.காவின் தமிழ்ப்பணி பற்றி அறந்துக்கொள்ள முடிகின்றது

## 4.2 தமிழ் மொழி மற்றும் இலக்கியத்தின் மறுமலர்ச்சி

மறுமலர்ச்சி என்றால் மீண்டும் மலர்தல். இங்கே இச்சொல், 'நமது மரபை மீண்டும் கண்டறிந்து புதிய ஆக்கங்களுக்குப் பயன்படுத்துதல்' என்று பொருள்படுகிறது. ஒரு காலத்தில் இருந்த மலர்ச்சி மறைந்து, அது மீண்டும் உருவாக்கப்படும் நிலைதான் மறுமலர்ச்சி. ஐரோப்பாவில் கி.பி.15-16ஆம் நூற்றாண்டுகள் மறுமலர்ச்சிக் காலமாக அமைந்ததை யாவரும் அறிவர் தமிழிலும் ஒருகாலத்தில் மிகச் சிறந்த இலக்கியங்கள் படைக்கப்பட்டன. பின்னர் அக்காலம் மறைந்து, சிற்றிலக்கியங்களும் தலபுராணங்களும் திரும்பத்திரும்ப ஒரே பாணியில் உற்பத்திசெய்யப்பட்டு, அவையே இலக்கியமாகக் கோலோச்சும் நிலை உருவானது. இந்தத் தேக்கநிலை மாறி, புத்திலக்கியங்கள் தமிழில் தோன்றுவதற்குச் சாதகமான சூழல் 19ஆம் நூற்றாண்டில் உருவாயிற்று. இதனைத் தமிழ் இலக்கியத்தின் மறுமலர்ச்சி என்கிறோம். இதற்கு உதவியாக ஆங்கிலக் கல்வி அமைந்தது.

பழைய நூல்கள் ஓலைச்சுவடி வடிவிலிருந்து அச்சுவடிவிற்கு மாற்றப்படும் செயல், மறுமலர்ச்சியின் தொடக்கமாக அமைந்தது. பத்தொன்பதாம் நூற்றாண்டின் இடைப் பகுதியில் அச்சு ஊடகம் தமிழுக்குக் கிடைத்த நிலையில், பழைய இலக்கியங்கள் அச்சுவடிவம் பெறலாயின. தமிழகத்தில் அச்சுப்பதித்தல் 16ஆம் நூற்றாண்டிலேயே தொடங்கிவிட்டது. முதன்முதலில் கிறித்துவ நூல்களே அச்சுவடிவில் பதிக்கப்பட்டன. தம்பிரான் வணக்கம் என்ற வழிபாட்டு நூல் கி.பி.1557ஆம் ஆண்டிலேயே தமிழில் அச்சிடப்பட்டதாகத் தெரிகிறது. 1712இல் தரங்கம்பாடியில் அச்சுக்கூடம் அமைக்கப்பட்டது. ஆனால் இவையனைத்தும் ஐரோப்பியர் கரங்களில் இருந்தன.

திருக்குறளும் நாலடியாரும் கி.பி.1812இல் முதன்முதலில் அச்சுவடிவத்தைப் பெற்றன. 1847இல் தொல்காப்பியம் நச்சினார்க்கினியம், மழவை மகாலிங்கையரால் அச்சுவடிவில் கொணரப்பட்டதாகத் தெரிகிறது. பின்னர் சி.வை. தாமோதரனார், உ.வே. சாமிநாதையர் முயற்சிகளால் சங்கஇலக்கியமும் பிறசில நு£ல்களும் அச்சுவடிவில் கிடைத்தன. திருக்குறளும் சங்க இலக்கியமும் பதிப்புக்குள்ளானதும் நமது பழைய மரபு மிக வளமானதோர் மரபு என்பது உலகிற்குத் தெரியவந்தது.

குறிப்பு

ஆங்கிலக் கலாச்சாரம் இந்தியாவில் திணிக்கப்பட்டபோது, அதற்கு எதிர்வினையாக, சமஸ்கிருத மரபு ஆழமானது, பழமையானது என நிலைநாட்டும் இயக்கங்கள் வடக்கில் ஏற்பட்டன. தமிழ் இலக்கியங்கள் பதிப்பிக்கப்பெற்றதும், சமஸ்கிருத மரபுக்கு மாறான, ஆனால் காலஅளவில் அதற்கு இணையான, ஓர் ஆழமான இந்திய மரபு தமிழில் இருக்கிறது என்பது தமிழர்களாகிய நமக்குப் பெருமை தருவதாயிற்று. சமஸ்கிருதம் ஓர் இந்தோ ஐரோப்பிய மொழியாக இருந்த காரணத்தினால் சமஸ்கிருதத்தின் பழமையை உடனே ஐரோப்பியர்கள் ஏற்றுக்கொண்டனர். இதற்கு மாக்ஸ்முல்லர் போன்றவர்களின் தரமான மொழிபெயர்ப்புகள் துணையாக இருந்தன. ஆனால் தமிழ் திராவிடமொழி என நிலைநாட்டப்பட்டு, அதன் தனித்தன்மை ஏற்றுக்கொள்ளப் படுவதற்குள் இரண்டு மூன்று நூற்றாண்டுகள் சென்றுவிட்டன. இன்றும் இந்திய இலக்கியம் என்றால் சமஸ்கிருத இலக்கியம், அதன் வழிவந்த இலக்கியங்கள் என்ற எண்ணமே அயல்நாடுகளில் நிலவுகிறது. இதை நமது துர்ப்பாக்கியம் என்றுதான் கூற வேண்டும்.

இருபதாம் நூற்றாண்டின் தொடக்கத்தில் சிந்துவெளி நாகரிகம் பற்றிய ஆய்வினை சர். ஜான் மார்ஷல் மேற்கொண்டார். ஹீராஸ் பாதிரியார் போன்றவர்களின் ஆய்வினால் அதுவும் பழமையான திராவிட-தமிழ் நாகரிகமே என்ற உணர்வு ஏற்பட்டது. இவையாவும் உலக அளவில் தமிழ் மக்கள் தங்களை அடையாளப்படுத் திக்கொள்ள உதவின. இருப்பினும் வடநாட்டவர்கள் இதற்கும் இடம் கொடுக்கவில்லை. இன்றுவரை சிந்துவெளி நாகரிகமும் ஆரிய நாகரிகமே என்று சாதித்து வருகின்றனர். மேலும் அடிப்படைச் சான்றுகளையே அதற்கு ஏற்றாற்போலத் திருத்தவும் முனைந்துள்ளனர். சான்றாக, சிந்துவெளி நாகரிகத்தில் குதிரைக்கு முக்கியத்துவம் இல்லை. ஆனால் ஆரியர்களின் முக்கியச் சின்னம் குதிரை. சிந்துவெளியில் கிடைத்துள்ள எருது முத்திரைகளைக் குதிரை முத்திரைகளாகத் திரித்து உருமாற்றம் செய்வதில் இந்துத்துவ அமைப்புகள் ஈடுபட்டுள்ளன. ஆனால் ஐராவதம் மகாதேவன் போன்ற அறிஞர்கள் மிக உறுதியாகச் சிந்துவெளி எழுத்துகள் திராவிட எழுத்துகளே என்பதை நிறுவியுள்ளனர்.

வள்ளலார், சுந்தரம் பிள்ளை, பாரதியார் ஆகியோரின் கவிதைகள் தமிழ்க் கவிதையை நவீனப்படுத்த உதவின. சிறிதுகாலம் பிறகு புதுமைப்பித்தன் போன்ற எழுத்தாளர்களின் படைப்புகளும் பிற எழுத்தாளர்கள், பத்திரிகையாளர்களின் முயற் சிகளும் தமிழ் உரைநடையை மேம்படுத்தவும் அதன் படைப்பாற்றலைச் சிறப்பாக வெளிக்கொணரவும் உதவின. ஆங்கிலக் கல்விமுறை மெக்காலேயால் புகுத்தப்பட்ட நாள் முதலாக ஆங்கில அடிப்படையிலான இலக்கிய நோக்கு தமிழ்இலக்கியத்தில் புகுந்தது. தமிழ்போன்ற மொழிகளில் எழுத்துத் தொடர்புக்குரிய ஒரு கருவியாக உரைநடை பழங்காலத்தில் மிகுதியாகப் பயன்படவில்லை. ஆங்கில ஆட்சியில் இந்தியர் அச்சகங்கள் வைத்துக் கொள்ள அனுமதி தந்தபிறகுதான் பத்திரிகைகள் தோன்றின. உரைநடையின் பயன்பாடு மிகுதியடைந்தது. எழுத்துத் தொடர்புக்கான

குறிப்பு

ஓர் இன்றியமையாக் கருவியாக உரைநடை ஆயிற்று. பத்திரிகைகளில் எழுதப்படும் வகைகளான கட்டுரைகள், பத்திகள், ஆசிரியவுரைகள், செய்தியளிப்பு முறைகள் போன்றவை ஆங்கிலேயர் வருகைக்கு முன் தமிழிலோ பிற இந்திய மொழிகளிலோ கிடையாது. பத்திரிகைச் செய்தியளிப்பு முறைகளும் கட்டுரைகளும் சிறுகதை போன்ற இலக்கிய வகைகள் தோன்றுவதற்குச் சாதகமாக அமைந்தன.

இந்தியப் பாரம்பரியக் கதைகள் பஞ்சதந்திரக் கதைகள், கதாசாகரத்தில் இடம்பெற்றுள்ள கதைகள், விக்கிரமாதித்தியன் கதைகள், தெனாலிராமன் கதைகள் போன்றவை-புனைகதை எழுத்திற்கு ஆதாரமாக அமைந்தன என்று சொல்பவர்கள் இருக்கி றார்கள். இக்கூற்றில் ஓரளவு தவறில்லை. என்றாலும் எனது கருத்தில், பத்திரிகை எழுத்து முறையே புனைகதையின் தோற்றத்துக்கான அடிப்படைகளை அளித்தது. பத்திரிகைக்கான கதைசொல்லல் வடிவம், பத்தி வடிவம் போன்ற வகைகளில் தேர்ச்சியுற்ற ஒரு மனம்தான் புனைகதை என்ற இலக்கிய வடிவத்தை உருவாக்க முடியும். எனினும் இந்தியப் பாரம்பரியக் கதைசொல்லல் முறைகள், நாவல் வளர்ச்சிக்குத் தூண்டுகோலாக அமைந்தன. வேதநாயகம் பிள்ளையின் பிரதாப முதலியார் சரித்திரம், சுகுணசுந்தரி போன்ற ஆரம்பகால நாவல்களில் இந்தியக் கதைசொல்லல் முறையின் தாக்கங்களை நன்கு காணலாம். தமிழில் மட்டுமன்றி, பிற இந்திய மொழி கள் அனைத்திலும், பாரம்பரியக் கதைசொல்லல் முறை நாவலின் தோற்றத்துக்கு உந்துசக்தியாக அமைந்தது. இந்திய மொழிகளின் முதல் நாவல்களை நோக்கினாலே இவ்விஷயம் தெளிவாக வெளிப்படும். அதேசமயம் ஆங்கிலக்கதைகளின் தாக்கமும் நாவலின் தோற்றத்திற்கு இன்னொரு முக்கியக் காரணம். சான்றாக, இராஜம் ஐயரின் கமலாம்பாள் சரித்திரம், ஆங்கிலத்தில் கோல்டுஸ்மித் எழுதிய ‘தி விகார் அவ் வேக்ஃபீல்டு’ என்ற கதையைப் பிரக்ஞை பூர்வமாகப் பின்பற்றிய முயற்சி என்று க.நா. சுப்பிரமணியம் குறிப்பிட்டுள்ளார். எனவே இந்திய மொழிகளில் நாவல்கள் தான் முதலில் தோன்றின.

நாவல்கள் தோன்றியப் போதும், அவை அறம் பொருள் இன்பம் வீடு அடைதல் நூற்பயனே’ என்ற மரபுரீதியான கருத்தின்படியே அமைந்தன. குறிப்பாக அறத்தை போதிப்பதற்கு நாவல் வடிவமே சரியானது என்று கருதப்பட்டது. பாரம்பரியக் கதைசொல்லல் முறைகள், நாவல் இலக்கியத்திற்கு உதவியது போல சிறுகதையின் தோற்றத்திற்கு உதவவில்லை. பத்திரிகை எழுத்துமுறைதான் சிறுகதையின் தோற்றத்துக்கான அடிப்படைகளை அளித்தது. பத்திரிகைக் கட்டுரை வடிவம், பத்திவடிவம் போன்ற எழுத்துவகைகளில் தேர்ச்சியுற்ற ஒரு மனம்தான் சிறுகதை என்ற இலக்கியவடிவத்தை உருவாக்க முடியும். எனவே நமது மரபு பற்றிய பிரக்ஞை ஆழமாக ஏற்பட்ட பிறகு-அதாவது, நாவல்களின் தோற்றத்திற்குக் குறைந்தது ஐம்பதாண்டுகள் கழிந்தபிறகுதான்-சிறுகதை தோன்றமுடிந்தது. என்றாலும் சிறுகதை

**குறிப்பு**

வடிவம் நமக்கு முற்றிலும் அந்நியமானதும் அல்ல. பாரம்பரிய இந்திய இலக்கிய வடிவங்களிலும் சிறுகதைவடிவம் உள்ளடங்கியே இருக்கிறது. உதாரணமாக, கலித் தொகையில் ஒவ்வொரு கவிதையும் ஒரு சிறுகதையாக அமைவதைப் பலரும் எடுத்துக் காட்டியிருக்கிறார்கள்.

தற்காலச் சிறுகதை, நாவல்கள் போன்ற புதிய இலக்கிய வகைகள் உருவானது ஒருபுறமிருக்க, ஏறத்தாழ இரண்டாயிரம் ஆண்டு பழமையுடைய தமிழ்க்கவிதையின் அமைப்பே இன்று முற்றிலும் மாறியுள்ளது. பழங்கவிதைகள் பொருள் தெரிவிப்பதில் பெரும்பாலும் வெளிப்படையானவை. அவற்றை அன்வயப்படுத்திக் கடினமான சொற்களுக்குப் பொருள்சொல்லிவிட்டால் போதும், அக்கவிதைகளின் பொருள் புரிந்துவிடும் என்ற நோக்கு இருந்தது. பெரும்பாலும் மரபுக்கவிதைகள் இந்த நினைப்பை உண்மையாக்கவே செய்தன. எனவே மரபுக்கவிதைகள் பாடமாக நடத்தப்பட்ட விதம் இப்படித்தான் இருந்தது.

இக்காலக் கவிதைகள் வெளிப்படையாகப் பொருள் புரிவதுபோல் தோன்றுகின்றன. ஆனால் பொருளுணர்த்தலில் பலவகை உத்திகளைப் பின்பற்றுகின்றன. அவற்றின் உட்கோள் வேறு, வெளிப்படையாகச் சொல்லும் செய்தி வேறு. இப்படிப்பட்ட கவிதை உருவாக்கம் மேற்கத்திய வாசிப்புமுறை அடிப்படையில் நிகழ்ந்த ஒன்று. எனவே தமிழிலக்கியப் பரப்பின் தோற்றமே மேற்கத்திய அணுகுமுறைகளால் மாறி விட்டது என்று சொன்னால் மிகையில்லை. மறைமுகமாக அன்றி, நேரடியாகவே, இலக்கியத்தில் மேற்கத்தியக் கொள்கைகளின் தாக்கம் என்பது சென்ற நூற்றாண்டின் இடைப்பகுதியிலிருந்து தொடங்கிவிட்டது.

மேற்கத்தியத் தாக்கத்தினால், பத்திரிகைக் கட்டுரை, பத்திகள், ஆசிரியவுரை, நாவல், சிறுகதை, குழந்தை இலக்கியம், பயண இலக்கியம், வாழ்க்கை வரலாற்று.ஃதன் வரலாற்று இலக்கியம், உரைநடைக் கட்டுரை, இலக்கியக் கட்டுரை, திறனாய்வு இலக்கியம் போன்றவை உருவாயின. இவற்றில் நாவல், சிறுகதை இலக்கியங்கள் பற்றிப் பேசப்பட்ட அளவுக்குப் பிற இலக்கிய வகைகள் பற்றித் தமிழில் பேசப்பட்டதில்லை. குறிப்பாகக் குழந்தை இலக்கியம், கட்டுரை இலக்கியம், பயண இலக்கியம் போன்றவைகளும் அவை பற்றிய ஆய்வுகளும் தொடக்கநிலையிலேயே உள்ளன.

ஆங்கிலம் போன்ற மொழிகளில் 'நர்சரி ரைம்'கள், சிறார்க்கதைகள் போன்றவை தனியாக உண்டு. தமிழில் 19ஆம் நூற்றாண்டுவரை நல்வழி, ஆத்திசூடி, கொன்றை வேந்தன், வாக்குண்டாம் போன்ற அறநூல்களைத்தான் குழந்தை இலக்கியம் என்று கருதி வந்திருக்கிறோம். பாரதியார் 'ஓடிவிளையாடு பாப்பா' போன்ற பாட்டுகளையும், கவிமணி தேசிகவிநாயகம் பிள்ளை, 'தோட்டத்தில் மேயுது வெள்ளைப்பசு' போன்ற பாட்டுகளையும் எழுதும்வரை, தனியாகக் குழந்தைப் பாடல்கள் அல்லது குழந்தை இலக்கியம் என ஒன்று உண்டு என்பதே தெரியா திருந்தது. இன்றும்கூடக் குழந்தை இலக்கியம் என்ற

குறிப்பு

பெயரில் பலரும் அறிவுரை களையும் அறக்கருத்துகளையும் சொல்லிக் கொண்டிருப்பதைக் காண்கிறோம்.

பாரசீக மொழி, அராபிய மொழி போன்றவற்றில் '-நாமா' என்ற பின்னொட்டுச் சொல்லில் முடியக்கூடிய தன்வரலாற்று.'.வாழ்க்கை வரலாற்று நுƒல்கள் பல உண்டு. ஆனால் தமிழில் அந்த இலக்கிய வகையும் இல்லை. ஆங்கிலம் போன்ற மொழிகளில் இதுபோன்ற இலக்கிய வகைகளைப் பார்த்தபிறகே தமிழிலும் அவ்வாறு எழு தும் வழக்கம் தோன்றியது. பயண நுƒல்களும் அவ்வாறே. பழங்காலத்தில் தமிழில் 'தகடூர் யாத்திரை', 'செங்கோன் தரைச்செலவு' போன்ற நுƒல்கள் இருந்த தாகக் குறிப்பிடப்பட்டாலும், அவை பயணநுƒல்களா என்பது தெரியவில்லை.

இருபதாம் நூற்றாண்டின் தொடக்கத்தில் இந்திய தேசியம் தமிழில் வேரூன்றியது. அதற்குச் சில ஆண்டுகள் கழித்து தமிழ்தேசியம் உருவாகும் சூழல் ஏற்பட்டது. அதற்கும் சில ஆண்டுகள் கழித்து தமிழ் வெகுஜன ஊடகங்களின் தாக்கத்தினால் வெகுஜனக் கலாச்சாரத்திற்கு ஆட்பட்டுவிட்டது. இவையும், தமிழில் மணிக்கொடி காலம் முதல் தோன்றிய சிறுபத்திரிகைகளும், தமிழ் இலக்கிய உருவாக்கத்திலும், நுகர் விலும் பெரும் மாற்றங்களைத் தோற்றுவித்துள்ளன. இவையனைத்திற்கும் அடியில் நேர்முகமாகவோ எதிர்மறையாகவோ மேற்கத்தியத் தாக்கம் பரவலாகத் தொடர்ந்து இருந்து வந்திருக்கிறது. ஏறத்தாழ மணிக்கொடிக் காலம் முதலாகவே வெகுஜன ஊடகங்களுக்கும் ஆழமான இலக்கிய நுகர்வுக்கான ஊடகங்களுக்கும் முரண்பாடு தோன்றிவிட்டது. இதனைக் கல்கி-புதுமைப்பித்தன் மோதலில் நாம் காணலாம். கல்கி வெகுஜனநுகர்விற்கான இலக்கியங்களைப் படைத்தார் என்றால், புதுமைப்பித்தன் அதற்கு எதிரான மனப் பான்மை கொண்டவராக இருந்தார். இம்மாதிரி, யாருக்காக எவ்விதம் இலக்கியம் படைப்பது என்பதில் மட்டுமன்றி, மொழிபெயர்ப்பு, தழுவல் போன்றவை குறித்தும் இருவருக்கும் கருத்து மாறுபாடுகள் இருந்தன.

சிறுபத்திரிகைகளும் மேற்கத்தியத் தாக்கத்தின் ஒரு விளைவே. தமிழில் மணிக் கொடி தொடங்கித்தான் இலக்கியச் சிற்றிதழ்களைக் காணமுடிகிறது. சமூக மேம்பாட்டுக்கான சிற்றிதழ்கள் அதற்கு முன்னாலிருந்தே உண்டு. ஆங்கிலத்தில் ஏறத்தாழ ஒரு நுƒற்றாண்டு முன்பே சிற்றிதழ்கள் என்ற நிகழ்வு தோன்றிவிட்டது. புகழ்பெற்ற ஜேம்ஸ் ஜாய்ஸ், டி.எஸ்.எலியட் போன்ற எழுத்தாளர்களெல்லாம் இலக்கியச் சிற்றிதழ் களிலேயே தங்கள் படைப்புகளை வெளியிட்டனர். திறனாய்வின் தோற்றத்திற்கும் மேற்கத்திய வாசிப்பு முறையே காரணம் என்பதை அறுதியிட்டுச் சொல்லமுடியும். தமிழில் பழங்காலத் திறனாய்வு என்பதற்கு நாம் காணக்கூடிய உதாரணங்கள் எல்லாம், அரங்கேற்றத்தின்போது கரக்கம்பம் சிரக்கம்பம் செய்தல், நூலை வாசிக்கக்கேட்டு மூங்கையும் கண்ணீர் பெருக்கித் தலையசைத்தல் போன்ற பாராட்டு வெளிப்பாடுகள்தான். இதற்கும் மேலாக இறைவனிடம்

நக்கீரர் நெற்றிக்கண்ணைத் திறந்தாலும் குற்றம் குற்றமே என வாதிட்டது, திருக்குறள் போன்ற நூல்களைச் சங்கப்பலகையில் வைத்தபோது அது விரிந்து ஏற்றுக்கொண்டது, தகுதியற்ற நு£ல்களை வைத்தால் அது குளத்தில் குப்புறத் தள்ளிவிட்டது போன்ற கதைகள்தான் காணப்படுகின்றன. "குணம் நாடிக் குற்றமும் நாடி அவற்றில் மிகைநாடி" நூலை ஏற்றுக்கொள்ளும் தன்மையை முதன்முதலாகப் பல்கலைக்கழக ஆங்கிலக் கல்வியின் வாயிலாகத் தமிழ்க்கல்வியைக் கற்ற செல்வக்கேசவராய முதலியார், மறைமலையடிகள் போன்றவர்களிடம்தான் காணமுடிகிறது.

நமது பண்டைய உரையாசிரியர்களைத் திறனாய்வாளர்களாகப் பலர் முன் வைக்க முனைந்துள்ளனர். உரையாசிரியர்களின் தன்மை வேறு, திறனாய்வாளர்களின் தன்மை வேறு. உரைகோள் என்பது திறனாய்வு அல்ல. மேலும் நமது பண்டை உரையாசிரியர்கள் யாவரும் முன்னோர் நூலைப் பொன்னே போல் போற்றிக் கொண்டவர்கள். மூலநூலாசிரியனிடம் குறை காண விரும்பாதவர்கள். பிரதியில் குறைகள் தென்பட்டாலும் அதைப்பிற உரையாசிரியர்களின் குறையாகவே கொள்வார்களே ஒழிய, ஆசிரியனின் குறையாகக் கொள்ளமாட்டார்கள். நூலைப் போற்று வதிலும் நயம் காண்பதிலும் அவர்கள் வல்லவர்களாக இருந்தார்களே ஒழிய, தர்க்கரீதியான வாசிப்பு, நிறைகளே அன்றிக் குறைகளையும் நோக்குதல், இதன் விளைவான தர மதிப்பீடு போன்ற தன்மைகளை அவர்கள் பெற்றிருக்கவில்லை.

தரமதிப்பீடு இன்மையால், பழங்காலத்திலிருந்தே பட்டியலிட்டவற்றை யெல்லாம் இலக்கியமாகக் கருதும் தன்மை தோன்றியுள்ளது. சான்றாகப் பதினெண்கீழ்க் கணக்குத் தொகுதியிலுள்ள பலநூல்கள் இலக்கியம் என்ற தகுதியைப் பெறமுடியாதவை. ஆனால் அவற்றைப் பழங்காலத்தில் இலக்கிய நூல்களாகக் கருதிச் சேர்த்துவிட்டபடியால், இன்றுவரை இலக்கிய வரலாற்று நூல்களில் அவற்றை விலக்கமுடியாமல் தத்தளிக்கிறோம். சாத்திர நூல்களும் இதுபோன்றவையே. சாத்திர நூல்களை மெய்யியல், மீமெய்யியல் ஆனால் எல்லா இலக்கிய வரலாற்று நூல்களிலும் அவை இலக்கியம் எனக் குறிப்பிடப்படுவதைப் பார்த்துக்கொண்டு தான் இருக்கிறோம். இவ்வாறாகத் தமிழிலக்கிய வாசிப்புமுறை, தமிழிலக்கியத் திறனாய்வுப் பார்வை போன்ற யாவற்றிலும் மேற்கத்திய இலக்கிய, அழகியல் கொள்கைகளின் தாக்கத்தைக் காண்கிறோம். இருபதாம் நூற்றாண்டில் ஏற்பட்ட மாற்றங்களைத் தொகுத்து நோக்கினால்,

- தமிழ் தனது ஜனநாயகத் தன்மையை நிலைநிறுத்தியுள்ளது.
- அதன் ஆக்கவளம் உலக நிலையில் இணைந்துகொள்ள முயன்றுள்ளது.
- தமிழ் உலகை அறிந்துகொண்டுள்ள அளவு, உலகும் தமிழை அறிந்துள்ளது

குறிப்பு

தமிழ் இலக்கியத்தில் இருபதாம் நூற்றாண்டில் முதன்முதல் ஆதிக்கம்கொண்ட மேற்கத்தியக் கொள்கை என்று மார்க்சியத்தைக் குறிப்பிடலாம். 20ஆம் நூற்றாண்டின் இறுதியில் பெண்ணியம் உரிய இடத்தைத் தனது படைப்புகளில் பிடித்துள்ளது. தலித்தியம் நமது மண்ணைச் சேர்ந்ததே ஆயினும் இன்றைய தலித்தியம், பின்னமைப்பியம், பின்நவீனத்துவம், கருப்பினக்கொள்கை, பெண்ணியம், தகர்ப்பமைப்பு போன்றவற்றுடன் நெருங்கிய தொடர்புக் கொண்டுள்ளது.

## 4.3 தூய தமிழ் இயக்கம்

தூய தமிழியக்கம் தோன்றிய காலத்தில் தமிழ்ப் புரவலர்கள் இடையில் அதற்குப் பெரும் வரவேற்பு இருந்தது. பலரும் தனித்தமிழ்க் கொள்கையை விரும்பி ஏற்றனர். அதே வேளையில் இவ்வியத்திற்குத் தமிழர்களிடையே கடுமையான எதிர்ப்பும் காணப்பட்டது. சிலர் தனித்தமிழியக்கத்தைச் சார்ந்து பல்வெறு கட்டுரைகளை வெளியிட்டனர். தமிழ், மிகுந்த சொல்வளம் கொண்ட மொழி ஆகும். எந்தக் கருத்தையும் தன் வளத்தைக் கொண்டே சொல்லக்கூடிய ஆற்றல் இம்மொழிக்கு உண்டு என்பதை வெளிப்படுத்துவது தனித்தமிழ் இயக்கத்தின் நோக்கமாகும். காலந்தோறும் தமிழ், புதுச் சொற்களை உருவாக்கிக் கொண்டே வந்துள்ளது. வேர்ச்சொல் வளம் இம்மொழியில் மிகுந்துள்ளது. புதிய சொற்களைப் பொதுமக்களே ஆக்கும் அக்கறையும் ஆர்வமும் கொண்டிருப்பதால் கடந்த காலங்களில் பிறசொற்களின் துணையில்லாமலே இயங்கி வந்தது தனித்தமிழ். பொது மக்களின் மரபு அறிஞர்க்குள்ளும் இருப்பதால் அவர்கள் செவ்விய ஆக்கங்களைத் தங்கள் இலக்கியங்களில் பயன்படுத்தி, தமிழ் தனித்து இயங்குவதற்குப் பாதை அமைத்தனர்.

சங்க காலத்திற்குப் பின் தனித்தமிழ் வழக்கொழிந்திருந்தது. இருபதாம் நூற்றாண்டில் தனித்தமிழ் வழக்கினை உயிர்ப்பித்தவர் அடிகளாரேயாவர். உரிய தமிழ்ச் சொற்கள் இருக்க வடமொழிச் சொற்களைக் கலந்து அக்காலத்தில் எழுதினர். அவ்வாறு எழுதித்தம்மை இருமொழிப் புலமை உடையவர் போன்று காட்டிக்கொண்டனர். இதனால் தமிழ் மொழியின் வளர்ச்சியில் தடைஏற்பட்டது. இச்சூழலில் தனித்தமிழ் இயக்கம் தோன்றியது. 1916-ஆம் ஆண்டு அடிகளார் தம் வீட்டுத் தோட்டத்தில் மகள் நீலாம்பிகையாருடன் உலாவிக் கொண்டிருக்கும் போது, இராமலிங்க வள்ளலார் அருளிச் செய்த திருவருட்பாவில்,

*பெற்ற தாய் தனை மகமறந்தாலும் பிள்ளையைப்*
*பெறும்தாய் மறந்தாலும்*
*உற்ற தேகத்தை உயிர் மறந்தாலும்*
. . . . . . . . . . . . . . . . . . . . . . . . . .

. . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . .

*நற்றவத்தவர் உள்ளிருந் தோங்கும் நமச்
சிவாயத்தை நான் மறவேனே*

குறிப்பு

என்ற பாட்டைப் பாடினார். பிறகு தம் மகளிடம் "இப்பாட்டில்உள்ள 'தேகம்' என்ற வடசொல்லை நீக்கி அவ்விடத்தில் யாக்கைஎன்ற தமிழ்ச்சொல் இருக்குமானால் செய்யுளின் ஓசையின்பம் இன்னும் இனிமையாக இருக்கும்" என்றார். மேலும், "பிற மொழிச்சொற்கள் வழங்கி வருவதால் தமிழ்ச் சொற்கள் மறைந்து விடுகின்றன"என்றார். உடனே நீலாம்பிகையார் தந்தையிடம், "நாம் இனி அயன்மொழிச் சொற்களை நீக்கித் தனித்தமிழிலே பேசுதல் வேண்டும். அதற்கான முயற்சிகளைக் கைவிடாது செய்தல் வேண்டும்" என்று ஆர்வமுடன் கூறினார். தனித்தமிழ் இயக்கத்தின் தோற்றத்திற்குக் காரணமானவர் நீலாம்பிகையம்மையாரேயாவர். தனித்தமிழ் இயக்கம் 1916-இல் ஏற்பட்டது.

**பெயர் மாற்றம்** மகளின் அன்பும் அறிவும் கலந்த வேண்டுகோளை ஏற்று, சுவாமிவேதாசலம் என்ற தம் பெயரை மறைமலையடிகள் என்று மாற்றிவைத்துக் கொண்டார். அது முதல் அடிகளார், தனித்தமிழ் எழுதலாயினார். சொற்கள் தனித்தமிழில் கிடைக்காத போது புதியசொற்களைத் தமிழில் உண்டாக்கி எழுதினார். ஞானசாகரம் என்ற தம்திங்கள் வெளியீட்டிற்கு அறிவுக்கடல் என்றும், சமரச சன்மார்க்க நிலையத்தைப் பொதுநிலைக் கழகம் என்றும் பெயர் மாற்றம்செய்தார். அடிகளாரும் அவர் மகளும் இவ்வாறு தனித்தமிழ் இயக்கங்கண்டது மட்டுமன்றி அதனை வளர்க்கும் பணியிலும் ஈடுபட்டனர். எங்கும் தமிழ் எதிலும் தமிழ் என்ற கொள்கையுடைய அடிகளார் இறை வழிபாடு, திருமணம் முதலிய சடங்குகளும் தமிழ்மொழியிலேயே நடைபெற வேண்டும் என்று விரும்பினார். தமிழுக்கும் தமிழினத்திற்கும் வந்த தீங்குகளை நீக்கவே அடிகளார் தனித்தமிழ் இயக்கத்தைத் தோற்றுவித்தார் என்பதை அறிய முடிகிறது.இதனால் தனித்தமிழ் இயக்கத்தின் தந்தை எனவும் போற்றப்படுகிறார். இசைப்புலமையுடைய அடிகளார் தம் மகள் நீலாம்பிகைக்குத் தாமே இசையையும் கற்பித்தார்.

## 4.4 மறைமலையடிகள்

1876-இல் நாகப்பட்டினத்திலுள்ள காடம்பாடியில் அடிகளார் தோன்றினார். அத்திருத்தலத்து இறைவன் பெயரான வேதாசலம் என்பதையே பெற்றோர் அவருக்குச் சூட்டி மகிழ்ந்தனர். வேதாசலம் அவர்களின் அன்னை பெயர் சின்னம்மையார். தந்தையார் பெயர் சொக்கநாதப் பிள்ளை. அடிகளார் இளமையிலேயே கல்வியிலும் ஒழுக்கத்திலும் சிறந்தவராக விளங்கினார். பன்னிரண்டாம் அகவையில் தந்தையை இழந்த அடிகளார், ஒன்பதாம் வகுப்பு வரை தான் கற்றார்.

**தமிழ்க் கல்வி:** தமிழ் நூல்களைக் கற்க வேண்டும் என்ற ஆர்வம் அடிகளாருக்கு இயற்கையாக எழுந்தது. நாகப்பட்டினத்தில் வெ.நாராயணசாமிப்பிள்ளை என்பார் புத்தகக்கடை வைத்திருந்தார். தமிழ்ப் பெரும்பேராசிரியராக விளங்கிய திரிசிரபுரம் மகாவித்துவான் மீனாட்சி சுந்தரம்பிள்ளையவர்களிடம் இவர் முறையாகத் தமிழ் கற்றவர். நாராயணசாமிப் பிள்ளை புத்தக விற்பனையோடு தமிழ் கற்பிக்கும் பணியையும் செய்து வந்தார். இவரிடம் தொல்காப்பியம், இறையனார் அகப்பொருள் முதலிய இலக்கண நூல்களையும், தருக்க நூல்களையும் முறையாகக் கற்றுச் சிறந்த அறிவு பெற்றார் அடிகளார்.

**அடிகளாரின் படைப்புகள்**: 1898 முதல் சென்னைக் கிறித்துவக் கல்லூரியில் தமிழ்ப் பேராசிரியராகப் பொறுப்பேற்று மாணவர்களுக்கு எளிய முறையில் பாடம் கற்பித்தார். அடிகளாரின் விளக்கவுரைகள் செறிவானவை. அவற்றின் இடையிடையே நகைச்சுவையும் உலகியல் மேற்கோள்களும் நிறைய இடம்பெறுவதுண்டு. அடிகளார் காலத்தில் காரைக்காலில் நடந்து வந்த திராவிட மஞ்சரி, பாஸ்கர ஞானோதயம் என்னுங்கிழமைத் தாள்களுக்கும், நாகப்பட்டினத்திலேயே நடைபெற்று வந்த நாகை நீலலோசனி என்னும் கிழமைத்தாளுக்கும் பல கட்டுரைகளை எழுதினார். ஞானசாகரம் என்னும் திங்களிதழ் அடிகளாரின் முயற்சியால் 1902ஆம் ஆண்டு முதல் வெளிவந்தது. நூல் எழுதுதல், நூலாராய்தல், எழுதிய நூல்களை அச்சிட்டு வெளியிடுதல் போன்ற பலதுறைகளில் அடிகளார் தமிழுக்குச் செய்துள்ள தொண்டுகள் அளப்பரியன. அடிகளார் அரிய ஆங்கில நூல்களை ஆராய்ந்துள்ளார். கல்வி, உய்த்துணர்வு, சொல்வன்மை இம்மூன்றும் வாய்க்கப் பெற்றிருந்தார். 1903ஆம் ஆண்டு மாணவர்களின் வேண்டுகோளின்படி, பட்டினப்பாலை, முல்லைப்பாட்டு ஆகிய இருநூல்களுக்கும் ஆராய்ச்சியுரை எழுதி வெளியிட்டார்.

செய்யுள், புதினம், நாடகம், கட்டுரை, மொழிபெயர்ப்பு, ஆராய்ச்சி போன்ற பல துறைகளிலும் அடிகளார் நூல்களைப் படைத்துள்ளார். திருவொற்றியூர் முருகன் மும்மணிக்கோவை, சோமசுந்தரக் காஞ்சியாக்கம் முதலியன அடிகளார் இயற்றிய செய்யுள் நூல்களாகும். சிந்தனைக் கட்டுரைகள், அறிவுரைக் கொத்து, சிறுவர்க்கான செந்தமிழ், முற்காலப் பிற்காலத் தமிழ்ப் புலவோர், இந்தி பொது மொழியா? போன்ற கட்டுரை நூல்களையும் அடிகளார் எழுதியுள்ளார். குமுதவல்லி அல்லது நாகநாட்டரசி, கோகிலாம்பாள் கடிதங்கள் முதலியன அடிகளாரின் புதின நூல்களாகும். வடமொழியில் காளிதாசர் எழுதிய சாகுந்தலத்தை மொழிபெயர்த்து அடிகளார் சாகுந்தல நாடகம் என்று பெயரிட்டுள்ளார். அம்பிகாபதி அமராவதி என்ற நாடக நூலையும் அடிகளார் எழுதியுள்ளார்.

அடிகளாரின் ஆராய்ச்சி நூல்களை இலக்கிய ஆராய்ச்சி, காலவரலாற்று ஆராய்ச்சி, வாழ்வியல் ஆராய்ச்சி என்ற மூன்று பிரிவுகளாகப் பாகுபடுத்தலாம். பண்டைக்காலத் தமிழரும் ஆரியரும்,

குறிப்பு

மாணிக்க வாசகர் வரலாறும் காலமும், முற்காலப் பிற்காலத் தமிழ்ப் புலவோர், சோமசுந்தர நாயகர் வரலாறு முதலியன அடிகளாரின் கால வரலாற்றை உணர்த்தும் அடிகளாரின் ஆய்வு நூல்களாகும். பொருந்தும் உணவும் பொருந்தா உணவும், வேளாண் நாகரிகம், மக்கள் நூறாண்டு வாழ்வது எப்படி? என்பன வாழ்வியல் ஆய்வு நூல்களாக விளங்குகின்றன. வாழ்வியல் ஆராய்ச்சி நூல்களில் சமயத் தொடர்புடைய நூல்கள் சைவ சித்தாந்த ஞானபோதம், சாதி வேற்றுமையும் போலிச் சைவரும், கடவுள் நிலைக்கு மாறான கொள்கைகள் சைவமாகா, பழந்தமிழர் கொள்கையே சைவ சமயம், தமிழர் மதம் முதலியனவாகும். வாழ்வியல் ஆய்வு நூல்களிலே மரணத்தின் பின் மனிதர் நிலை, யோகநித்திரை அல்லது அறிதுயில், தொலைவிலுணர்தல் என்னும் மறைபொருளுணர்ச்சி. மனிதவசியம் அல்லது மனக்கவர்ச்சி முதலிய நான்கு நூல்களும் மறைபொருளியலை உணர்த்தும் நூல்கள் ஆகும்.

சைவம், தமிழ் இரண்டையும் தம் இரு கண்களாகக் கருதியவர் அடிகளார். ஏனைய சமய உண்மைகளோடு சைவ சித்தாந்த உண்மைகளையும் ஒப்பு நோக்கி அடிகளார் ஆராய்ந்தார். இவ்வாராய்ச்சியின் முடிவாக, சைவ சித்தாந்தமும் செயல்முறையறிவும் என்ற ஆங்கில நூலை எழுதினார். இந்நூல் அடிகளாரின் ஆழ்ந்த சிவநெறிப் பற்றினை விளக்குவதாகும். 1911-இல் தமிழாசிரியர் பணியிலிருந்து விலகிய அடிகளார் சைவ சித்தாந்தப் பணியிலும் நூல்களை எழுதுவதிலும் தம்மை முழுதும் ஈடுபடுத்திக் கொண்டார். இல்லறத்திலிருந்து காவியுடுத்துத் துறவு பூண்டு சுவாமி வேதாசலம் ஆயினார். 1911-இல் பொது நிலைக் கழகம் என ஒன்றைத் தோற்றுவித்துச் சாதி வேறுபாடில்லாமல் பொது மக்களுக்குக் கடவுட்பற்றும் சமயப் பற்றும் உண்டாக்கும் சொற்பொழிவுகள் நடத்தினார். திருமுருகன் அச்சுக்கூடம் என ஒன்றைத் தொடங்கிப் பல நூல்களை வெளியிட்டார்.

### 4.4.1 மறைமலையடிகள் நூல்நிலையம்

அடிகளார் பெரும்பொருள் செலவிட்டு அரிதில் தேடிய நாலாயிரத்திற்கும் மேற்பட்ட நூல்களை, தம் இறுதி விருப்பஆவணத்தின்படி தமிழ் மக்களின் பொது உடைமையாக்கிச் சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தாரிடம் ஒப்புவித்துச் சென்றார். அக்கழகத்தார் தாம் ஈட்டிய பொருளைக் கொண்டு பலநூற்றுக்கணக்கான அரிய நூல்களையும் சேர்த்து, அடிகளார் பெயரால் மறைமலை அடிகள் நூல்நிலையம் என ஒரு நூல் நிலையத்தைச் சென்னையில் சிறந்த முறையில் தமிழ் மக்கள் பயன்துய்க்குமாறு நடத்தி வருகின்றனர்.

## 4.5 திரு. வி.க

தமிழ் இளைஞர் முதல் முதியோர் வரையுள்ள யாவர் நெஞ்சங்களிலும் வாழும் பெரியவர் இவர். இவரை அன்போடு திரு.வி.க.

குறிப்பு

என அழைப்பர். இவர் தமிழ்நாட்டுக்கும், தமிழ்மொழிக்கும் எண்ணிலடங்காத் தொண்டுகள் செய்துள்ளார். இவர் செங்கற்பட்டு மாவட்டம் துள்ளம் என்னும் ஊரில் 1883ஆம் ஆண்டு பிறந்தவர். இவருடைய பெற்றோர் விருத்தாசல முதலியார், சின்னம்மாள். எனினும் இவர்தம் முன்னோர் திருவாரூரைச் சேர்ந்தவராதலின் 'திரு' என்ற அடைமொழியைத் தம் பெயருக்கு முன்னால் அமைத்துக் கொண்டார். முதலில் தந்தையிடமே திண்ணைப் பள்ளியிலும், பிறகு வெஸ்லி கலாசாலையிலும் பயின்றார்.

இவருடைய தமிழாசான் யாழ்ப்பாணம் கதிரைவேற்பிள்ளை. தனியே தம் ஆசானிடம் புராணங்களையும், யாப்பிலக்கணத்தையும் மயிலை மகாவித்வான் தணிகாசல முதலியாரிடம் திருவருட்பயன், சிவப்பிரகாசம், சிவஞானபோதம் போன்ற நூல்களையும் வடமொழியையும் கற்றார். பாம்பன் சுவாமிகளிடம் உபநிடதங்களும், மருவூர்க் கணேச சாஸ்திரிகளிடம் சிவகீதையும், நீலகண்ட பாடியமும், அப்துல் கரீமிடம் திருக்குர்ஆனும் கற்றார். ஜஸ்டிஸ் சர்.டி.சதாசிவராவ் தொடர்பால் ஆங்கில அறிவும் பெற்றார். சான்றோர் பேசுமிடம் எங்கணும் சென்று கேள்விச் செல்வத்தைப் பெருக்கியும், பல்திற நூல்களை விடாது பயின்று அறிவை விசாலப்படுத்தியும் வந்தார். அந்நாளைப் பெருமக்கள் பெசன்ட் அம்மையார், மறைமலையடிகள் போன்றோர் தொடர்பும் இவரை உயர்த்தியது. இவ்விதமாகப் பெற்ற ஊற்றமே இவரை ஏற்றம் பெறச் செய்தது. வெஸ்லி கலாசாலையிலும், பள்ளியிலும் தமிழாசிரியராகத் திகழ்ந்தார்.

1917-இல் பெசன்டையும் அவரது இரு கண்களான அருண்டேல், வாடியாவையும் கைது செய்தது அரசு. உடனே அரசியலில் ஈடுபட்டு, தேசபக்தன் இதழாசிரியராகி, வேகமிக்க தமிழ் எழுத்தால் மக்களைச் சிந்திக்கவும் சீறி எழவும் தூண்டினார். அடக்குமுறையை எதிர்த்து கோகலே மண்டபத்தில் திவான் பகதூர் கேசவப் பிள்ளை தலைமையில் திராவிடரும் காங்கிரசும் என்ற தலைப்பில் பேசினார். இதுவே இவரது அரசியல் கன்னிப் பேச்சு. சென்னையில் மகாசன சங்கம் தோன்றியது. அதன் தஞ்சை மாநாட்டில் 'இனி எங்கும் எவரும் தமிழிலேயே பேசவேண்டும்' என்ற தீர்மானத்தைக் கொணர்ந்தார். இந்த மொழிப் புரட்சி காரணமாக அவரைப் புரட்சி வீரர் எனப் புகழ்ந்தனர். அம்மாநாடு ஈரோட்டில் கூடியபோது பெரியார் ஈ.வே.ரா தொடர்பு ஏற்பட்டது. சாது அச்சுக்கூடம் நிறுவி நவசக்தி வார இதழை 20-10-1920-இல் தொடங்கினார். தேசபக்திக் கனலை மூட்டினார்.

தமிழார்வத்தைப் பொங்கச் செய்தார். 1940வரை 20 ஆண்டுகள் அப்பத்திரிகையை நடத்தினார். இந்தியாவிலேயே முதன்முதல் 1918-இல் சென்னையில்தான் தொழிற்சங்கம் ஏற்பட்டது. அதில் சுந்தரனாரின் பங்கு பெரிது. போலீஸ் சங்கம், அச்சகத் தொழிலாளர் சங்கம், இரயில்வே தொழிலாளர் சங்கம் தோன்றக் காரணமானார். அரசியலிலும் தொழிலாளரியக்கத்திலும் இவரது பெரும் பகுதி வாழ்க்கை கழிந்தது. 9-

**குறிப்பு**

7-1926-இல் அரசியலைத் துறந்தார். இவரது அரசியல் குரு திலகர். சமயத் தொண்டின் நிலையமாக நிலவுவது இவர் தோற்றிய பாலசுப்பிரமணிய பக்த ஜனசபை. மாதர் சங்கம், கைம்மைப் பெண்கள் கழகம், கணிகையர் நலம் கருதும் நாகபாசத்தார் சங்கம் முதலியவை தோன்றச் செய்தார். இளமை மணம் ஒழிக்க வந்த சாரதா மசோதாவுக்கு எழுத்தாலும் பேச்சாலும் ஊக்கம் தந்தார். இவர் பணிகட்கெல்லாம் மகுடமாக அமைவது தமிழ்ப்பணி.

### 4.5.1 திரு.வி.க.வின் படைப்புகள்

இவர் நடத்திய இரண்டு இதழ்கள் தேசபக்தன், நவசக்தி ஆகியன. இயற்றிய நூல்கள் மனித வாழ்க்கையும் காந்தியடிகளும், பெண்ணின் பெருமை அல்லது வாழ்க்கைத் துணை, சீர்திருத்தம் அல்லது இளமை விருந்து, முருகன் அல்லது அழகு, சைவத் திறவு, தமிழ்த்தென்றல் (சொற்பொழிவுகள்), தமிழ்ச் சோலை (பத்திரிகைத் தலையங்கங்கள்), மேடைத் தமிழ் (மேடைப் பேச்சுகள்), அருள்வேட்டல் (செய்யுள் நூல்) ஆகியவை. இவரது உரைநடை சின்னஞ்சிறு தொடர்கள், வினாவிடை, வியங்கோள், வியப்புத் தொடர்கள், அடுக்குத் தொடர்கள், புதுச்சொல்லாக்கம், உவமை, உருவகம் போன்றவற்றைக் கொண்டு தனித்தன்மையும் எளிமையும் கொண்டு விளங்குகிறது. புதிய உரைநடையின் தந்தை என்றும் தமிழ் மேடைப் பேச்சின் தந்தை என்றும் இவர் போற்றப் பெறுகிறார். பொதுமைக் கருத்துகளையும் காலத்துக்கு ஏற்ற புதுமைக் கருத்துகளையும், தமிழ்நாட்டில் தென்றலாய் அள்ளித் தெளித்தார். தமிழாசிரியராய் இருந்து பத்திரிகை ஆசிரியராய்ப் புகழ் பெற்று, அரசியல் தலைவராய் விளங்கி, தொழிலாளர் தலைவராய்ச் சிறப்புற்றுப் படிப்படியாய் வளர்ச்சி கண்டவர். திரு.வி.க. ஐம்பது அரிய நூல்களை எழுதியுள்ளார். ”பேச்சுப் பெரும்புயலாகவும், எழுத்து எரிமலையாகவும், செய்தித்தாள் சிற்பியாகவும் ஒளிர்ந்தார். அவர் தமிழ்நாட்டுக் காந்தியாகவும், தமிழுக்கும் தமிழ் எழுத்தாளர்களுக்கும் தந்தையாகவும், தொழிலாளர்களுக்குத் தாயாகவும் விளங்கினார்” என்று கல்கி பாராட்டியுள்ளார்.

**சாதனையும் போதனையும்** திரு.வி.க. ஒரு சகாப்தம் பல்கலைக் கழகம், மூன்றெழுத்துச் சான்றோர், ஆன்ற எழுத்தாளர், அருவிப் பேச்சாளர், தேர்ந்த சிந்தனையாளர், பண்பார்ந்த பத்திரிகையாளர், உரையாசிரியர், மொழிபெயர்ப்பாளர், கவிஞர், இறைத்திருப்பணியும் தமிழ்ப் பொற்பணியும் நாட்டு நற்பணியும் ஆற்றிய நல்லார். தமிழ் முனிவர், தனக்கென வாழாப் பிறர்க்கென முயலும் பேரருள் நெஞ்சம் உடையவர். எல்லார்க்கும் எழுத்துநடை வேறு, பேச்சுநடை வேறு. இந்த இருவேறு நடையையும் ஒன்றாக்கிப் புதியதோர் நடை படைத்தவர். வாழ்வையே பேச்சும் எழுத்துமாக ஆக்கிக் கொண்டவர் இவர். இதனால்தான் படித்த அறிவாளிகளும் ஏடறியாத் தொழிலாளிகளும் இவரால் ஒருசேரக் கவரப்பட்டனர். அடிக்கன்று வாழையாகத் தோன்றிய கல்கியும் மு.வரதராசனாரும் இவருக்கு வாரிசுகளாவர். அதனால்தான்

கல்யாண சுந்தரனாரின் முதல் ஈரெழுத்தையும் தன் பெயரின் முதலெழுத்தையும் கல்கி ஸ்ரீ கல்கி என வைத்துக் கொண்டார் இரா.கிருஷ்ணமூர்த்தி (கல்கி). தாம் நடத்திய ஏடுகளில் திரு.வி.க. காந்தியடிகளின் ஆங்கிலத்தை அழகும் ஆழமும் குறையாது அப்படியே பெயர்த்துள்ளார். காந்தி இவரைப் 'பெயர்ப்பாளர்' என்றே அழைப்பார். இவரது நூற்றாண்டு விழாவினை1984ஆம் ஆண்டு ஏப்ரல் மாதம் தமிழ்நாடு அரசு தஞ்சையில் கொண்டாடியது.

**உங்கள் முன்னேற்றத்தைச் சரிபார்க்கவும்**

1. தனித்தமிழ் இயக்கம் ஏற்பட்ட ஆண்டு எது?
2. பொது நிலைக் கழகம் என்றால் என்ன?

## 4.6 உங்கள் முன்னேற்றத்தைச் சரிபார்க்கும் வினாக்களுக்கான விடைகள்

- தனித்தமிழ் இயக்கம் 1916-இல் ஏற்பட்டது.
- 1911-இல் பொது நிலைக் கழகம் என ஒன்றைத் தோற்றுவித்துச் சாதி வேறுபாடில்லாமல் பொது மக்களுக்குக் கடவுட்பற்றும் சமயப் பற்றும் உண்டாக்கும் சொற்பொழிவுகள் நடத்தினார்.

## 4.7 சுருக்கவுரை

- தமிழ் இலக்கிய வளர்ச்சியில் பழைய நூல்கள் ஓலைச்சுவடி வடிவிலிருந்து அச்சுவடிவிற்கு மாற்றப்படும் செயல், மறுமலர்ச்சியின் தொடக்கமாக அமைந்தது. பத்தொன்பதாம் நூற்றாண்டின் இடைப் பகுதியில் அச்சு ஊடகம் தமிழுக்குக் கிடைத்த நிலையில், பழைய இலக்கியங்கள் அச்சுவடிவம் பெறலாயின.
- தூய தமிழியக்கம் தோன்றிய காலத்தில் தமிழ்ப் புரவலர்கள் இடையில் அதற்குப் பெரும் வரவேற்பு இருந்தது. பலரும் தனித்தமிழ்க் கொள்கையை விரும்பி ஏற்றனர்.
- மறைமலை அடிகள் தமிழ் மக்களின் பொது உடைமையாக்கிச் சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தாரிடம் ஒப்புவித்துச் சென்றார். அக்கழகத்தார் தாம் ஈட்டிய பொருளைக் கொண்டு பலநூற்றுக்கணக்கான அரிய நூல்களையும் சேர்த்து, அடிகளார் பெயரால் மறைமலை அடிகள் நூல்நிலையம் என ஒரு நூல் நிலையத்தைச் சென்னையில் சிறந்த முறையில் தமிழ் மக்கள் பயன்துய்க்குமாறு நடத்தி வருகின்றனர்.
- திரு.வி.கா அரசியல் குரு திலகர். சமயத் தொண்டின் நிலையமாக நிலவுவது இவர் தோற்றிய பாலசுப்பிரமணிய பக்த ஜனசபை. மாதர் சங்கம், கைம்மைப் பெண்கள் கழகம், கணிகையர் நலம் கருதும்

நாகபாசத்தார் சங்கம் முதலியவை தோன்றச் செய்தார். இளமை மணம் ஒழிக்க வந்த சாரதா மசோதாவுக்கு எழுத்தாலும் பேச்சாலும் ஊக்கம் தந்தார். இவர் பணிகட்கெல்லாம் மகுடமாக அமைவது தமிழ்ப்பணி.

குறிப்பு

## 4.8 முக்கிய கருத்துப்படிமங்கள்

- தமிழ் மொழி மற்றும் இலக்கியத்தின் மறுமலர்ச்சி
- தூய தமிழ் இயக்கம்
- மறைமலையடிகள்
- திருவி.கா

## 4.9 சுயமதிப்பீட்டு பயிற்சி வினாக்கள்

**குறுகிய வினாக்களுக்கு விடையளிக்கவும்**

1. தூய தமிழ் இயக்கம் குறிப்பு வரைக?
2. மறைமலை அடிகள் பற்றி மதிப்பிடுக?

**விரிவான வினாக்களுக்கு விடையளிக்கவும்**

1. தமிழ் மொழி மற்றும் இலக்கியத்தின் மறுமலர்ச்சி பற்றி கட்டுரை வரைக?

2. திரு.வி.காவின் தமிழ்ப் பணியைப் பற்றிக் விளக்குக?

## 4.10 மேலும் படிக்க


- ஐயங்கார்,சீனிவாச்.. வு (2001), *தமிழர்களின் வரலாறு: ஆரம்ப காலத்திலிருந்து 600 கி.பி வரை.* டெல்லி

- கிருஸ்ணசுவாமி.அ, (1977) விஜயநகரப் பேரரசின் வரலாறு (கிபி1525 வரை) தமிழ்நாட்டுப் பாடநூல் நிறுவனம், அண்ணாமலைநகர்.

- ச௱மா,R.S. (2006). *பண்டைய இந்தியாவின் முந்தைய காலம்.* ஆக்ஸ்.்.போ௱ட் யுனிவர்சிட்டி பிரஸ்.

- சாஸ்திரி, ராமசாமி. (2002) *தமிழர்கள்: மக்கள், அவர்களின் வரலாறு மற்றும் கலாச்சாரம்.* புதுடெல்லி, காஸ்மோ பப்ளிகேஷன்ஸ்

- சிராஜீத்தின, (2010), *தமிழ்நாட்டு வரலாறு (கி.பி. 1987 வரை),* பாவை பப்ளிகேசன், சென்னை

- தேவநேயப்பாவணர். (1992) *பண்டைத் தமிழர் நாகரிகமும் பண்பாடும்,* கழக வெளியீடு சென்னை

- மாதவன்,சித்ரா, (2005), *தமிழ்நாட்டின் வரலாறு மற்றும் கலாச்சாரம்: தொகுதி-1 (கி.பி.1310 வரை).* டெல்லி

# தொகுதி – 2

## அறிவுசார்ந்த தமிழ் சமுதாய மதச் சிந்தனைகள்

## அலகு V

## சுந்தரம் பிள்ளை - இந்தி எதிர்ப்பு கிளர்ச்சி - உலகத் தமிழ் மாநாடு

குறிப்பு



## 5.0 முன்னுரை

இந்தித் திணிப்பு எதிர்ப்புப் போராட்டம் (யுவெை-ர்ைனெை ஐஅிழளவைழைெ யுபவையவழைளெ) என்பது இந்தி மொழியை, இந்தியாவின் ஒரே அலுவல் மொழியாக்கும் மற்றும் இந்தி மொழி பேசாத மாநிலங்களின் கல்விப் பாடத்திட்டங்களில் இந்தியைக் கட்டாயப் பாடமாக்கும் இந்திய அரசின் முயற்சிக்கு எதிராகத் தமிழக மக்களால், பெரும்பாலும் சனநாயக, அற வழிகளில் நடத்தப்பட்டப் போராட்டமாகும். 1937ஆம் ஆண்டு முதல் முறையாக இந்தித் திணிப்பு எதிர்ப்புப் போராட்டம் நடத்தப்பட்டது. அப்போது சென்னை மாகாணத்தில் முதல்முறையாக வெற்றிபெற்ற காங்கிரசுக் கட்சியின் சக்கரவர்த்தி

இராஜகோபாலாச்சாரி தலைமையில் அமைந்த அரசு, பள்ளிகளில் இந்தி படிப்பதைக் கட்டாயமாக்கியது. அதை எதிர்த்து, எதிர்கட்சியாக விளங்கிய நீதிக்கட்சியும் பெரியார் ஈ. வெ. இராமசாமியும் மூன்று ஆண்டுகள் உண்ணாநோன்பு, மாநாடுகள், பேரணிகள் மற்றும் மறியல் போராட்டங்கள் நடத்தினர். அரசின் காவல் நடவடிக்கைகளில் இரண்டு போராட்டக்காரர்கள் இறந்தனர் பெண்கள், சிறுவர்கள் உட்பட 1198 பேர் கைது செய்யப்பட்டனர். காங்கிரசு அரசு 1939ஆம் ஆண்டு பதவி விலகியதை ஒட்டி சென்னை மாகாண பிரித்தானிய ஆளுநர் “எர்ஸ்கின் பிரபு“ பிப்ரவரி 1940ஆம் ஆண்டில் இந்தக் கட்டாய இந்திக் கல்வியை விலக்கினார்.

பிரித்தானியாவிலிருந்து இந்தியா விடுதலை பெற்ற பிறகு அரசியலமைப்பு சட்டமன்றத்தில் புதிய இந்தியக் குடியரசில் நிலவ வேண்டிய அலுவல்மொழி குறித்து நீண்ட விவாதம் நடந்தது. பற்பல உரையாடல்களுக்குப் பின்னர் தேவநாகரி எழுத்துருவில் அமைந்த இந்தி அரசுப்பணி மொழியாகத் தேர்ந்தெடுக்கப்பட்டது. மேலும் அடுத்த 15 ஆண்டுகளுக்கு ஆங்கிலம் இணை அலுவல்மொழியாக விளங்கும் என்றும் அதன் பின்னர் இந்தி மொழி மட்டுமே அரசுப்பணிகளில் பயன்படுத்தப்படும் என்றும் ஏற்றுக்கொள்ளபட்டது. புதிய இந்திய அரசியலமைப்பு சனவரி 26, 1950 அன்று நடப்பிற்கு வந்தது. ஆகவே அரசியலமைப்பில் ஏற்றுக்கொண்டபடி 1965 ஆண்டிலிருந்து இந்தி மட்டுமே அரசுப்பணிமொழியாக விளங்க அரசு மேற்கோண்ட முயற்சிகள் இந்தி பேசாத மாநிலங்களில் எதிர்ப்பலைகளை உண்டாக்கின. தமிழகத்தில் திராவிட முன்னேற்றக் கழகம் இந்த எதிர்ப்பில் முன்னணியில் இருந்தது. இந்தக் கவலைகளை நீக்கும் விதமாக அப்போதைய இந்தியப் பிரதமர் ஜவஹர்லால் நேரு 1963ஆம் ஆண்டில் கொண்டு வந்த அரசுப்பணிமொழி சட்டத்தில் 1965ஆம் ஆண்டிற்குப் பிறகும் ஆங்கிலம் அரசுமொழியாக விளங்க வழி செய்தார். ஆயினும் அச்சட்டத்தின் உள்ளடக்கம் தி.மு.க விற்கு ஏற்புடையதாக இருக்கவில்லை. அவரது வாய்மொழி வாக்குறுதிகள் பிந்தைய அரசுகளால் ஏற்கப்படாமல் போகலாம் என்ற அச்சத்தினை வெளியிட்டனர்.

26 சனவரி,1965 நாள் நெருங்கிவந்த காலத்தில் தமிழகத்தில் இந்தித் திணிப்பு எதிர்ப்புப் போராட்டம் வலுக்கத் துவங்கியது. அவ்வாண்டு குடியரசு நாளை கருப்புதினமாகக் கொண்டாட தி.மு.க அழைப்பு விடுத்திருந்தது. போராட்டத்தில் கல்லூரி மாணவர்கள் பெரிதும் ஈடுபட்டனர். மதுரையில் 25 சனவரியன்று அவர்களுக்கும் காங்கிரசு கட்சியினர் சிலருக்கும் இடையே எழுந்த கைகலப்பு பெரும் கலவரமாக வெடித்தது. மாநிலத்தின் பிற பகுதிகளுக்கும் பரவிய இக்கலவரம் காவலர்களால் அடக்க முடியாத அளவில் அடுத்த இரண்டு மாதங்கள் தொடர்ந்து நடந்தது. பரந்த அளவில் வன்முறை, தீவைப்பு எனப்

போராட்டக்காரர்களும் தடியடி, துப்பாக்கிச்சூடு என மாநிலக் காவல் துறையினரும் மோதினர்.

குறிப்பு

இக்கலவரங்களில் இரு காவல்துறையினர் உட்பட 70 பேர்கள் (அதிகாரப்பூர்வமாக) இறந்தனர். நிலைமையைக் கட்டுக்குள் கொண்டுவர அப்போதைய இந்தியப் பிரதமர் லால் பகதூர் சாஸ்திரி, இந்தி பேசாத மாநிலங்கள் விரும்பும் வரை ஆங்கிலமும் அரசுப்பணிகளில் இணைமொழியாக இருக்கும் என்ற உறுதிமொழி அளித்தார். இந்த உறுதிமொழியை அடுத்து மாணவர் போராட்டம் ஓய்ந்தது. 1965ஆம் ஆண்டு இந்தித் திணிப்பு எதிர்ப்புப் போராட்டம் மாநில அரசுகளின் அரசியல் மாற்றங்களுக்கு வித்திட்டது. 1967ஆம் ஆண்டு நடந்த பொதுத்தேர்தலிலும் சட்டப்பேரவைத் தேர்தலிலும் தி.மு.க பெரும் வெற்றி கண்டது. இந்தத் தோல்விக்குப் பிறகு மாநிலத்தில் மீண்டும் காங்கிரசால் ஆட்சியைக் கைப்பற்ற இயலவில்லை. 1967ஆம் ஆண்டு அமைந்த இந்திரா காந்தி தலைமையிலான இந்திய அரசு, அரசுப்பணிமொழிச் சட்டத்தில் என்றென்றும் ஆங்கிலம், இந்தி ஆகிய இரு மொழிகளும் அரசுமொழிகளாக விளங்கும் வகையில் திருத்தம் கொண்டுவந்தது.

1964 சனவரியின் ஆரம்பத்தில் புதுதில்லியில் நடந்த 26வது அகில உலகக் கீழைத்தேயக் கல்வி ஆய்வாளர் மாநாட்டின்போதுதான் அனைத்துலகத் தமிழாராய்ச்சி மன்றம் உருவாகியது. தமிழ், திராவிட ஆய்வுகளில் ஈடுபாடுள்ளவரும் மாநாட்டிற் கலந்து கொண்டவர்களுமான இருபத்தாறு பேர், பேராசிரியர் தனிநாயக அடிகளாரும் பேராசிரியர் வ. ஐ. சுப்பிரமணியமும் விடுத்த அழைப்பினை ஏற்றுச் ஜனவரி 7 ஆம் நாள் உத்தியோகப் பற்றற்ற முறையிலே புதுதில்லியிற் கூடி அனைத்துலகத் தமிழ் ஆராய்ச்சி மன்றத்தினை தோற்றுவித்தனர்.

## 5.1 நோக்கம்

மனோன்மணீயம் பெ. சுந்தரம் பிள்ளை (ஏப்ரல் 4, 1855 - ஏப்ரல் 26, 1897) மனோன்மணீயம் என்ற புகழ்பெற்ற நாடக நூலைப் படைத்தவர்.

## 5.2 சுந்தரம் பிள்ளை

### 5.2.1 வாழ்க்கைக் குறிப்பு

இந்தியாவின் கேரளா மாநிலத்தில் ஆலப்புழா என்னும் ஊரில் பெருமாள் பிள்ளை என்பவருக்கும் மாடத்தி அம்மாளுக்கும் 1855ம் ஆண்டு சுந்தரம் பிள்ளைப் பிறந்தார். இளமையிலேயே தேவார திருவாசகங்களையும் சமய வழிபாட்டு நூல்களையும் கற்றார். இவரது தமிழாசிரியராக விளங்கியவர் நாகப்பட்டினம் நாராயணசாமிப் பிள்ளை. இவரிடமே மறைமலை அடிகள் தமிழ் படித்தவர் என்பது

குறிப்பு

குறிப்பிடத்தக்கது. 1876 ஆம் ஆண்டு பி.ஏ. தேர்வில் வெற்றி பெற்றார். அடுத்த ஆண்டில் சிவகாமி அம்மாள் என்பவரைத் திருமணம் புரிந்தார்.

### 5.2.2 ஆசிரியப் பணி

1877 இல் தனது ஆசிரியப் பணியை ஆரம்பித்தார். திருநெல்வேலி ஆங்கிலத் தமிழ்க் கல்விச்சாலையின் தலைவராக இரண்டாண்டுகள் பணியாற்றி, அக்கல்விச் சாலையே பின்னர் இந்துக் கல்லூரியாக உயர்வதற்கு உறுதுணையாக இருந்தார், பின்னர் திருவனந்தபுரம் அரசர் கல்லூரியில் தத்துவத்துறை ஆசிரியராக சேர்ந்தார். 1880இல் எம்.ஏ. பட்டம் பெற்றார். அக்கல்லூரியில் தத்துவத்துறைப் பேராசிரியராக இருந்த முனைவர் ஹார்வி துரையின் தொடர்பு இவருக்குக் கிடைத்தது.

மூன்றாண்டுகள் ஆசிரியராகப் பணியாற்றிய பின்பு திருவனந்தபுரம் அரசர் அரண்மனை வருவாய்த் துறையின் தனி அலுவலராக (ஊழஅஅளைளஐைநெச ழக ளுநியசயவந சுநஎநரெந) நியமிக்கப்பட்டார். 1885 இல் டாக்டர் ஹார்வி துரை பேராசிரியர் பணியிலிருந்து ஓய்வு பெற்றபோது சுந்தரம் பிள்ளையை தம் பதவிக்குப் பரிந்துரைத்தார். இதனை ஏற்று மீண்டும் திருவனந்தபுரம் அரசர் கல்லூரியில் தத்துவத்துறையின் தலைமைப் பேராசிரியரானார். அப்பணியை அவர் இறுதிவரையில் திறம்பட வகித்தார். 1878இல்தாயாரையும், 1886 இல் தந்தையையும் இழந்தார். இவருடைய மகன் நடராசப்பிள்ளை பின்னாளில் கேரள அரசில் அமைச்சராகவும் இருந்தார்.

**சமயப்பணி:** திருவனந்தபுரத்தில் சைவப்பிரகாச சபையினைத் தோற்றுவித்து சமயத் தொண்டாற்றி வந்தார். இவருக்கு கு.ஆ.ரு., கு.சு.ர், ளு.ஆ.சு.யு.ளு, ராவ்பகதூர் போன்ற பல பட்டங்கள் கிடைத்தன.

### 5.2.3 தமிழ்ப்பணி

ஒப்பற்ற நாடக நூலான மனோன்மணீயம் இவரால் 1891 ஆம் ஆண்டில் எழுதி வெளியிட்டார். சுந்தரம் பிள்ளையின் ஞான ஆசிரியராக இருந்தவர் கோடக நல்லூர் சுந்தர சுவாமிகள் ஆவர். இத்தொடர்பே மனோன்மணீயத்தில் சுந்தர முனிவர் என்னும் பாத்திரப் படைப்பிற்குக் காரணமாக இருந்தது. கல்வெட்டு ஆராய்ச்சியிலும் ஈடுபட்டு திருஞானசம்பந்தர் காலவாராய்ச்சி செய்து அவ்வாராய்ச்சியினை 1894 ஆம் ஆண்டில் வெளியிட்டார். பத்துப்பாட்டு பற்றிய திறனாய்வினை ஆங்கிலத்தில் எழுதிச் சென்னைக் கிறித்துவக் கல்லூரி இதழில் வெளியிட்டார்.

**தமிழ்த்தாய் வாழ்த்துப் பாடல்:** மனோன்மணீயத்தில் இடம்பெற்ற தமிழ்த் தாய் வணக்கப் பாடலான நீராருங் கடலுடுத்த நிலமடந்தைக் கெழிலொழுகும் என்ற பாடல் தமிழ் நாடு அரசினரால் தமிழ்த்தாய் வாழ்த்துப் பாடலாக ஜூன் 1970 இல் அறிவிக்கப்பட்டது.

**இறுதி நாட்கள்:** பேராசிரியர் சுந்தரம் பிள்ளை தாம் வாழ்ந்த மனைத் தோட்டத்திற்குத் தம் ஆசிரியர் ஹார்வி அவர்கள் பெயரையே இட்டமையும் தம் மனோன்மணீய நூலினை அவருக்கே உரிமையாக்கியதும் குறிப்பிடத்தக்கது. பேராசிரியர் சுந்தரம் பிள்ளை தனது 42வது வயதில் 1897 26 ஏப்ரல் அன்று மறைந்தார்.

## 5.3 இந்தி எதிர்ப்பு கிளர்ச்சி

இந்திய விடுதலைக்குப் பின் உருவான இந்தியாவின் பொது மொழியாக இந்துசுத்தானி மொழியை பரிந்துரைக்கப்பட்டது. 1925ல் இந்திய தேசிய காங்கிரசு கட்சி, தன் அலுவல் மொழியை இந்துஸ்தானியிலிருந்து, ஆங்கில மொழிக்கு மாறியது. இந்துஸ்தானி மொழியின் ஆதரவாளரகளான மகாத்மா காந்தி மற்றும் ஜவகர்லால் நேருவும், இந்துஸ்தானி மொழி பேசாத மாகாணங்களில் இந்துஸ்தானி மொழியை பரப்ப காங்கிஸ் கட்சி கட்சியினர் பரப்ப வேண்டும் என விரும்பினர். தமிழர்களை, வட இந்தியர்களுக்கு அடிமைத்தனம் செய்வதற்கான முயற்சியின் ஒரு பகுதியே இந்தி திணிப்பு என ஈ. வெ. இராமசாமி கருதினார். 1937ல் இந்திய தேசிய காங்கிரசு கட்சி, சென்னை மாகாண சட்டமன்றத் தேர்தலில் வெற்றி பெற்று ஆட்சி அமைத்தது. 14 சூலை 1937ல் இந்தி மொழி ஆதரவாளரான இராசகோபாலாச்சாரி சென்னை மாகாண முதலமைச்சராகப் பொறுப்பேற்றார். இராசகோபாலசாரி சென்னை மாகாண முதலமைச்சராக பதவியேற்ற ஒரு மாதத்திற்குள், 11 ஆகஸ்டு 1937ல் உயர்நிலைப் பள்ளிகளில் மாணவர்களுக்கு இந்தி மொழி கட்டாயமாகக் கற்பிக்கப்பட வேண்டும் எனும் அறிவித்தார்.

ஈ.வெ. இராமசாமி மற்றும் நீதிக்கட்சியின் தலைவர் ஏ.டி. பன்னீர் செல்வம் ஆகியோர் உடனடியாக பள்ளிகளில் இந்தி மொழி கற்பிக்கும் அரசின் ஆனையை எதிர்த்து அறிக்கை விட்டனர். எனவே சென்னை மாகாணம் முழுவதும் 4 அக்டோபர் 1937 முதல் இந்தித் திணிப்பு எதிர்ப்புப் போராட்டம் அறிவிக்கப்பட்டது. 21 ஏப்ரல் 1938ல், சென்னை மாகாண முதலமைச்சர் இராசகோபாலாச்சாரி, 125 உயர்நிலைப்பள்ளிகளில் கட்டாயமாக இந்தி மொழி கற்பிக்கப்பட வேண்டும் என்ற அரசாணையை வெளியிட்டார். இராஜாஜியின் இந்த முயற்சி, தமிழ் மொழியை அழிக்கவும், இந்தி மொழியை வளர்க்கவும் வழிவகுக்கும் என இந்தி எதிர்ப்பாளர்களால் கருதப்பட்டது. எனவே இராஜாஜி மற்றும் இந்தி திணிப்புக்கும் எதிராக சென்னை மாகாணம் முழுவதும் போராட்ட ங்கள் துவங்கியது. மேலும் சூலை 1ம் தேதி இந்தி மொழி நாள் என்று அறிவிக்கப்பட்டதற்கு எதிராகவும் இந்தி எதிர்ப்பு ஊர்வலங்கள், உண்ணாநோன்புகள், கருப்புக் கொடி ஏந்தி விளக்கக் கூட்டங்கள் நடத்துதல், அரசு அலுவலகங்கள் முன் நின்று மறியல் செய்தல், இந்தி எதிர்ப்பு மாநாடுகள் நடத்துதல் மூலம் இந்தி திணிப்புக்கு குரல் எழுப்பப்பட்டது. சென்னை மாகாணத்தின் நிர்வாகப் பகுதிகளில், தமிழ் மொழி பேசும் மாவட்டங்களில் இந்தி எதிர்ப்பு போராட்டங்கள் வலுப்பெற்றது. பிப்ரவரி 1940 இந்தி மொழி திணிப்பு

அரசாணையை திரும்பப் பெறும் வரை இந்தி திணிப்பு எதிர்ப்பு போராட்டங்கள் நடைபெற்றது. இந்தி எதிர்ப்புப் போராட்டத்தில் தாலமுத்து நடராசன் உயிரிழந்தனர். ஈ. வெ. இராமசாமி உள்ளிட்ட ஏறத்தாழ 1,200 பொதுமக்கள் சிறையில் அடைக்கப்பட்டனர்.

### 5.3.1 1937ல் முதலாம் எதிர்ப்பு போராட்டங்கள்

1937ஆம் ஆண்டு தேர்தலில் காங்கிரசு வெற்றிபெற்று சென்னை மாகாணத்தின் , முதலமைச்சராக ராஜாஜி 14 சூலை 1937ஆம் நாள் பதவியேற்றார். தேர்தல் பிரச்சாரத்தின்போதே இந்தி பயிலவேண்டியதின் தேவையை விளக்கி வந்தார். அரசுப்பணிகள் குறைவாகவே இருக்கும். தென்னிந்தியர்கள் வட மாநிலங்களில் தனியார்துறையில் வேலை தேட இந்தி பயில்வது மிகத்தேவையானது என (சுதேசமித்திரன் பத்திரிகையில் மே 6, 1937) எழுதியிருந்தார். அதன்படியே தாம் பதவிக்கு வந்த ஒரு மாத காலத்திலேயே 11 ஆகஸ்டு 1937 அன்று பள்ளிகளில் இந்தி கட்டாயமாக்கவிருப்பதைக் கொள்கை அறிக்கையாக வெளியிட்டார். 1938 ஆம் ஆண்டு ஜூன் மாதம் முதலாக ஆறு, ஏழு, எட்டு வகுப்புகளில் படிக்கும் மாணவ மாணவியருக்கு இந்தி கட்டாயப் பாடமாக்கப்போவதாக அறிவித்தார். அம்மாணவர்கள் இந்தியைக் கட்டாயமாகப் பயின்று அதில் தேர்வும் எழுதி போதிய மதிப்பெண் பெற்றால் மட்டுமே அடுத்த வகுப்பிற்குப் போக முடியும். முதலில் நூறு பள்ளிகளுக்கு இத்திட்டத்தை வெள்ளோட்டம் பார்க்கப்போவதாக அரசு அறிவித்தது.

1930களின் துவக்கத்திலேயே இந்துஸ்தானி சேவாதள், இந்துஸ்தானி இதாஷி சபா போன்ற இயக்கங்களின் முயற்சியால் கட்டாய இந்திப் பாடத்தை நீதிக்கட்சியின் உள்ளாட்சி அரசாங்கங்கள் சென்னை மாகாணத்தின் சில பள்ளிகளில் அறிமுகப்படுத்தியிருந்தன. ராஜாஜியின் இந்தச் சட்டத்தை எதிர்த்து முதலாவதாக, மறைமலை அடிகள், பாவேந்தர் பாரதிதாசன் மற்றும் முத்தமிழ் காவலர் கி. ஆ. பெ. விசுவநாதம் ஆகியோர் திருச்சியில் முதலாம் இந்தித் திணிப்பு எதிர்ப்பு மாநாட்டை நடத்தினார்கள். சென்னையில் நீதிக்கட்சியைச் சேர்ந்த ஏ. டி. பன்னீர் செல்வம், ஈ.வே.ரா பெரியார் ஆகியோர் தலைமையில் போராட்டங்களும், பேரணிகளும் நடைபெற்றன. மேலும் மாணவர்கள், வழக்குரைஞர்களின் புறக்கணிப்பு மற்றும் பேரணிகளின் விளைவாக தீவிரமாகப் போராட்டம் பரவியது. இந்த எதிர்ப்புகளுக்கு இடையே ராஜாஜி 21 ஏப்ரல், 1938ஆம் ஆண்டு 125 உயர்நிலைப்பள்ளிகளில் இந்தியைக் கட்டாயப் பாடமாக்கும் அரசாணையை வெளியிட்டார். அவரது பிடிவாதம் போராட்டக்காரர்களால் தமிழை அழித்து இந்தியை வளர்க்கும் முயற்சியாகக் கருதப்பட்டது. ராஜாஜி மற்றும் இந்திக்கு எதிராக மாநில அளவில் எதிர்ப்பு கிளம்பியது. 3, திசம்பர் 1938 இந்தி எதிர்ப்பு நாளாக கடைப்பிடிக்கப்பட்டது. சென்னை மாகாணத்தின் தமிழ் பேசும் மாவட்டங்களில் போராட்டம் தீவிரமடைந்தது. 1939ல் பேரணியில் பங்கேற்றதற்காக காவல் அதிகாரிகளால் கைது செய்யப்பட்ட நடராசன் மற்றும் தாலமுத்து ஆகியோர் சிறைப்பட்ட நிலையிலேயே இறந்தனர்.

பிற்பாடு இவர்கள் மொழிப்போர் தியாகிகள் என்றழைக்கப்பட்டனர். பெரியார் உட்பட 1200 பேர் கைது செய்யப்பட்டு சிறையில் அடைக்கப்பட்டனர். மேலும் வலுவுற்ற எதிர்ப்பின் காரணமாக அந்தச் சட்டம் கைவிடப்பட்டது.



குறிப்பு

**1940-1950 காலகட்டங்களில்:** 1940-46 ஆண்டுகளில் இந்தித் திணிப்பு எதிர்ப்பு உணர்வைத் திராவிடர் கழகமும் பெரியாரும் உயிரூட்டி வந்தனர். அரசு இந்திக்கல்வியைக் கட்டாயப் பாடமாக்கத் துணியும்போதெல்லாம் இந்தித் திணிப்பு எதிர்ப்பு போராட்டங்கள் நடத்தி அதனைத் தடுப்பதில் வெற்றி கண்டனர். இந்த காலகட்டத்தில் மிகத்தீவிரமான போராட்டம் 1948-49 ஆம் ஆண்டுகளில் நடந்தது. இந்தியா விடுதலை பெற்ற பின்னர் காங்கிரசு தலைமையிலான புதிய இந்திய அரசு, இந்தியைப் பள்ளிகளில் கட்டாயமாக்க மாநிலங்களை வற்புறுத்தியது. அதன்படி சென்னை மாகாணத்தில் ஓமந்தூர் ராமசாமி ரெட்டியார் தலைமையிலான காங்கிரசு அரசு 1948ஆம் ஆண்டு கட்டாயமாக்கியது. பெரியாரின் இந்தித் திணிப்பு எதிர்ப்புப் போராட்டத்திற்கு இம்முறை காங்கிரசில் இருந்த ம.பொ. சிவஞானம் மற்றும் திரு.வி.க தங்கள் முந்தைய இந்தி ஆதரவுநிலைக்கு மாறாக ஆதரவளித்தனர்.

ஜூலை 17, 1948ல் திராவிடர் கழகம் (தி.க) ஒரு அனைத்துக் கட்சி இந்தித் திணிப்பு எதிர்ப்பு மாநாட்டைக் கூட்டி இந்தி கட்டாயப் பாடமாக்கப்படுவதற்கு எதிர்ப்பு தெரிவித்தது. 1937-40ல் நடந்தது போலவே பேரணிகள், கருப்புக் கொடி போராட்டங்கள், அடைப்புகள் ஆகியவை நடத்தப்பட்டன. அப்போது கவர்னர் ஜெனரலாக இருந்த இராசாசி ஆகஸ்ட் 23ம் தேதி சென்னை வந்த போது திராவிடர் கழகத்தினர் அவருக்கு கறுப்புக்கொடி காட்டினர். இதற்காக அண்ணாதுரை, பெரியார் உட்பட பல தி.க.வினர் ஆகஸ்ட் 27 அன்று கைது செய்யப்பட்டனர். பின் அவர்கள் விடுதலை செய்யப்பட்டாலும், போராட்டம் தொடர்ந்தது. டிசம்பர் 18 ஆம் தேதி பெரியார் மீண்டும் கைது செய்யப்பட்டார். ஆனால் விரைவில் அரசுக்கும் போராட்டக்காரர்களுக்கும் சமரச உடன்பாடு ஏற்பட்டது. போராட்டக்காரர்கள் தங்கள் போராட்டத்தைக் கைவிட்டனர் அரசும் அவர்கள் மீது தொடுத்திருந்த வழக்குகளைத் திரும்பப் பெற்றுக்கொண்டது. பின்னர் இந்திப் பாடத்தை 1950-51 கல்வியாண்டிலிருந்து விருப்பப்பாடமாக மாற்றி விட்டது. இந்தி கற்கவிரும்பாத மாணவர்கள் இந்தி வகுப்புகளின் போது பிற செயல்பாடுகளில் ஈடுபட அனுமதிக்கப்பட்டனர்.

### 5.3.2 அலுவல்மொழி சட்டம் 1963

இந்தியை முதன்மை அலுவல்மொழியாக மாற்றிட அரசியலமைப்பின் பகுதி ஓஏஜஜ குறிப்பிட்ட வரையறை நெருங்கும் வேளையில் நடுவண் அரசு இந்தியின் பயன்பாட்டை அரசு

செயல்பாடுகளில் கூடுதலாக்கும் முயற்சிகளைத் தீவிரப்படுத்தியது. 1960இல் அரசு அலுவலகங்களில் இந்தி தட்டச்சு மற்றும் சுருக்கெழுத்துப் பயிற்சிகள் கட்டாயமாக்கப்பட்டன. அதே ஆண்டு குடியரசுத் தலைவர் ராஜேந்திர பிரசாத், பந்த் குழுவின் பரிந்துரைகளை ஏற்றுக்கொண்டு, இந்தி கலைச்சொற்கள் மொழிபெயர்ப்பு, அரசு நடவடிக்கை மற்றும் சட்ட ஆவணங்களின் மொழிபெயர்ப்பு, நடுவண் அரசு அலுவலகங்களில் இந்திக் கல்வி மற்றும் இந்தி மொழியை பரப்புவதற்கான வழிமுறைகள் ஆகியவற்றிற்கு வழி செய்யும் ஆணை ஒன்றை வெளியிட்டார். 1959ஆம் ஆண்டு நேரு கொடுத்த வாக்குறுதிக்கு சட்ட ஏற்பு கொடுக்கும் வண்ணம் அலுவல்மொழி சட்டம் 1963ஆம் ஆண்டு இயற்றப்பட்டது. இதை மன்றத்தில் அறிமுகப்படுத்தும்போது நேரு ”கடந்த கால நிகழ்வுகளைக் கருத்தில் இருத்தி, அரசியலமைப்பில் 1965 ஆம் ஆண்டுக்குப் பிறகு ஆங்கிலத்தைத் தொடர்வதில் உள்ள தடங்கல்களை நீக்கும் வண்ணம் இந்த வரைவுச்சட்டம் கொண்டுவரப்படுகிறது. இது அந்த கட்டுப்பாட்டை நீக்கும்” என்று கூறினார்

### 5.3.3 இந்தித் திணிப்பு எதிர்ப்பு போராட்டம் 1965

இந்தி தன் அலுவல் மொழியாக மாறும் நாளான சனவரி 26 நெருங்க நெருங்க தமிழ்நாட்டில் இந்தித் திணிப்பு அச்சங்கள் மேலோங்கி எதிர்ப்பாளர்கள் எண்ணிக்கைப் பெருகி போராட்டச் சூழல் உருவானது. சனவரி மாதம் அனைத்து இந்தித் திணிப்பு எதிர்ப்பு மாணவர் குழுக்களையும் ஒருங்கிணைக்க தமிழக மாணவர்கள் இந்தி எதிர்ப்புச் சங்கம் என்ற அமைப்பு உருவாக்கப்பட்டது. அதன் உறுப்பினர்களாகத் தமிழகமெங்கிலும் உள்ள கல்லூரிகளின் மாணவர் சங்க தலைவர்கள் 18 பேர் இருந்தனர். அவர்களில் சிலர், பெ. சீனிவாசன், கா. காளிமுத்து, நா. காமராசன், பா. செயப்பிரகாசம், ரவிசந்திரன், திருப்பூர் சு. துரைசாமி, சேடப்பட்டி ஆர். முத்தையா, துரை முருகன் (சென்னை பச்சையப்பன் கல்லூரி சார்பில்), கே. ராஜா முகமது, நாவளவன், எம். நடராஜன், எல்.கணேசன், உலோ. செந்தமிழ்க்கோதை, சி. ப. வேந்தன் (கிண்டிப் பொறியியல் கல்லூரி சார்பில்) ஆகியோர் ஆவார். மாணவர்களின் அச்சங்களைக் குறித்து விளக்கமளிக்கும் வகையில் இந்தியன் எக்ஸ்பிரஸ் நாளிதழ் தனது 6 பிப்ரவரி 1965 தலையங்கத்தில் இவ்வாறு கூறியது.

**1967 ஆண்டு திருத்த மசோதா:** லால்பகதூர் சாஸ்திரி சனவரி 1966ல் உருசியாவில் நடந்த அமைதிப் பேச்சுகளின்போது மரணமடைந்தார். அவரை அடுத்து இந்திரா காந்தி பிரதமராகப் பதவியேற்றார். 1967ஆம் ஆண்டு நடந்த பொதுத்தேர்தலில் காங்கிரசிற்கு குறைந்த பெரும்பான்மையே கிடைத்தது. தமிழ்நாட்டில் காங்கிரசு தோற்கடிக்கப்பட்டு திமுக ஆட்சிக்கு வந்தது. நவம்பர் 1967இல் புதியதாக சட்டத்திருத்தம் கொண்டுவர முயற்சிகள் மேற்கொள்ளப்பட்டன. 27 நவம்பரில் நாடாளுமன்றத்தில் வரைவுச்சட்டம்

அறிமுகப்படுத்தப்பட்டது 16 திசம்பர் அன்று நிறைவேற்றப்பட்டது. (ஆதரவு-205, எதிர்ப்பு - 41) குடியரசுத்தலைவரின் ஒப்புதலை 8 சனவரி 1968ல் பெற்று நடைமுறைக்கு வந்தது. இந்த சட்டத்திருத்தம் 1963ஆம் ஆண்டு சட்டத்தின் பகுதி மூன்றை மாற்றி அனைத்து அலுவல் நடவடிக்கைகளிலும் காலவரையன்றி மெய்நிகர் இருமொழிக் கொள்கையை (ஆங்கிலம் மற்றும் இந்தி) கடைபிடிக்க உறுதி செய்துத.

**1968 ஆண்டு போராட்டம்** 1967ஆம் ஆண்டின் சட்டதிருத்தம், மும்மொழித் திட்டத்தினைக் குறித்த கவலைகளை நீக்காததால் தமிழ்நாட்டின் இந்தித் திணிப்பு எதிர்ப்பாளர்கள் திருப்தியடையவில்லை. ஆயினும் திமுக ஆட்சியில் இருந்ததால் மீண்டும் தங்கள் போராட்டங்களைத் துவக்கத் தயங்கினார்கள். தமிழ்நாடு இந்தி எதிர்ப்புப் போரட்டச் சங்கம் பல பிரிவுகளாகப் பிளவுபட்டது. மிதவாதிகள் அண்ணா துரையின் அரசை ஆவன செய்ய விடவேண்டும் என்ற கருத்துடையவர்களாக இருந்தனர். தீவிரவாத பிரிவுகள் போராட்டத்தை மீண்டும் துவக்கின. மும்மொழித் திட்டத்தைக் கைவிட வேண்டும் இந்திக் கல்வியை நீக்க வேண்டும் தேசிய மாணவர் படையில் (ஊஊ) இந்தி ஆணைகள் இடுவது நிறுத்தப்பட வேண்டும் இந்தித் திரைப்படங்கள், பாடல்கள் தடை செய்யப்பட வேண்டும் தென்னிந்தியாவில் இந்தியைப் பரப்ப நிறுவப்பட்ட தட்சிண இந்தி பிரசார சபை மூடப்பட வேண்டும் என்ற கோரிக்கைகளுடன் போராட்டத்தில் இறங்கினர்.

19 திசம்பர் 1967 அன்று போராட்டம் துவங்கியது. 21 திசம்பர் அன்று போராட்டம் வன்முறையாக மாறியது. அண்ணாதுரை நிலமையைக் கட்டுப்படுத்த போராட்டக்காரர்களின் கோரிக்கைகளை ஏற்றார். 23 சனவரி 1968 அன்று தமிழ்நாடு சட்டப் பேரவையில் இதற்கான தீர்மானம் நிறைவேற்றப்பட்டது. கீழ்கண்ட முடிவுகள் இதில் உள்ளடங்கியிருந்தது.

- மும்மொழித் திட்டம் கைவிடப்பட்டு இந்தி முழுமையாக கல்வித் திட்டதிலிருந்து விலக்கப்பட்டது.
- தமிழும் ஆங்கிலமும் மட்டுமே பயிற்றுவிக்கப்பட்டது.
- தேசிய மாணவர் படையில் இந்தி ஆணைச்சொற்கள் விலக்கப்பட்டன.
- அனைத்துக் கல்லூரிகளிலும் தமிழ்வழிக் கல்வி அறிமுகப்படுத்தப்படும்.
- ஐந்து ஆண்டுகளுக்குள் தமிழ் அலுவல்மொழியாக அரசு நிர்வாகத்தின் அனைத்துத் துறைகளிலும் நடைமுறைப்படுத்தப்படும்.
- நடுவண் அரசை இந்திக்கு அளிக்கப்படும் தனிநிலையை முடிவுக்குக் கொண்டுவந்து அனைத்து மொழிகளுக்கும் சமநிலை அளிக்க வற்புறுத்தியது.

- அரசியலமைப்பின் எட்டாவது அட்டவணையில் உள்ள அனைத்து மொழிகளின் வளர்ச்சிக்கு நிதி உதவி அளித்திட இந்திய அரசைக் கோரியது.

**குறிப்பு**

இந்த நடவடிக்கைகளால் இந்தி எதிர்பாளர்கள் அமைதியடைந்து மாநிலத்தில் இயல்பு நிலை திரும்பியது.

## 5.4 உலகத் தமிழ் மாநாடு

உலகத் தமிழாராய்ச்சி மாநாடு என்பது உலகில் பல்வேறு நாடுகளில் பணியாற்றி வரும் தமிழறிஞர்களை ஒருங்கிணைத்து தமிழ் ஆராய்ச்சியை ஒருமுகப்படுத்தவும், வளப்படுத்தவும் தமிழறிஞர்கள் கூடி நடத்தும் உலக மாநாடு ஆகும். தவத்திருதனிநாயகம் அடிகளாரின் முயற்சியால் 1964-ம் ஆண்டு, தில்லியில் ஆரம்பிக்கப்பட்ட உலகத் தமிழாராய்ச்சி மன்றம் 2 ஆண்டுகளுக்கு ஒருமுறை உலகத் தமிழ் மாநாடு நடத்த வேண்டுமென்று வரையறுத்துக் கொண்டது. 1964 ஜனவரியின் ஆரம்பத்தில் புதுதில்லியில் நடந்த 26வது அகில உலகக் கீழைத்தேயக் கல்வி ஆய்வாளர் மாநாட்டின் போது தான் அனைத்துலகத் தமிழாராய்ச்சி மன்றம் உருவாகியது. தமிழ், திராவிட ஆய்வுகளில் ஈடுபாடுள்ளவரும் மாநாட்டிற்கு கலந்து கொண்டவர்களுமான இருபத்தாறு பேர், பேராசிரியர் தனிநாயக அடிகளாரும் பேராசிரியர் வ. ஐ. சுப்பிரமணியமும் விடுத்த அழைப்பினை ஏற்றுச் ஜனவரி 7 ஆம் நாள் உத்தியோகப் பற்றற்ற முறையிலே புதுதில்லியில் கூடி அனைத்துலகத் தமிழ் ஆராய்ச்சி மன்றத்தினை தோற்றுவித்தனர்.

- முதல் மாநாடு மலேசியா 1966
- இரண்டாம் மாநாடு சென்னை 1968
- மூன்றாம் மாநாடு பாரிஸ் 1970
- நான்காம் மாநாடு இலங்கை 1974
- ஐந்தாம் மாநாடு மதுரை 1981
- ஆறாம் மாநாடு மலேசியா 1987
- ஏழாம் மாநாடு மொரிசியஸ் 1989
- எட்டாம் மாநாடு தஞ்சாவூர் 1995
- ஒன்பதாம் மாநாடு மலேசியா 2015

| மாநாடு | மாநாடு நடைபெற்ற இடமும் விவரமும் |
|---|---|
| முதல் மாநாடு | தனிநாயக அடிகளார் மலேசிய அரசு தமிழ்ச் சமூகத்திற்கு அளித்த ஆதரவின் துணையோடு பிரம்மாண்டமான முறையிலே முதல் மாநாடு கோலாலம்பூரிலே 1966 ஏப்ரல் 16-23 தேதிகளில் நடத்தப்பட்டது. |
| இரண்டாம் மாநாடு | எம் . பக்தவத்சலம் முன்பு கோலாலம்பூரிலே விடுத்த அழைப்பினை ஏற்றுச் சென்னையிலே திமுக இரண்டாவது அனைத்துலகத் தமிழாராய்ச்சி மாநாட்டினை நடத்த |

| | |
|---|---|
| | முன்வந்தது. 1968 ஆம் ஆண்டு சனவரி 3-10 ஆம் நாட்களில் சென்னையிலே நடந்தது. |
| **மூன்றாவது மாநாடு** | பேராசிரியர் ஜீன் பிலியோசா பாரிசிலே மூன்றாவது அனைத்துலகத் தமிழாராய்ச்சி மாநாட்டினை 1970 இலே நடத்தினார். முன்னைய இரு மாநாடுகளுக்கும் பாரீஸ் மாநாட்டிற்கும் பெரும் வித்தியாசம். சலசலப்பின்றி வழமை போல் நடைபெறும் கருத்தரங்கு போன்று அது அமைந்திருந்தது. இம்மாநாடு 1970 சனவரி 15-18 காலப்பகுதியில் நடைபெற்றது. |
| **நான்காவது மாநாடு** | மாநாட்டை யாழ்ப்பாணத்தில் நடத்துவதற்கு பேராசிரியர் சு. வித்தியானந்தன் தலைமையிலான குழு தீர்மானித்து அதன் படி 1974 சனவரி 3-9 காலப்பகுதியில் மாநாட்டை யாழ்ப்பாணத்தில் வெகு விமரிசையாக நடத்தியது. மாநாடும் கருத்தரங்குகளும் நிறைவேறிய மறுநாள், சனவரி 10 ஆம் நாள், பரிசளிப்பும் விருந்தினருக்கு உபசாரமும் செய்ய ஒழுங்கான பொதுக்கூட்டத்தில் காவல்துறையினரும் குண்டர்களும் பொதுமக்களைத் தாக்கியதில் 11 பேர் கொல்லப்பட்டனர். |
| **ஐந்தாவது மாநாடு** | முதலில் நடைபெற்ற 4 மாநாடுகள் தனிநாயகம் அடிகளாரின் முயற்சியால் நடைபெற்றவை. அவரது மறைவுக்குப் பிறகு, 5- வது மாநாட்டைத் தொடர்ந்து நடத்தப் போதிய வசதியில்லாமல் மன்றத்தின் வேகம் குறையைத் தொடங்கியது. பிற நாடுகளில் இருந்தும், இந்தியாவின் பல்வேறு மாநிலங்களிலிருந்தும் வரும் தமிழறிஞர்களுக்குத் தேவையான வசதிகளைச் செய்து கொடுக்க முடியாததே இதற்குக் காரணமாகத் தெரிகிறது . ஐந்தாவது மாநாடு 7 ஆண்டுகளுக்குப் பிறகு 1981-ம் ஆண்டு சனவரி 4-10 இல் மதுரையில் நடத்தப் பெற்றது. |
| **ஆறாவது மாநாடு** | ஆறாவது மாநாடு 1987 நவம்பர் 15-19 கோலாலம்பூரில் நடத்தப் பெற்றன . |
| **ஏழாவது மாநாடு** | ஆப்பிரிக்காவில் மொரீசியசில் 7- வது மாநாடு 1989 டிசம்பர் 1-8 இல் நடத்தப் பெற்றன. |
| **எட்டாவது மாநாடு** | எட்டாவது மாநாடு தஞ்சாவூரில் 1995 சனவரி 1-5 இல் நடத்தப் பெற்றன . |
| **ஒன்பதாவது மாநாடு** | எட்டாவது மாநாடு இடம்பெற்று 14 ஆண்டுகள் கழிந்து விட்ட நிலையில் ஒன்பதாவது மாநாடு பெப்ரவரி 2010 இல் கோவையில் நடத்தப்படும் என்று தமிழக முதலமைச்சர் மு.கருணாநிதி சென்னை தலைமைச் செயலகத்தில் 2009 செப்டம்பர் 17 ஆம் நாள் நடைபெற்ற மாவட்ட ஆட்சியர்கள், காவல்துறை அதிகாரிகள் மாநாட்டில் அறிவித்தார். பின்னர் உலகத் தமிழராய்ச்சி மாநாட்டை நடத்தப் போதிய கால அவகாசம் இல்லை என்று கூறி உலகத் தமிழாராய்ச்சி மன்றம் ஒப்புதல் தர மறுத்து |

குறிப்பு

| | |
|---|---|
| | விட்டது . இதனால் உலகத் தமிழ்ச் செம்மொழி மாநாடு என்று பெயர் மாற்றப்பட்ட ஒரு மாநாடு 2010 சூலையில்கோவையில்நடைபெற்றது. அதிகாரபூர்வமான 9-வது உலகத் தமிழாராய்ச்சி மாநாடு 2015 சனவரி 29 முதல் பிப்ரவரி 1 வரை மலேசியத் தலைநகரான கோலாலம்பூரில் நடைபெற்றது. கோலாலம்பூரில்உள்ள மலாயாப் பல்கலைக்கழகத்தில் நடைபெற்ற இந்த மாநாட்டை உலகத் தமிழ் ஆராய்ச்சி நிறுவனம், மலேசிய உலகத் தமிழ் ஆராய்ச்சி நிறுவனம், மலாயாப் பல்கலைக்கழக இந்திய ஆய்வியல் துறை ஆகியவை கூட்டாக ஒழுங்கு செய்திருந்தன. இம்மாநாட்டுக்கான கருப்பொருள் ”உலகமயக் காலக்கட்டத்தில் தமிழாய்வுக்கு வளம் சேர்த்தல்” என்பதாகும். |

**உங்கள் முன்னேற்றத்தைச் சரிபார்க்கவும்**

1. தமிழ்தாய் வாழ்த்தை இயற்றியவர் யார்?
2. அலுவல்மொழிச் சட்டம் எந்த ஆண்டு பிறப்பிக்கப்பட்டது?

## 5.5 உங்கள் முன்னேற்றத்தைச் சரிபார்க்கும் வினாக்களுக்கான விடைகள்

1. தனித்தமிழ் வாழ்த்தை இயற்றியவர் சுந்தரம்பிள்ளை.
2. அலுவல்மொழிச்சட்டம் 1963ம் ஆண்டு பிறப்பிக்கப்பட்டது

## 5.6 சுருக்கவுரை

- சுந்தரம்பிள்ளை தமிழ்ப்பணியின் ஒப்பற்ற நாடக நூலான மனோன்மணீயம் இவரால் 1891 ஆம் ஆண்டில் எழுதி வெளியிட்டார்.
- மும்மொழித் திட்டம் கைவிடப்பட்டு இந்தி முழுமையாக கல்வித் திட்டதிலிருந்து விலக்கப்பட்டது.
- தமிழும் ஆங்கிலமும் மட்டுமே பயிற்றுவிக்கப்பட்டது.
- தேசிய மாணவர் படையில் இந்தி ஆணைச்சொற்கள் விளக்கப்பட்டன.
- அனைத்துக் கல்லூரிகளிலும் தமிழ்வழிக் கல்வி அறிமுகப்படுத்தப்படும்.

குறிப்பு

- ஐந்து ஆண்டுகளுக்குள் தமிழ் அலுவல்மொழியாக அரசு நிர்வாகத்தின் அனைத்துத் துறைகளிலும் நடைமுறைப்படுத்தப்படும்.
- நடுவண் அரசை இந்திக்கு அளிக்கப்படும் தனிநிலையை முடிவுக்குக் கொண்டுவந்து அனைத்து மொழிகளுக்கும் சமநிலை அளிக்க வற்புறுத்தியது.
- உலகத் தமிழாராய்ச்சி மாநாடு என்பது உலகில் பல்வேறு நாடுகளில் பணியாற்றி வரும் தமிழறிஞர்களை ஒருங்கிணைத்து தமிழ் ஆராய்ச்சியை ஒருமுகப்படுத்தவும், வளப்படுத்தவும் தமிழறிஞர்கள் கூடி நடத்தும் உலக மாநாடு ஆகும்.

## 5.7 முக்கிய கருத்துப்படிமங்கள்

- சுந்தரம் பிள்ளை
- இந்தி எதிர்ப்பு கிளர்ச்சி
- உலகத் தமிழ் மாநாடு

## 5.8 சுயமதிப்பீட்டு பயிற்சி வினாக்கள்

**குறுகிய வினாக்களுக்கு விடையளிக்கவும்**

1. அலுவல்மொழிச் சட்டம் குறிப்பு வரைக?
2. சுந்தரம்பிள்ளையைப் பற்றி மதிப்பிடுக?

**விரிவான வினாக்களுக்கு விடையளிக்கவும்**

1. உலகத் தமிழ் மாநாடு பற்றி கட்டுரை வரைக?
2. இந்தி எதிர்ப்பு கிளர்ச்சி பற்றிக் விளக்குக?

## 5.9 மேலும் படிக்க


- ஐயங்கார்,சீனிவாசீ. வு (2001), *தமிழர்களின் வரலாறு: ஆரம்ப காலத்திலிருந்து 600 கி.பி வரை.* டெல்லி
- கிருஸ்ணசுவாமி.அ, (1977) விஜயநகரபப் பேரரசின் வரலாறு (கிபி1525 வரை) தமிழ்நாட்டுப் பாடநூல் நிறுவனம், அண்ணாமலைநகர்.

- சர்மா,சு.ளு. (2006). *பண்டைய இந்தியாவின் முந்தைய காலம்.* ஆக்ஸ்.ஃ.போர்ட் யுனிவர்சிட்டி பிரஸ்.

**குறிப்பு**

- சாஸ்திரி, ராமசாமி. (2002) *தமிழர்கள்: மக்கள், அவர்களின் வரலாறு மற்றும் கலாச்சாரம்.* புதுடெல்லி, காஸ்மோ பப்ளிகேஷன்ஸ்
- சிராஜீத்தின, (2010), *தமிழ்நாட்டு வரலாறு (கி.பி. 1987 வரை),* பாவை பப்ளிகேசன், சென்னை
- தேவநேயப்பாவணர். (1992) *பண்டைத் தமிழர் நாகரிகமும் பண்பாடும்,* கழக வெளியீடு சென்னை
- மாதவன்,சித்ரா, (2005), *தமிழ்நாட்டின் வரலாறு மற்றும் கலாச்சாரம்: தொகுதி-1 (கி.பி.1310 வரை).* டெல்லி

# அலகு VI

## சமூகம் - தமிழ் மதத்தின் அறிவுசார்ந்த எண்ணங்கள் - வைகுண்டஸ்வாமிகள் - வள்ளளார்



### அலகு V சமூகம்



## 6.0 முன்னுரை

நவீன தமிழகத்தில் தோன்றிய முதல் சமூக சீர்திருத்தவாதியான வைகுண்ட சுவாமிகள் ஒரு புதிய சமய நெறியை உருவாக்கி அதன் மூலம் சமூக சீர்திருத்தம் செய்தவர். அந்தப் புதிய நெறியில் கிறிஸ்தவத்தின் தாக்கம் தெரிகிறது. (ஆரம்பத்தில் சிறிது காலம் நாகர்கோவில் மிஷனில் கிறிஸ்தவ போதனையின் கீழ் இருந்தவர் என்றுகூட ஒரு செய்தி உள்ளது) தென் தமிழகத்தில் நாடார் சமூகத்தினரிடையே இந்த இயக்கத்திற்கு நல்ல வரவேற்பு இருந்திருக் கிறது. உயர்சாதி வெறியை எதிர்த்ததோடு உள்ளூர் மன்னரையும் எதிர்த்து நின்றவர். அடித்தட்டு குடும்பப் பெண்களின் உரிமைக்காக வும் குரல் கொடுத்தார். ஆனால், இன்றைக்கு அவரது இயக்கம் சமூக சீர்திருத்தம் என்கிற அதன் சாரத்தை இழந்து இந்து சமயத்தின் ஓர் உபபிரிவு என்கிற தோற்றத்தை மட்டும் தக்க வைத்துக் கொண்டுள்ளது.

## 6.2 சமூகம்



இக்காலத்தில் வைகுண்டரின் புகழ் தென் திருவிதாங்கூர் மற்றும் திருநெல்வேலி ஆகிய பகுதிகளில் மிகவேகமாகப் பரவியது. அவர் சமுதாயப் பார்வையில் ஒரு அற்புத சக்தி படைத்த மனிதராக அறியப்பபட்டார். மறுபுறம் சமய நம்பிக்கையின் அடித்தளத்தில் பண்டாரமாக அறிவிக்கப்பட்டார். அகிலத்திரட்டு அம்மானை அவரை நாராயண பண்டாரம் என விளம்புகிறது. நாட்டுமக்கள் இவரது போதனைகளை கவனிக்க இவர் முன்னிலையில் கூடினார்கள். மேலும் அவர் அவர்களது நோய்களைத் தீர்த்ததாகவும் அகிலம் கூறுகிறது. அவரை மக்கள் வழிபடத்தொடங்கினர். வைகுண்டர் அவர்களை சாதி வேறுபாடின்றி ஒரே கிணற்றில் குளிக்க போதித்தார். மேலும் அவர்களை அனைத்து பேதங்களையும் கடந்து சமபந்தி உண்ணவும் போதித்தார். இந்தியாவின் முதல் சமபந்தி அய்யாவழி சமயக் கூடல்களில் தான் அமைக்கப்பட்டதாக கருதப்படுகிறது. அய்யா மக்களுக்கு பல போதனைகளை வழங்கினார். அவற்றில் முக்கியமானதாக, அவர் நடக்கும் கலியுகத்தை அழித்து பேரின்பநிலையான தர்மயுகத்தை மலரச்செய்து சான்றோருக்கு நித்திய வாழ்வை அளிக்கப் போவதாக கூறினார். மறுமை தர்மமான அந்நிலையை அடைய ”தாழக் கிடப்பாரை தற்காப்பதே தர்மம்” என்னும் கோட்பாட்டை ஆதாரமாக வைத்துச் செயல்பட மக்கள் அவரால் அறிவுறுத்தப்பட்டனர். மேலும் அவரின் அவதார செயல்பாடுகள், சமுதாயப் பார்வையில் இக்கோட்பாட்டையே மையமாக வைத்தே சுழல்வதைப் பார்க்க முடிகிறது.

சான்றோராகிய மக்கள் தர்மயுக வெளிப்படலுக்கு முக்கிய பங்கு ஆற்ற வேண்டியவர்களாக அறிவுறுத்தப்பட்டனர். அவர்கள் தங்களை தர்மயுக மக்களாக மாற்ற சில முறைகளை கடைபிடிக்க அய்யா வளியுறுத்தினார். இவ்வாய்மொழிகளில், மக்கள் தங்களை சுய மரியாதை உடையவர்களாக, மானமுடையவர்களாக, அச்சமற்றவர்களாக, வடிவப்படுத்துமளவு கலி தன்னால் அழிந்துகொண்டே வரும் என்பது முதன்மைபெற்றது. இங்குள்ளவை அனைத்தும் ஒன்றாதலால் எதற்கும் அச்சமில்லை என்னும் அத்துவித கோட்பாடடை ஒத்திருந்தது இது. மக்கள் கலியாகிய மாயை விட்டகலுமளவு வைகுண்டர் தர்ம ராஜாவாக இருந்து அவர்களை ஆளும் இத்தர்ம யுகத்தை உணரமுடியும் என்னும் அகிலக் கோட்பாடு இதை உறுதி செய்கிறது.

பனை மரம் ஏறி கள் இறக்கும் தொழிலில் ஈடுபட்டிருந்த நாடார் சமூகத்தினர் சாணார் என்று அழைக்கப் பட்டனர். இவர்களையும் தீண்டத்தகாதவர் களாகத்தான் உயர் சாதியினர் பாவித்து வந்தனர். தீண்டாமையின் காரணமாய் சந்திப்பு தூரங்கள் கூட வரையறுக்கப்பட்டிருந்தன. ஒரு நாடார், நம்பூதிரி பார்ப்பனரிடமிருந்து 36 அடி தூரத்திலும், நாயரிடமிருந்து 12 அடி தூரத்திலும் நின்றுதான் சந்திக்க வேண்டும். பொதுச் சாலைகளிலே செல்ல முடியாது. பொதுக் கிணறுகளிலே நீர் எடுக்க முடியாது. உயர் சாதியினர் வாழும்

குறிப்பு

தெருக்களில்கூடப் போக முடியாது. பிறகு அவர்களது கோவில் களைப் பற்றிச் சொல்ல வேண்டியதில்லை. கொடுமை என்னவென்றால் இந்தக் கோவில் களுக்கு அருகேயே பள்ளிகளும், அரசு அலுவலகங்களும் இருந்ததால் அங்கேயும் போக முடியாது. அதிகாரிகள் வெளியே வரும்போது பார்த்தால்தான் உண்டு. அது மட்டுமல்ல குடை பிடிக்கவோ, செருப்பு போடவோ முடியாது. ஓடு வேய்ந்த வீடு கட்டக் கூடாது. பொன் நகை அணியக் கூடாது. பெண்கள் இடுப்பில் தண்ணீர் குடம் எடுத்துச் செல்ல முடியாது. தோள் சேலை (மாராப்பு) அணிய முடியாது.

நாடார்களில் ஒரு சிறு பகுதியினர் நிலவுடைமையாளர்களாக இருந்தனர். பெரும் பகுதியினராயிருந்த கள் இறக்கும் தொழி லாளர்களை இவர்கள் மதிப்பதும் கிடையாது பாதுகாப்பதும் கிடையாது. உயர்சாதியினரோ இவர்கள் அனைவரையுமே தீண்டத்தகாதவர் களாகப் பாவித்தனர். திருவிதாங்கூர் அரசும் இதைத்தான் அமுல்படுத்தி வந்தது. இந்த நிலையில் களத்தில் இறங்கிய சுவாமிகள் இந்த மக்கள் மத்தியில் ஒற்றுமையை ஏற்படுத்திட சமத்துவ சங்கம் என்ற அமைப்பினைத் துவக்கினார் இதில் ஆயிரக் கணக்கான மக்கள் உறுப்பினராயினர். ஆடவர் மட்டுமல்லாது மாதரும் பங்கேற்றனர். தன்னைக் கண்ணபிரானாகப் பாவித்துக் கொண்ட சுவாமிகள் பஞ்ச பாண்டவர்கள் என்று ஐந்து பேரைத் தனது பிரதமர் சீடர்களாக ஆக்கினார். ஊர் ஊராகச் சென்று தனது சமத்துவக் கொள் கையைப் பரப்புமாறு கேட்டுக் கொண்டார். தானும் அவ்வாறே பயணம் மேற் கொண்டார்.

ஒற்றுமை உணர்வினை வளர்த்திடவும், தன்னுடைய போதனைகளைப் பரப்பிடவும் ‘நிழல் தாங்கல்’ என்பதைப் பல ஊர்களில் அமைத்தார். இது வழிபாட்டுத் தலமாகவும், கல்வி நிலையமாகவும், சுவாமிகளின் போதனைகளைப் பரப்பும் பிரச்சார மையமாகவும் விளங்கியது. சமத்துவச் சங்கத்தின் கிளைகள் போலச் செயல்பட்ட இவற்றில் வழிபாடு நடந்தாலும் விக்ரக ஆராதனை கிடையாது. விக்ரகம் என்றால் பூசாரி வந்து விடுவார். பூசாரி என்றால் சாதியப் பாகுபாடு புகுந்துவிடும் என்று அதனைத் தவிர்த்திருக்கிறார். சாதிய ஒடுக்குமுறை எதிர்ப்பு என்பது இப்படிச் சமய சீர்திருத்தத்தோடே ஒட்டிப் பிறந்தது. அதே நேரத்தில், சமூகத்தில் தலை நிமிர்ந்து நடக்க அவர்களுக்கு சுயமரியாதை உணர்வை ஊட்ட வேண்டியிருந்தது. சமூக அவமரியாதைகளில் சிலவற்றையாகிலும் ஒழிக்க வேண்டியிருந்தது. அச்சத்தைப் போக்கி எதிர்த்து நிற்கும் தைரியத்தைக் கொடுக்க வேண்டி யிருந்தது.

ஆதிநாளில் ஒரு நாடார் சமூக இளைஞனுக்கு அவனது 16ஆவது வயதில் தலையில் தலைப்பாகைக் கட்டி கையில் பிச்சுவா கத்தி கொடுப்பார்கள் - அவர் பெரிய மனிதன் ஆகிவிட்டதன் அடையாளமாக, பல இடைத் தட்டு சாதிகளில் இந்த வழக்கம் இன்றைக்கும் உண்டு. குடும்பத் தலைவர் இறந்ததும் அவரது மகன்களுக்கு இப்படி

தலைப்பாகை கட்டுவார்கள். இதற்கு “உறுமால் கட்டு” என்று பெயர். இந்தப் பழக்கம் இடைக்காலத்தில் நாடார் சமூகத்தைப் பொறுத்தவரை உயர்சாதி யினரால் தடுக்கப்பட்டிருக்கிறது. சுமை தூக்கக் கூட தலைப்பாகை அணிய அனுமதிக்கவில்லை. ‘சுருமாடு’ என்று பெயரில் வைக்கோலை மட்டும் தலையில் வைக்க அனுமதிக்கப் பட்டனர். இந்த அநியாயக் கட்டுப்பாட்டை மீறச் சொன்னார் சுவாமிகள். தன்னைக் காண வந்த மக்களிடம் தலைப்பாகை அணிந்து வருமாறு வற்புறுத்தினார். வழிபாட்டின்போது அவரது அன்பர்கள் இப்பொழுதும் தலைப் பாகை அணிவதைக் காணலாம். இதே பாணியில் வீடு கட்டுவதிலும் மாறுதலை புகுத்தினார் சுவாமிகள். மாடி வீடு, ஓடு போட்ட வீடு ஆகியவற்றை அன்றைக்கு தாழ்ந்த சாதி மக்கள் கட்டிவிட முடியாது. அவர்களது வீடுகள் ஒழுங்கற்று ஆங்காங்கே சிதறிக் கிடந்தன. இதற்குப் பதிலாக பல அறைகளுடைய ஒரே திசையில் முன் கதவு வைத்த வீடுகளை அடுத்தடுத்து கட்டுமாறு கூறினார் சுவாமிகள். இது மக்களிடையே நெருக்கத்தையும், ஒருமைப்பாட்டையும் ஏற்படுத்தும் என்று அவர் எதிர்பார்த்தார். மாதிரியாக முட்டப் பகுதியில் சுவாமிகள் ஒரு ‘சமதர்மக் காலனி’ அமைத்தார். இத்தோடு தனது சொந்த ஊரில் கிணறு ஒன்றை ஏற்படுத்தி அனைத்து மக்களும் அதனைப் பயன்படுத்தலாம் என்றார். அதனை ‘முத்திரிக் கிணறு’ (புனிதக் கிணறு) என்று சுவாமிகள் அழைத்தார். சுவாமிகளைக் காண வந்த மக்ககள் அக்கிணற்று நீரைக் கொண்டு குளித்து, உண்டி சமைத்து உண்டு மகிழ்ந்தனர். அனைத்து சாதியினரும் இப்படி ஒரே கிணற்றில் நீரெடுத்து சமைத்து சமபந்தி போஜனம் செய்ய வைத்தார் சுவாமிகள்.

தனது சீடர்களைப் பல்வேறு ஊர்களுக்கு அனுப்பி அங்குள்ள தாழ்த்தப்பட்ட சாதியினரின் வீடுகளில் உணவருந்துமாறு கட்டளையிட்டார். சுவாமிகள் ஒரு முறை இப்படியாகத் தனது சீடர்கள் இருவரை பிச்சம்மாள் என்கிற சலவைத் தொழிலாளி வீட்டில் சாப்பிட்டு வருமாறு சொல்ல, அவர்கள் அங்கு சென்றும் சாப்பிட மனமில்லாமல் திரும்பி வந்துவிட்டனர். இதை அறிந்த சுவாமிகள் இருவரையும் கடுமையாகக் கண்டித்து மீண்டும் அந்த இல்லம் சென்று உணவருந்தி வருமாறு செய்தார். இப்படியொரு வாய்மொழிச் செய்தி உள்ளது. இதுவெல்லாம் அந்தக் காலத்தில் சாதாரணமான விஷயமல்ல.

தாழ்த்தப்பட்ட மக்கள் சுத்தமின்றி இருக்கின்றனர், புலால் உணவு உண்கின்றனர், அதனால் தான் தீண்டாமை கடைப்பிடிக்கப்படு கிறது என்று உயர்சாதியினர் சொல்லிக் கொண்டனர். இதுவொரு சாக்குதான் எனினும், இந்த வாதத்தையும் உடைக்க முயன்றார் சுவாமிகள். மீன் உணவை விரும்பிச் சாப்பிடும் குமரி பகுதி மக்களுக்கு இப்படி சைவ உணவைப் பரிந்துரைத்தார். இன்றைக்கும் இவரைப் பின்பற்றுவோர் புலால் உணவை தவிர்த்தவர்களாக உள்ளனர். அல்லது குறைந்தபட்ச ஞாயிறு, செவ்வாய், வெள்ளி ஆகிய தினங்களில் அதனை உண்ணாதவர்களாக உள்ளனர். உயர்சாதியினருடன் ஒவ்வொரு

விஷயத்திலும் தங்களால் போட்டி போட முடியுமென்று காட்டுகிற வேகத்திலேதான் இப்படி 'தவசி' (தவம்) இருக்கச் சொல்லி யிருக்கிறார்.



வெறும் போதனை மட்டும் பயன் தராது என்று நினைத்து ஒரு முகாம் நடத்தி அதற்கு மக்களை அழைத்து பயிற்சி கொடுத்தார் சுவாமிகள். இதற்கு 'துவையல் பந்தி' என்று பெயர். இங்கே மூன்று வேளை நன்றாகக் குளித்து, துவைத்து, நண்பகல் ஒரு வேளை பச்சரிசி, பாசிப் பயிறு வேகவைத்து கஞ்சியாக்கி உண்டு ஒரு வகையான தவ வாழ்க்கை மேற் கொள்ளச் செய்தார். கிட்டத்தட்ட 700 குடும்பங்கள் இதில் கலந்து கொண்டதாக ஒரு கணக்கு உள்ளது. இந்த முகாமில் சுவாமிகள் கற்பித்த போதனைகளை அதில் பங்கேற்றோர் ஊர்தோறும் சென்று மக்களிடையே பரப்பி வந்தனர்.

சங்கம் வைத்தவர், முகாம் நடத்தியவர், தனது இயக்கத்திற்காகக் கொடி ஒன்றையும் கண்டார். அரசியல் கட்சி என்றால் என்னவென்றே தெரியாத அந்தக் காலத்தில் அதன் கூறுகளையெல்லாம் கொண்டிருந்தது சுவாமிகளின் இயக்கம். காவி நிறத்தில் வெள்ளை தீபச் சுடரைத் தாங்கிய அந்தக் கொடியை 'அன்புக் கொடி' என்றழைத்தார் சுவாமிகள். தன்னை பின்பற்றுவோரை 'அன்புக் கொடி மக்கள்' என அழைத்தார். இன்றும் சுவாமி களைப் பின்பற்றுவோர் நிழல்தாங்கல்களில் இக்கொடியை ஏற்றி வணக்கம் செலுத்தி வருகின்றனர். இவரின் பிறந்த தினத்தன்று நடக்கும் ஊர்வலத்தின்போது இக்கொடியை ஏந்தி வருகின்றனர் அவரின் அன்பர்கள்.

சமூக சீர்திருத்தவாதியுமான இவர் ஒரே நேரத்தில் மன்னர், பார்ப்பனியம் மற்றும் அந்நிய ஆட்சியாளர்கள் -மதபோதகர்களின் எதிர்ப்பை சம்பாதித்துக் கொண்டது வரலாற்றிலேயே ஒரு அபூர்வமான விஷயம். மறுபுறம் சமூகத் துறையில் ஆதிக்க சக்தியாக இருந்த பார்ப்பனியத்தையும் வெளிப்படையாக எதிர்க்கத் துணிந்தார் சுவாமிகள். "பிராமணர்களைப் பயம் காட்ட நாம் வருவோம்" என்று அடித்தட்டு சாதி மக்களுக்கு தைரியம் ஊட்டினார். அதுமட்டுமா, "பிராமண வேசம் போட பக்தன்மாரே நீங்கள் உண்டு" என்றும் கூறினார். புரோகிதம் என்பதை 'வேசம்' என்று அவர் கூறியது அந்தக் காலத்தில் வேறு எவரும் சொல்லத் துணியாதது என்றால் அந்த 'வேச'த்தை தாழ்த்தப்பட்ட சாதியினரும் போடலாம் என்பது சமூக நீதியின் புதிய பரிமாணம், 'பிராமணியம்' எனும் ஏகபோகத் தன்மையைக் கருவறுக்கிற வேலை. இப்படித் திருவிதாங்கூர் ராஜாவையும், பார்ப்பனியத்தையும் எதிர்த்து நின்றவர் தனது செயல்பாட்டின் காரணமாக ஒரு தனி சமயப் பிரிவினை உருவாக்கி அதன் மூலம் உயர்சாதிய அவமரியாதைகளிலிருந்து விடுதலைப் பெற முடியும் என்று காட்டிவிட்டதால் குமரிப் பகுதியில் நாடார் சமூகத்தவரிடையே விரைந்து பரவி வந்த கிறிஸ்தவ மதம் தடைப்பட்டு நின்றது. இதனால் கிறிஸ்தவ போதகர்கள் மற்றும் பிரிட்டிஷாரின் வெறுப்புக்கு ஆளானார் சுவாமிகள். சுவாதித் திருநாள்

குறிப்பு

மன்னரால் அவர் கைது செய்யப்பட்டதற்கும்கூட சென்னையி லிருந்த கிழக்கிந்திய கம்பெனி ஆட்சியாளர்கள் மன்னரைத் தூண்டிவிட்டதுதான் காரணம் என்று கூட ஒரு செய்தி உள்ளது. சுவாமிகள் உயிரோடு இருந்த காலத்தில் மட்டுமல்ல அதற்குப் பிறகும்கூட அவர் கண்ட இயக்கம் தங்களது மத மாற்றத்திற்கு இடையூறாக இருந்ததாகக் கருதினர். 1874இல் அவர்கள் தயாரித்த ஆண்டு அறிக்கையில் ‘முத்துக்குட்டி யிசத்தை எதிர்த்து விடாது போராட வேண்டியுள்ளது’ என்று குறிப்பிட்டுள்ளனர். ஆக, ஒரே நேரத்தில் இரண்டு வேலைகளைச் செய்திருக்கிறது சுவாமிகள் இயக்கம். ஒரு புறம் இது இந்து மதத்திற்குள்ளிருந்த உயர்சாதி வெறியை எதிர்த்துப் போராடியது மறுபுறம் கிறிஸ்தவ மதமாற்றத்தைத் தடுத்து நிறுத்தியது. இந்த இரண்டாவது பணி அவர் திட்டமிட்டுச் செய்ததாகத் தெரியவில்லை.

## 6.3 தமிழ் மதத்தின் அறிவுசார்ந்த எண்ணங்கள்

தமிழ் மதத்தின் அறிவுசார்ந்த எண்ணங்கள் இந்து மதத்தின் உயர்சாதி வெறியை எதிர்த்துப் போராடிய போது அதன் உபவிளைவாக இது நிகழ்ந்திருக்கிறது. சமயப் பூசல்களை அடியோடு வெறுத்தார் சுவாமிகள். “நீ பெரிது நான் பெரிது நிச்சயங்கள் பார்ப்போமென்ற வான்பெருதறியாமல் மாள்வார் வீண் வேத முள்ளோர்” என்று கூறியுள்ளார் சுவாமிகள். அடித்தட்டு வகுப்பு பெண்களின் உரிமை களுக்காகவும் குரல் கொடுத்தார் சுவாமிகள். தாழ்த்தப்பட்ட வகுப்புப் பெண்களைத் தைரியமாக தோள்சேலை அணியுமாறு அவர் கேட்டுக் கொண்டார். சுவாமிகளின் காலத்தில் கிறிஸ்தவ போதகர்களின் வழிகாட்டுதலில் கிறிஸ்தவ நாடார்களினால் துவக்கப்பட்ட இந்தத் தோள்சேலை அணியும் போராட்டம் சுவாமிகளின் மறைவுக்குப் பிறகு, கிறிஸ்தவ நாடார்கள் - இந்து நாடார்கள் இருவரும் இணைந்து நின்று போராடியதால் வெற்றி கிட்டியது. 1859இல் நாடார் பெண்களுக்கு தோள் சேலை அணிகிற உரிமையை திருவிதாங்கூர் அரசு வழங்கியது. தொடர்ந்து போராட்டங்கள் நடந்த காரணத்தால் 1865இல் இதர அடித்தட்டு சாதிப் பெண்களுக்கும் அந்த உரிமை தரப்பட்டது. தனது மக்கள் சேவையின் காரணமாய் ‘அய்யா’ என்று அன்போடு அழைக்கப்பட்ட சுவாமிகளின் சமாதி சாமித் தோப்பில் உள்ளது. அங்கே ஏற்றி வைக்கப்பட்டுள்ள குத்துவிளக்கு ஒளியை மக்கள் கும்பிடுகிறார்கள். இவர் வழி வந்தவர்கள் இறந்தோரை எரிப்பதில்லை புதைக்கவே செய்கிறார்கள். அதோடு கருமாதி, திதி போன்ற சடங்குகளில் விருப்பமில்லாதவர் களாகவே உள்ளனர்.

## 6.4 வைகுண்டஸ்வாமிகள்

1809 ஆம் ஆண்டு தமிழ்நாடு கன்னியாகுமரி மாவட்டத்திலுள்ள சாமித்தோப்பு என்ற ஊரில் ஸ்ரீ வைகுண்ட சுவாமிகள் பிறந்தார். அவரது இயற்பெயர் முடிசூடும் பெருமாள் என்றாலும் முத்துக்குட்டி என்றே

அனைவரும் அழைத்தனர். ஜாதி முறை மற்றும் தீண்டாமைக்கு எதிராக அவர் பிரச்சாரம் மேற்கொண்டார். சமய சடங்குகளை அவர் சாடினார். பலர் அவரை வழிபடுவதற்காக அவரது இருப்பிடம் தேடிவரத் தொடங்கினர். அவரது போதனைகள் காலப்போக்கில் “அய்யாவழி“ என்று பெயர் பெற்றது. 19ஆம் நூற்றாண்டின் மத்தியவாக்கில் அய்யாவழி ஒரு தனிப்பட்ட சமயமாக ஏற்றுக்கொள்ளப்பட்டது. தென் திருவாங்கூர் மற்றும் தெற்கு திருநெல்வேலி பகுதிகளில் அது வேகமாகப் பரவியது. அவரது மறைவுக்குப் பிறகு, அவர் இயற்றிய சமய நூல்களான அகிலத்திரட்டு அம்மானை, அருள்நூல் மற்றும் அவரது போதனைகளை அடிப்படையாகக் கொண்டு அய்யா வழி சமயம் பரவியது. பல இடங்களில் “நிழல் தங்கல்“ என்ற வழிபாட்டுத் தலங்கள் கட்டப்பட்டன.

## 6.5 வள்ளளார்

திருவருட்பிரகாச வள்ளலார் என்று அழைக்கப்படும் இராமலிங்க அடிகளார் ஓர் ஆன்மீகவாதி ஆவார். இவர் சத்திய ஞான சபையை நிறுவியவர். ”வாடிய பயிரைக் கண்டபோதெல்லாம், வாடினேன்” என்று பாடியவர் இவர். திருவருட்பிரகாச வள்ளலார் என்ற சிறப்பு பெயர் பெற்றவர். கடவுள் ஒருவரே என்ற கருத்தை வலியுறுத்தியவர். சாதி சமய வேறுபாட்டுக்கு எதிரான தமது நிலைப்பாடு காரணமாக, சமுதாயத்தின் பழைமைப் பற்றால் பெரிதும் பாதிக்கப்பட்டவர். 19 ஆம் நூற்றாண்டில் தமிழ்நாட்டில் வாழ்ந்த சமயத் தலைவர்களில் தலைசிறந்தவர் இராமலிங்க அடிகளாவார். 1823 அக்டோபர் 5ல் சிதம்பரத்துக்கு அருகிலுள்ள மருதூரில் ராமய்யா பிள்ளை, சின்னம்மையார் தம்பதிக்கு கடைசி மகனாக அவர் பிறந்தார். ஆன்மீக வாழ்க்கையில் ஆழ்ந்த ஈடுபாடு கொண்டிருந்த அவர் 1858ல் வடலூருக்கு அருகில் கருங்குழி என்ற இடத்திற்கு சென்றார். பின்னாளில் அவர் வடலூரில் இருப்பிடத்தை அமைத்துக் கொண்டார். அவரது தெய்வீக ஆற்றல் பதினோராவது வயதிலேயே வெளிப்பட்டது. சாதிபேதமற்ற சமுதாயத்தை உருவாக்கும் நோக்கத்தை அடிப்படையாகக் கொண்ட தமது கருத்துக்களை பரப்புவதற்காக 1865ல் சமசர சுத்த சன்மார்க்க சங்கத்தை நிறுவினார். மக்களிடையே அன்பையும் கருணையையும் போதித்தார். அவர் திருஅருட்பா என்ற நூலை இயற்றினார். அவரது மற்ற இலக்கியப் படைப்புகளில் “மனுமுறை கண்ட வாசகம்“, “ஜீவகாருண்யம்“ என்ற நூல்களும் அடங்கும். பாமர மக்களும் எளிதில் புரிந்துகொள்ளக்கூடிய வகையில் அவரது மொழி நடை மிகவும் எளிமையாகவே இருந்தது. 1870ல் வடலூருக்கு மூன்று மைல் தொலைவிலிருந்த மேட்டுக்குப்பம் என்ற இடத்துக்கு சென்றார். அங்கு 1872ல் சத்திய ஞான சபையை கட்டத் தொடங்கினார். கடவுளை ஜோதி வடிவமாக வழிபடலாம் என்று அவர் மக்களுக்கு எடுத்துக் கூறினார்.

குறிப்பு

**உங்கள் முன்னேற்றத்தைச் சரிபார்க்கவும்**

1. வைகுண்டஸ்வாமியீனு் இயற்பெயர் என்ன?
2. இராமலிங்க அடிகளார் என்பவர் யார்?

## 6.6 உங்கள் முன்னேற்றத்தைச் சரிபார்க்கும் வினாக்களுக்கான விடைகள்

1. வைகுண்டஸ்வாமியீனு் இயற்பெயர் முத்துக்குட்டி என்பதாகும்.

2. இராமலிங்க அடிகளார் என்பவர் திருவருட்பிரகாச வள்ளலார் என்பவர் ஆவார்.

## 6.7 சுருக்கவுரை

- வைகுண்டஸ்வாமிகள் 1809 ஆம் ஆண்டு தமிழ்நாடு கன்னியாகுமரி மாவட்டத்திலுள்ள சாமித்தோப்பு என்ற ஊரில் ஸ்ரீ வைகுண்ட சுவாமிகள் பிறந்தார். அவரது இயற்பெயர் முடிசூடும் பெருமாள் என்றாலும் முத்துக்குட்டி என்றே அனைவரும் அழைத்தனர். ஜாதி முறை மற்றும் தீண்டாமைக்கு எதிராக அவர் பிரச்சாரம் மேற்கொண்டார். சமய சடங்குகளை அவர் சாடினார்.

- திருவருட் பிரகாச வள்ளலார் என்று அழைக்கப்படும் இராமலிங்க அடிகளார் ஓர் ஆன்மீகவாதி ஆவார். இவர் சத்திய ஞான சபையை நிறுவியவர். ”வாடிய பயிரைக் கண்டபோதெல்லாம், வாடினேன்” என்று பாடியவர் இவர். திருவருட்பிரகாச வள்ளலார் என்ற சிறப்பு பெயர் பெற்றவர்.

## 6.8 முக்கிய கருத்துப்படிமங்கள்

- வைகுண்டஸ்வாமிகள்
- திருவருட் பிரகாச வள்ளலார்

## 6.9 சுயமதிப்பீட்டு பயிற்சி வினாக்கள்

**குறுகிய வினாக்களுக்கு விடையளிக்கவும்**

1. திருவருட் பிரகாச வள்ளலார் பற்றி மதிப்பிடுக?

**விரிவான வினாக்களுக்கு விடையளிக்கவும்**

1. வைகுண்டஸ்வாமிகளின் சமயச் சிந்தனைகளைப் பற்றி கட்டுரை வரைக?

## 6.10 மேலும் படிக்க

குறிப்பு

- ஐயங்கார்,சீனிவாசீ. வு (2001), *தமிழர்களின் வரலாறு: ஆரம்ப காலத்திலிருந்து 600 கி.பி வரை.* டெல்லி
- கிருஸ்ணசுவாமி.அ, (1977) விஜயநகரபப் பேரரசின் வரலாறு (கிபி1525 வரை) தமிழ்நாட்டுப் பாடநூல் நிறுவனம், அண்ணாமலைநகர்.
- சர்மா,R.S. (2006). *பண்டைய இந்தியாவின் முந்தைய காலம்.* ஆக்ஸ்∴போர்ட் யுனிவர்சிட்டி பிரஸ்.
- சாஸ்திரி, ராமசாமி. (2002) *தமிழர்கள்: மக்கள், அவர்களின் வரலாறு மற்றும் கலாச்சாரம்.* புதுடெல்லி, காஸ்மோ பப்ளிகேஷன்ஸ்
- சிராஜீத்தின, (2010), *தமிழ்நாட்டு வரலாறு (கி.பி. 1987 வரை),* பாவை பப்ளிகேசன், சென்னை
- தேவநேயப்பாவணர். (1992) *பண்டைத் தமிழர் நாகரிகமும் பண்பாடும்*, கழக வெளியீடு சென்னை
- மாதவன்,சித்ரா, (2005), *தமிழ்நாட்டின் வரலாறு மற்றும் கலாச்சாரம்: தொகுதி-1 (கி.பி.1310 வரை).* டெல்லி

# அலகு VII

## அயோத்திதாச பண்டிதர் - சகஜாநந்தா - முத்துலெட்சுமி ரெட்டி

### அலகு VII அயோத்திதாச பண்டிதர்

7.0 முன்னரை
7.1 நோக்கம்
7.2 அயோத்திதாச பண்டிதர்
7.3 சகஜாநந்தா
7.4 முத்துலெட்சுமி ரெட்டி
7.4.1 சமூகப்பணி
7.5 உங்கள் முன்னேற்றத்தைச் சரிபார்க்கும் வினாக்களுக்கான விடைகள்
7.6 சுருக்கவுரை
7.7 முக்கிய கருத்துப்படிமங்கள்
7.8 சுயமதிப்பீட்டு பயிற்சி வினாக்கள்
7.9 மேலும் படிக்க

### 7.0 முன்னரை

அயோத்திதாசர் சென்னை மாகாணத்தைச் சேர்ந்த சாதியற்ற தொல்குடி மக்களின் அரசியலில் ஒரு முடுக்கத்தை ஏற்படுத்தியவர் அயோத்திதாசர் ஆவார். இந்தியாவில் குடிக்கணக்கெடுப்பு எடுக்கும் வழக்கம் தொடங்கிய போது அதனை ஒரு அரசியல் போராட்டத்துக்கான வாய்ப்பாக அயோத்திதாசர் அடையாளம் கண்டார். தீண்டாதாராய் வைக்கப்பட்டிருந்த தொல்குடி மக்களிடம் அரசியல் ரீதியான விழிப்புணர்வை உண்டாக்க, அவர்கள் தம்மை “சாதியற்ற திராவிடர்கள்” எனக் குடிக் கணக்கெடுப்பில் பதிந்து கொள்ள வேண்டும் என அவர் அறிவுறுத்தினார்.

சகஜாநந்தா சிதம்பரத்தில் நந்தனார் திருப்பெயரில் ஆண்களுக்கும் பெண்களுக்கும் தனித்தனியே கல்விக்கூடங்கள் நிறுவியவர். அவர்களுக்காக உணவு வசதியுடன் தங்கி படிக்க விடுதிகளும் அமைத்துள்ளார். காங்கிரஸ் கட்சியின் முலம் அரசியலில் ஈடுபட்ட அடிகளார் 1926 முதல் 1932 வரையிலும் சென்னை மாகாண சட்டபேரவை உறுப்பினராக இருந்தார். பின்னர் 1936 முதல் தொடர்ந்து 1959 தன் இறுதி மூச்சு வரை சிதம்பரம் தொகுதி சட்டமன்ற உறுப்பினராக பதவி வகித்துள்ளார். அண்ணல் அம்பேத்கருடன் தொடர்பு வைத்திருந்த தமிழகத் தலைவர்களுள் அடிகளார் மிக முக்கியமானவராவார். இரட்டை வாக்குரிமை, வயது வந்தோர்க்கு வாக்களிக்கும் உரிமை ஆகிய அரசியல் கோரிக்கைகளை அம்பேத்கர்

முன் வைத்த போது அதற்கு வலிமை சேர்க்கும் விதமாக போராடினார். தமிழ்நாட்டில் ஆதி திராவிட நலப் பள்ளிகள் உருவாக காரணமாகத் திகழ்ந்தார். தமிழ் மற்றும் சமஸ்கிரத மொழிகளில் புலமை பெற்றிருந்தார்.

முத்துலெட்சுமி ரெட்டி இந்தியாவின் முதல் பெண் மருத்துவரும், தமிழகத்தின் மாபெரும் பெண்ணியப் போராளியும், அடையாறு புற்றுநோய் மருத்துவமனையை நிறுவியவருமான டாக்டர். முத்துலட்சுமி ரெட்டி அம்மையாரின் பிறந்ததினம் இன்று (ஜூலை 30). புதுக்கோட்டை மாவட்டத்தைச் சேர்ந்த வழக்கறிஞர் நாராயணசாமி, பிரபல பாடகி சந்திரமாள் ஆகிய தம்பதியினருக்கு 1886ஆம் ஆண்டு ஜூலை 30ஆம் தேதி மூத்த மகளாகப் பிறந்தவர்தான் முத்துலட்சுமி ரெட்டி. அடுப்பூதும் பெண்களுக்கு படிப்பு எதற்கு? என்ற பழைய பஞ்சாகம் பேசிக்கொண்டு பெண் அடிமைத்தனம் கோலாங்கி இருந்த காலகட்டத்தில் அவைகளை உடைத்தெறிந்து துணிந்து பள்ளிக்கு சென்றவர் முத்துலட்சுமி ரெட்டி. பருவமடைந்த பெண்கள் வெளியே போகக் கூடாது என்ற கட்டுபாடுகளினால் அவரால் தொடர்ந்து பள்ளிக்கு செல்ல முடியமால் போனாலும், தந்தையின் உதவியுடன் தனிப்பட்ட முறையில் மெட்ரிக்குலேஷன் தேர்வு எழுதி மாநிலத்தில் முதலிடம் பிடித்தவர் முத்துலட்சுமி.

## 7.1 நோக்கம்

- அயோத்திதாச பண்டிதர் தீண்டாதாராய் வைக்கப்பட்டிருந்த தொல்குடி மக்களிடம் அரசியல் ரீதியான விழிப்புணர்வை ஏற்படுத்தியதைப் பற்றி அறிந்துக் கொள்ள முடிகின்றது
- சகஜாநந்தா தமிழ்நாட்டில் ஆதி திராவிட நலப் பள்ளிகள் உருவாக காரணமாகத் திகழ்ந்தார் என்பதைப் பற்றி அறிந்துக் கொள்ள முடிகின்றது
- முத்துலெட்சுமி ரெட்டி இந்தியாவின் முதல் பெண் மருத்துவரும், தமிழகத்தின் மாபெரும் பெண்ணியப் போராளி என்பதைப் பற்றி அறிந்துக் கொள்ள முடிகின்றது

## 7.2 அயோத்திதாச பண்டிதர்

அயோத்திதாசப் பண்டிதர் 1845ஆம் ஆண்டு மே மாதம் 20ஆம் தேதி சென்னையில் பிறந்தார். அவரது தந்தையாரின் பெயர் கந்தசாமி, தாயாரின் பெயர் தெரியவில்லை. அயோத்திதாசருக்கு அவரது பெற்றோர் இட்ட பெயர் காத்தவராயன் என்பதாகும். அவரது தாத்தா கந்தப்பன் என்பவர் ஜார்ஜ் ஆரிங்டன் பிரபு என்பாரிடம் பட்லராகப் பணியாற்றியவர். அவரும் தமிழ் மீது பற்றுக் கொண்டவர். அவர்தான் திருக்குறள் மற்றும் நாலடி நானூறு ஆகிய நூல்களின் ஓலைப் பிரதிகளைத் தமது பாதுகாப்பில் வைத்திருந்து எல்லீஸ் துரையிடம் கொடுத்தவர். அந்தப்

படிகளே பின்னர் அச்சில் வெளியிடப்பட்டன. ஆங்கிலேயரிடம் பணிபுரிந்த காரணத்தால் கந்தப்பனுக்கு ஆங்கிலத்திலும் நல்ல தேர்ச்சி இருந்தது.

**குறிப்பு**

சென்னையில் இருந்த காலத்தில் பத்ர தேசிகானந்தர் என்பவரிடமும், அயோத்திதாச கவிராஜ பண்டிதர் என்பவரிடமும் தமிழ் மொழியின் இலக்கண, இலக்கியங்களையும் அயோத்திதாசர் ஆழமாகக் கற்றுத் தேர்ந்தார். இவை மட்டுமன்றி. சமற்கிருதம், பாலி, ஆங்கிலம் ஆகிய மொழிகளையும் அவர் கற்றுத் தேர்ந்தார். தனது இயற்பெயரை விடுத்து தனது ஆசிரியர்களில் ஒருவரான அயோத்திதாச கவிராஜ பண்டிதரின் பெயரையே தனக்குச் சூட்டிக் கொண்டார். இதனிடையே அவரது தந்தையாருடைய பணியின் நிமித்தமாக அயோத்திதாசரின் குடும்பம் குன்னூருக்குக் குடி பெயர்ந்தது.

இளம் வயதினராயிருந்த அயோத்திதாசர் தான் ஈட்டிய அறிவைப் பூட்டி வைத்திருக்கவில்லை. அதை அரசியலில் துணிவோடு இணைத்து நடைமுறைப் பணிகளில் ஈடுபட்டார். குன்னூர் பகுதிகளில் வாழ்ந்திருந்த தோடர் என்னும் பழங்குடியினரிடையே அரசியல் பணிகளை மேற்கொண்டு அவர்களை அமைப்பாக்கிட முயன்றார். அந்த சமூகத்துப் பெண் ஒருவரை மணந்து பின்னர் அவரோடு ரங்கூனுக்குச் சென்றார். அங்கு ஆண் குழந்தையொன்று பிறந்ததெனவும் அங்கே அவர் மனைவி இறந்து போனதால் அயோத்திதாசர் சென்னைக்குத் திரும்பி வந்தாரெனவும் தி.பெ.கமலநாதன் கூறுகிறார். (பார்க்க: போதி ৩ காலாண்டிதழ் ஏப்ரல் 2005, பக் 15). ரங்கூனில் பிறந்த மகன் அங்கேயே தங்கிவிட்டாரெனவும் அவர் குறிப்பிடுகின்றார். இந்தச் செய்தியைத் தவிர பண்டிதரின் ரங்கூன் வாழ்க்கை குறித்த செய்திகள் நமக்கு அதிகம் கிடைக்கவில்லை.

அயோத்திதாசர் தமது இருபத்தைந்தாவது வயது முதற் கொண்டே (1870) ஒடுக்கப்பட்ட மக்களின் வாழ்வியல் மேம்பாட்டுக்காகப் பல்வேறு நடவடிக்கைகளில் ஈடுபட்டாரெனத் தெரிகிறது. தமிழ் இலக்கியத்தில் அவருக்கிருந்த ஆழ்ந்த புலமை தனித்துவமான தத்துவப் பார்வையொன்றை நோக்கி அவரை இட்டுச் சென்றது. அவரது மெய்யியலின் உள்ளீடாகத் தொடக்ககாலம் முதலே பகுத்தறிவு என்பதுதான் இடம் பெற்றிருந்தது. கடவுள் நம்பிக்கை, சடங்குகளை உயர்த்திப் பிடித்தல், பார்ப்பன வைதீக மதக் கொள்கை முதலானவற்றை முற்றாக நிராகரித்து மானுட விடுதலைக்கான ஒரு தத்துவமாகவே அவரது பார்வை உருப்பெற்றிருந்தது.

அயோத்திதாசரின் அரசியல் பணிகள் தொடங்குவதற்கு சுமார் நூறு ஆண்டுகளுக்கு முன்பே அதாவது 1779ஆம் ஆண்டிலேயே பறையர் சமூகத்தவர் ஒன்று திரண்டு தமது உரிமைகளுக்காக ஆங்கில அரசிடம் மனு ஒன்றைக் கொடுத்துள்ளனர். புனித சார்ச் கோட்டைக்கு அருகில் குடியிருந்த பறையர்களை அங்கிருந்து காலி செய்துவிட்டு வெளியேறும்படி ஆங்கில அரசாங்கம் கூறியபோது, தாமும் தமது முன்னோரும் ஆங்கில அரசுக்குச் செய்த பணிகளைக் குறிப்பிட்டு

குறிப்பு

அப்பகுதியில் தாம் தொடர்ந்து குடியிருக்க இசைவுதரும்படி அம்மனுவில் அந்த மக்கள் கேட்டிருந்தனர். சென்னை சார்ச் டவுனில் பறையர் குடியிருந்த பகுதி பெரிய பறைச்சேரி எனவும், பின்னர் அது ப்ளாக்டவுன் எனவும் வழங்கப்பட்டது. அங்க குடியிருந்தவர்கள் அரசுக்கு வரி கட்ட வேண்டும் என உத்தரவு பிறப்பிக்கப்பட்டபோது அந்த வரியை ரத்து செய்ய வேண்டுமென 1810ஆம் ஆண்டு அங்கே குடியிருந்த அரசுக்கு வேண்டுகை ஒன்றை அளித்தனர்.

தீண்டாத மக்களின் இந்த அரசியல் நடவடிக்கைகளுக்கும் இந்தியாவில் ஆங்கிலேயர் நிலை பெற்றதற்குமிடையே ஒரு தொடர்பு உள்ளது. இக்காலகட்டத்தில்தான் இந்தியா வெற்றி கொள்ளப்பட்டது என அம்பேத்கார் குறிப்பிடுகிறார். 1757ஆம் ஆண்டில் நடைபெற்ற பிளாசிப்போர் தொடங்கி 1818இல் நடைபெற்ற கோரேகௌன் போரின் வெற்றியோடு ஆங்கிலேயர் ஆட்சி இந்தியாவில் உறுதிப்பட்டது. “பிளாசிப் போரில் கிளைவுடன் சேர்ந்து போரிட்டவர்கள் துசாத்துகள். அவர்கள் தீண்டாத சமூகத்தைச் சேர்ந்தவர்கள். கோரேகௌன் போரில் பங்குகொண்டு சமர் புரிந்தவர்கள் மகர்கள். அவர்களும் தீண்டாத சமூகத்தவரே ஆவார்கள்.” என அம்பேதகர் குறிப்பிடுகின்றார். ஆங்கிலேயர் ஆட்சிக்குத் தாங்கள் தந்த பலிகளையும் உழைப்பையும் குறிப்பிட்டே தீண்டாத மக்கள் வேண்டுகைகளை அளித்தார்கள். இப்படிக் கூட்டாகச் சேர்ந்து கோரிக்கைகளை அளிப்பதே அக்காலத்தில் தீண்டாதாரின் போராட்ட மரபாக இருந்துள்ளது. ஆனால், அதே காலகட்டத்தில் பிராமணர்கள் தமது நோக்கங்களை நிறைவேற்றிக் கொள்ள அச்சுறுத்துவது, தம்முடைய குழந்தைகளையும் பெண்களையும் கொலை செய்வது, அவர்களை உயிரோடு எரிப்பது முதலான வழிமுறைகளைக் கையாண்டு வந்தனர். இந்த வழக்கத்தைத் தடைசெய்து 1795ஆம் ஆண்டு வங்காள ஒழுங்குமுறைச் சட்டம் என்றொரு சட்டத்தை ஆங்கிலேயர் கொண்டு வந்தனர். (அம்பேத்கார் நூல் தொகுதி 23 பக்கம் 165ு 177)

சென்னை மாகாணத்தைச் சேர்ந்த சாதியற்ற தொல்குடி மக்களின் அரசியலில் ஒரு முடுக்கத்தை ஏற்படுத்தியவர் அயோத்திதாசர் ஆவார். இந்தியாவில் குடிக்கணக்கெடுப்பு எடுக்கும் வழக்கம் தொடங்கிய போது அதனை ஒரு அரசியல் போராட்டத்துக்கான வாய்ப்பாக அயோத்திதாசர் அடையாளம் கண்டார். தீண்டாதாராய் வைக்கப்பட்டிருந்த தொல்குடி மக்களிடம் அரசியல் ரீதியான விழிப்புணர்வை உண்டாக்க, அவர்கள் தம்மை “சாதியற்ற திராவிடர்கள்” எனக் குடிக் கணக்கெடுப்பில் பதிந்து கொள்ள வேண்டும் என அவர் அறிவுறுத்தினார்.

1881ஆம் ஆண்டுதான் இந்தியாவில் முதன் முதலாக பொதுக்குடிக்கணக்கெடுப்பு நடத்தப்பட்டது. பல்வேறு சாதிகளைச் சேர்ந்தவர்களின் மக்கள் தொகையைக் கண்டறிந்து இந்தியாவின் மொத்த மக்கள் தொகையை அளவிடுவது ஒன்றே அந்த குடிக்கணக்கெடுப்பின்போது சாதிவாரியகக் கணக்கெடுக்குமட் முயற்சி

குறிப்பு

மேற்கொள்ளப் பட்டது. 1901இல் மக்கள் தொகைக் கணக்கெடுப்பு மேற்கொள்ளப்பட்டப் போது "உள்ளூர் மக்களின் கருத்துகிணங்க சமூக ரீதியில் வகைப்படுத்துதல்" என்ற புதிய முறையை ஆங்கில அரசு அறிமுகப்படுத்தியது. 1911ஆம் ஆண்டில் எடுக்கப்பட்ட நான்காவது குடிக்கணக்கெடுப்பின் போதுதான் தீண்டாத மக்கள் எவ்வளவு பேர் இந்த நாட்டில் உள்ளனர் என்று தனியே கண்டறிவதற்கான முயற்சியை அரசாங்கம் மேற்கொண்டது. இருபதாம் நூற்றாண்டின் முதல் பத்து ஆண்டுகளில்தான் இந்திய அரசியலில் முஸ்லிம்களின் போராட்டம் எழுச்சி பெற்றது.

சட்டமன்றங்களில் தங்களுக்கு வேண்டிய பிரதிநிதித்துவம் வேண்டுமெனக் கேட்டு அவர்கள் போராடி வந்தனர்(அம்பேத்கர் ஆங்கில நூல் தொகுதி 5, பக்கம் 229–246) 1909ஆம் ஆண்டு ஜனவரி 27ஆம் தேதி இசுலாமியர்களின் குழு ஒன்று மார்லி பிரபுவைச் சந்தித்து மனு ஒன்றைத் தந்தது. அதுவரை தீண்டாத மக்களை ஒரு பொருட்டாகவே நினைக்காத சாதி இந்துக்கள் அப்போதுதான் தீண்டாதாரின் மக்கள்தொகை முகாமைத்துவத்தை உணர்ந்தனர். தீண்டாத மக்களைத் தனியே கணக்கெடுப்புச் செய்வது ஆங்கில ஆட்சியாளர்களும் இசுலாமியர்களுக்கும் செய்யும் கூட்டுச்சதி என அவர்கள் கூக்குரலிட்டனர். ஆனால், அந்த எதிர்ப்புகளைத் தாண்டி குடிக்கணக்கெடுப்பு முற்றுப் பெற்றது. 1911ஆம் ஆண்டு குடிக்கணக்கெடுப்பின் போது இந்துக்களையும், இந்துக்கள் அல்லாதவர்களையும் பிரித்தறிய கேட்கப்பட்ட வினாக்களை ஆதரித்து அயோத்திதாசர் எழுதினார் (31.11.1910), "பாப்பானுக்கு வேறு தெய்வம் பறையனுக்கு வேற தெய்வமென்று பாடித் திரிகின்றவர்களும் பறையனை பிணத்திற்கு ஒப்பானவன், பிணத்தைக் கண்டாலும் தொட்டாலும் ஸ்நானம் செய்வது போல பறையனைக் கண்டாலும் தொட்டாலும் ஸ்நானம் செய்ய வேண்டுமென்ற மனுசாஸ்திரம் எழுதி வைத்துக் கொண்டிருப்பவர்களும்" சென்சஸ் கமிஷனர் தான் பிளவுபடுத்தப் பார்க்கிறார் என வீண் கூச்சல் போடுவது ஏனென்று கேட்டார். "இக்குடிமதிப்புக் காலத்தையே குலச் சிறப்பின் காலமெனக் கருதி சீலம் பெற்று இராஜாங்கத்ததார் நன்னோக்கத்திற்கு இசைந்து நன்மார்க்கமும் நற்சீரும் அடைய வேண்டும்" என்பதே அவரது நோக்கமாக இருந்தது. நமக்கு இப்போது கிடைக்கிற விவரங்களைக் கொண்டு பார்த்தால் இந்திய அளவில் குடிக்கணக்கெடுப்பின்போது அயோத்திதாசரைப் போல அதனை ஓர் அரசியல் பிரச்சினையாக மாற்றியவர்கள் வேறு யாரும் கிடையாது. இந்துக்களை விட்டு அகன்ற கிறித்தாவ்களாகவோ, இசுலாமியர்களாகவோ, பௌத்தர்களாகவோ மாறிவிடுங்கள் என தீண்டாத மக்களுக்கு அப்போது அவர் ஆலோசனை கூறினார்.

1881 குடிக்கணக்கெடுப்பின் போது தொடங்கி பின்னர் 1911இல் குடிக்கணக்கெடுப்பு எடுக்கப்பட்ட காலம் வரை சாதியற்ற தொல்குடி மக்களின் தனித்துவமான அடையாளத்தைப் பேண அவர் கடுமையாகப்

போராடியிருப்பது வியப்பளிக்கிறது. “இந்துக்களுக்கு மத்தியில் இந்துவல்லாமல் வாழ்பவர்கள் இத்தேசப் பூர்வக்குடிகளேயாகும். இக்கூட்டத்தோருக்கு இந்துக்கள் சத்துருக்களேயன்றி மித்துருக்கள் ஆகமாட்டார்கள். பெரும்பாலும் இவர்கள் சாதிபேதமற்ற திராவிடர்களும், மதத்தில் பௌத்தாகளுமேயாகும். . சென்ற குடிமதிப்பெடுத்த காலத்தில் பறையனென்னும் பெயர் ஆயிரத்து ஐநூறு வருடங்களுக்குப் பின்னரே தோன்றிய சாதிப் பெயரென்று சென்ற சென்சஸ் கமிஷனர் தன்னுடைய குடிமதிப்பு ரிப்போர்ட்டு புத்தகத்திலும் வெளியிட்டுருக்கின்றார்கள். இவைகள் யாவையும் தற்கால சென்சஸ் கமிஷனர் கனந்தங்கிய மிஸ்டர் கேய்ட் அவர்கள் கண்ணுற்று குடிமதிப்பு எடுக்குங்கால் தங்கள் அறியாமையாலும், பயத்தினாலும் இந்துக்களுக்குப் புறம்பான பூர்வ குடிகளில் சிலர் பறையர்களென்றும் கூறுவார்கள். அவர்கள் யாவரையும் அப்பெயரால் குறிக்காது ‘சாதிப்பேதமற்ற திராவிடர்களென’ ஒரே பெயரால் -குறிப்பது உத்தமமும், பிரிட்டிஷ் ஆட்சியில் இந்துக்கள் அடையும் சுதந்திரங்களைச் சாதிபேதமற்ற திராவிடர்டகள் அடையவும் ஏதுவுண்டாகும்,” என அயோத்திதாசர் எழுதியுள்ளார் (17.12.1910) அதுமட்டுமல்லாது கிருத்தவர்களையும், இசுலாமியர்களையும் தவிர்த்து பிறர் அனைவரையும் இந்துக்களென்றே குடிக்கணக்கெடுப்பில் குறிக்க வேண்டும் என்று வடநாட்டினர் சிலர் ஏடுகள் வாயிலாகத் தெரிவித்துவந்த கருத்துக்களையும் கடுமையாக அவர் எதிர்த்துள்ளார்.

ஏசு கிறித்துவின் போதனைகள் கிருத்தவ மதத்தின் மையமாக இருப்பது போல, நபிகளின் போதனைகள் மகம்மதியர்களின் மதநம்பிக்கைக்கு ஆதாரமாக இருப்து போல இந்து மதத்துக்கு எதுவும் கிடையாது என்பதை கேலியோடு அவர் சுட்டிக் காட்டினார். “இந்து என்பவனுக்கு தேசமும் கிடையாது. பெற்று வளர்த்த தந்தையாரும் கிடையாது. அவன் போதித்த தர்மமும் இன்னதென்று கிடையாது. அவனால் சீர்திருத்திய மக்கள் கூட்டமும் கிடையாது. அவனது சரித்திரமும் கிடையாது. இத்தகைய யாதுமற்றோன் மதம் இந்து மதமாம். எந்த மதத்திற்கும் சொந்த மில்லாத மாம் இந்து மதமெனில் அவை யாருக்குரியவை? யார் அவற்றைத் தழுவுவார்? இந்து ஒருவன் உண்டாவென்னில் வேதாந்தி மதம் என்பதும், வேதாந்தி ஒருவன் உண்டாவென்னில் அத்துவித மதம் என்பதும், அத்துவிதி என்பவன் ஒருவன் உண்டாவென்னில் விசிட்டாத்துவித மதம் என்பதுமாகிய மாறுதலைக் கூறிவருவார்களன்றி எதற்கும் தக்க ஆதாரங்களைக் கொடுக்கமாட்டார்கள்.” என்று குறிப்பிட்ட அயோத்திதாசர், கிருத்தவர்களும் மகமதியர்களும் இந்த தேசத்தாருடன் சகல பாவனைகளிலும் சம்பந்தித்திருக்கின்றார்கள். அவர்களை விலக்கச் சொல்வின்றவர்கள் இந்த தேசத்தோருடன் ஒரு சம்பந்தமும் வைத்துக் கொள்ளாத ஆரியர்களை இந்த நாட்டிலிருந்து அகற்ற முன் வருவார்களா? என்றும் கேட்டார். ஆக, அயோத்தி தாசரின் திராவிட அடையாளம் என்பது சாதிபேதமற்றது. தனித்துவமானது. அது,

கிறித்தவர்களை, இசுலாமியர்களை சகோதரர்களாகப் பார்க்கின்ற ஓர் அடையாளமுமாகும். தமிழ்ச் சமூகத்துக்கு இன்றும் பயன்படக்கூடிய சிந்தனைகளை முன்வைத்த அயோத்திதாசப் பண்டிதர் 1914 ஆம் ஆண்டு மே மாதம் 5 ஆம் நாள் சம்மணமிட்டு அமர்ந்த நிலையில் பௌத்த மந்திரங்களை உச்சரித்தபடி இந்த உலகைத் துறந்தார்.

## 7.3 சகஜாநந்தா

அடிகளாரின் மெய் அன்பராய்த் திகழ்ந்த பேராசிரியர் "ஆதி திராவிடர் புனர் வாழ்வும் தவத்திரு சுவாமி யு.ளு.சகஜனந்தாவும்" என்னும் நூலை எழுதி வெளியிட்டுள்ளார்.

**அடிகளாரின் பிறப்பு** அண்ணாமலை-அலமேலு, சாமி யு.ளு. சகஜானந்த அடிகளார், தமிழகத்தின் பூர்வக்குடிகளின் மறுவாழ்வை சீரமைத்த மாபெரும் புரட்சி துறவியாவார். அடிகளார் வட ஆற்காடு மாவட்டம் ஆரணியிலிருந்து காஞ்சிபுரம் செல்லும் வழியிலுள்ள மேல் புதுப்பாக்கம் கிராமத்தில் பழந்தமிழர் குடியிருப்பில் 1890 ஜனவரி 27 ம் தேதி அண்ணாமலை அலமேலு தம்பதியினரின் மகனாக பிறந்தார். பெற்றோர் அவருக்கு முனுசாமி என்று பெயரிட்டு வளர்த்து வந்தனர். முனுசாமிக்கு மாசிலாமணி என்னும் ஒரு சகோதரனும் எட்டியம்மாள், பாக்கியலட்சுமி, கமலநாயகி என்னும் மூன்று இளைய சகோதரிகளும் இருந்தனர்.

**இளமைக் காலம்:** அடிகளார் சிறுவயதில் உள்ளூரிளிருந்த அமெரிக்கன் ஆரம்பப் பள்ளியில் கல்வி பயின்றார். பிறகு திண்டிவனத்திலிருந்த வால்ட்டர் ஸ்கல்டர் என்னும் பள்ளியில் மேல்வகுப்பு படித்தார். அப்போது கிருத்துவ வேதநூலில் தெளிந்த பயிற்சியை பெற்றிருந்தார். அவரது திறமையைக் கண்ட பாதிரியார் அவருக்கு சிகாமணி என்னும் பெயரிட்டு அழைகலானர். மேலும் அவரை கிருதுவராக்க முயற்சிசெய்தனர. மதமாற்றத்தில் விருப்பமில்லாத அச்சிறுவன் படிப்பை பாதியிலேயே நிறுத்திக்கொண்டார். இளம் வயது முதற்கொண்டே முனுசாமி இந்து மத ஆன்மீக விதிகளை கடைபிடிக்க ஆர்வம் காட்டி வந்தார். இந்து சமய சாதுக்கள் போன்று எளிய, இனிய, தூய, ஆன்மீக வாழ்க்கையை மேற்கொள்வதிலும், சைவ உணவு பழக்கத்தை பின்பற்றுவதிலும், கொல்லா விரதம் பூண்டு வாழ்வதிலும் தனித்திருந்து சிந்தனையில் ஆழ்திருபதிலும் இவ்விளைஞன் தனி நாட்டம் கொண்டிருந்தார். முனுசாமியின் பெற்றோர் கோலார் தங்க வயலில் சுரங்க வேலை செய்ய சென்றபோது அவரும் உடன்செல்ல நேர்ந்தது. மாலை வேளைகளில் கோலாரில் நடைபெற்ற பல இந்து மத பெரியோர்களின் சொற்பொழிவுகளை கேட்கும் வாய்ப்பினை பெற்றார். அது அவருக்கு ஆன்மீகத்தில் பெரும் இடுபாட்டினை ஏற்படுத்தியது. மீண்டும் தன் பெற்றோருடன் கிராமத்திற்கு திரும்பிய முனுசாமி சுப்பையா நாயுடு பண்ணையில் வேலைக்கு சேர்ந்தார். அங்கும் வேலையை மறந்து தனியாக அமர்ந்து ஆன்மீக தேடலில் தன்னை மறந்து ஏதேதோ

குறிப்பு

பேசிக்கொள்வதைக் கண்ட ஊர் மக்கள் அவரை ஞானபித்தன் என்று அழைக்கலாயினர்.

அவர் ஊருக்கு அருகாமையிலிருந்த நீலமேக சுவாமிகளின் முனுகப்பட்டு ஆஷ்ரமத்திற்கு அடிக்கடிச் சென்று வந்தார். அதுவே அவர் யோகியாக உருமாற உலக உண்மைகளை அறிந்து கொள்ளும் இடமாக அமைந்தது. இளைஞர் முனுசாமி தன் தாய், தந்தை, அண்ணன், தங்கைகள் மற்றும் உற்றார் உறவினர் அனைவரையும் பிரிந்து அசைவமும் மறுத்து 1907ஆம் ஆண்டு துறவறம் ஏற்றார். காஞ்சிபுரம் தட்சணாமூர்த்தி ஸ்வாமிகள் சென்னை வடிவேல் செட்டியார் மற்றும் கைலாச சுவாமி ஆகியோர் அவருக்கு துறவறத்தின் குருமாராகத் திகழ்தனர். வியாசர்பாடியிலிருந்த கரபாத்திர சுவாமி என்னும் சிவப்பிரகசரின் ஆசிரமத்தில் சீடராக சேர்ந்து ஆன்மீகத் தெளிவை பெற்றார்.

துறவு நிலை அடைந்த பிறகும் ஆசிரமத்திலிருந்த மற்றய சீடர்கள் காட்டிய தீண்டாமை பேதங்கள் அவரை பெரிதும் வாட்டியது. அங்கே அவருக்கு குடிநீர் மறுக்கப்பட்டது. இது குறித்து கரபாத்திர சுவாமிகளிடம் தன் வேதனையை வெளியிட்ட போது சுவாமிகள் ”இன்று முதல் நீ இறைவனுடன் சகஜமாக கலந்து ஆனந்தம் பெறுபவன் என்னும் பொருள் படும் சகஜானந்தம் என்று அழைக்கபடுவாய். நாகரிகம் வளர்ந்து வரும் இந்த பட்டினத்திலே உள்ள பாகுபாட்டினைக் கண்டு பதருகிறாயே, தீண்டாமைக்காக குரல் கொடுத்த ஆதி தமிழர்களின் முதல் போராளி நந்தன் என்னும் சிற்றரசன் ஆண்டவனை காணவேண்டி தீயில் இறங்கிய தில்லை என்னும் சிதம்பரம் சென்று பார், அங்கே உள்ள உன் மக்களின் அவல நிலையை அறிவாய், அங்கே சென்று உன் மக்களுக்கு கல்வி தந்து விழிப்புணர்வு அடையச்செய்வாய் உன் துறவறம் ஏழை எளிய மக்களின் முன்னேற்றத்தில் ஆனந்தம் அடைவதாக அமையட்டும்” என்று ஞான தீட்சை அருளினார். சிதம்பரத்தில் 1916 ல் நந்தனார் கல்விக் கழகத்தை நிறுவியவர். தாழ்த்தப்பட்ட மக்கள் உயர்வுக்காக துறவறம் பூண்டு தன் வாழ்நாள் முழுதும் உழைத்தவர்.

சிதம்பரத்தில் நந்தனார் திருப்பெயரில் ஆண்களுக்கும் பெண்களுக்கும் தனித்தனியே கல்விக்கூடங்கள் நிறுவியவர். அவர்களுக்காக உணவு வசதியுடன் தங்கி படிக்க விடுதிகளும் அமைத்துள்ளார். காங்கிரஸ் கட்சியின் முலம் அரசியலில் ஈடுபட்ட அடிகளார் 1926 முதல் 1932 வரையிலும் சென்னை மாகாண சட்டபேரவை உறுப்பினராக இருந்தார். பின்னர் 1936 முதல் தொடர்ந்து 1959 தன் இறுதி மூச்சு வரை சிதம்பரம் தொகுதி சட்டமன்ற உறுப்பினராக பதவி வகித்துள்ளார். அண்ணல் அம்பேத்கருடன் தொடர்பு வைத்திருந்த தமிழகத் தலைவர்களுள் அடிகளார் மிக முக்கியமானவராவார். இரட்டை வாக்குரிமை, வயது வந்தோர்க்கு வாக்களிக்கும் உரிமை ஆகிய அரசியல் கோரிக்கைகளை அம்பேத்கர்

**குறிப்பு**

முன் வைத்த போது அதற்கு வலிமை சேர்க்கும் விதமாக போராடினார். தமிழ்நாட்டில் ஆதி திராவிட நலப் பள்ளிகள் உருவாக காரணமாகத் திகழ்ந்தார். தமிழ் மற்றும் சமஸ்கிரத மொழிகளில் புலமை பெற்றிருந்தார். கப்பல் ஓட்டிய தமிழர் வ.உ.சிதம்பரம் பிள்ளையிடம் திருக்குறள் விளக்கம் பெற்றார். அவரைத் தன் ஞானத் தந்தை என்று அடிகளார் குறிபிடுகிறார்.

## 7.4 முத்துலெட்சுமி ரெட்டி

இந்தியாவின் முதல் பெண் மருத்துவரும், தமிழகத்தின் மாபெரும் பெண்ணியப் போராளியும், அடையாறு புற்றுநோய் மருத்துவமனையை நிறுவியவருமான டாக்டர்.முத்துலட்சுமி ரெட்டி அம்மையாரின் பிறந்ததினம் இன்று (ஜூலை 30). புதுக்கோட்டை மாவட்டத்தைச் சேர்ந்த வழக்கறிஞர் நாராயணசாமி, பிரபல பாடகி சந்திரமாள் ஆகிய தம்பதியினருக்கு 1886ஆம் ஆண்டு ஜூலை 30ஆம் தேதி மூத்த மகளாகப் பிறந்தவர்தான் முத்துலட்சுமி ரெட்டி. அடுப்பூதும் பெண்களுக்கு படிப்பு எதற்கு? என்ற பழைய பஞ்சாகம் பேசிக்கொண்டு பெண் அடிமைத்தனம் கோலாங்கி இருந்த காலகட்டத்தில் அவைகளை உடைத்தெறிந்து துணிந்து பள்ளிக்கு சென்றவர் முத்துலட்சுமி ரெட்டி. பருவமடைந்த பெண்கள் வெளியே போகக் கூடாது என்ற கட்டுபாடுகளினால் அவரால் தொடர்ந்து பள்ளிக்கு செல்ல முடியமால் போனாலும், தந்தையின் உதவியுடன் தனிப்பட்ட முறையில் மெட்ரிக்குலேஷன் தேர்வு எழுதி மாநிலத்தில் முதலிடம் பிடித்தவர் முத்துலட்சுமி.

புதுக்கோட்டை மன்னர் கல்லூரியில் கல்வி பயின்ற முத்துலட்சுமி, சென்னை பல்கலைக்கழகத்தில் மருத்துவம் பட்டம் பெற்ற முதல் பெண் மருத்துவர் என்ற பெருமைக்குரியவர் ஆவார். சென்னை மாகான சட்டப்பேரவைக்கு தேர்வு செய்யப்பட்ட முதல் பெண் உறுப்பினராகவும், சட்டப்பேரவை துணைத்தலைவர் பதவி வகித்த முதல் பெண் என்ற பெருமையும் உடையவர் முத்துலட்சுமி ரெட்டி. சென்னை மாநகராட்சியின் முதல் பெண் மேயர், சென்னை மாகாணத்தின் சமூக நல வாரியத்தின் முதல் பெண் தலைவர் எனப் பல பதவிகளில் முதல் பெண்மணியாக தன்னை அலங்கரித்தவர் முத்துலட்சுமி ரெட்டி. பெண்கள் கல்வியே கற்கக் கூடாது என்ற காலத்தில், மிகப்பெரிய எதிர்ப்புகளைத் தாண்டி மருத்துவம் பயின்று மருத்துவரானார். தான் மட்டுமல்லாது பெண்கள் அனைவருமே கல்வி கற்க வேண்டும் என்ற எண்ணத்தை நாடெங்கும் விதைத்தவர். ஆதரவற்ற குழந்தைகளுக்காக அடையாறில் அவ்வை இல்லம் தொடங்கினார். புற்றுநோய் கண்ட தன் தங்கை இளம் வயதில் இறந்ததும், ஒரு டாக்டராக இருந்தும் தங்கையைக் காப்பாற்ற முடியாமல் போனதும் இவரை மிகவும் பாதித்தது. இந்தத் துயரம் மற்றவர்களுக்கும் ஏற்படக் கூடாது என்பதால்,

1925இல் லண்டன் சென்ற இவர், செல்சியா மருத்துவமனையில் தாய், சேய் மருத்துவ ஆராய்ச்சியும், ராயல் புற்றுநோய்

மருத்துவமனையில் புற்றுநோய் ஆராய்ச்சிகளையும் மேற்கொண்டார். பின்னர் இந்தியா திரும்பிய முத்துலட்சுமி ரெட்டி, சென்னை அடையாறில் புற்றுநோய் மருத்துவமனை அமைக்கப் பலவிதங்களிலும் முயன்று 2 லட்சம் ரூபாய் நிதி திரட்டி, நிறுவினார். இன்று புற்றுநோயளிகளுக்கு புகலிடமாக விளங்கும் அடையாறு புற்றுநோய் மருத்துவமனைக்காக அவர் இன்றளவும் நினைவு கூறப்படுகிறார். இந்த நிறுவனம் தற்போது உலக அளவில் குறிப்பிடத்தக்க சிறந்த புற்றுநோய் மருத்துவ மையமாக விளங்குகிறது. இந்த மருத்துவமனையில் ஆண்டுக்கு 80,000 நோயாளிகளுக்கு சிகிச்சை அளிக்கப்படுவதாக அறிவிக்கப்பட்டுள்ளது.

பிரான்ஸ் தலைநகர் பாரிஸில் 1926ஆம் ஆண்டு நடைபெற்ற உலக பெண்கள் மாநாட்டில், இந்தியாவின் சார்பாகப் பங்கேற்று, பெண்ணடிமை தனத்திற்கு எதிராக வழுவான குரல் கொடுத்தவர். இவரின் சமூக பணிகளைப் பாராட்டி மத்திய அரசு இவருக்கு பத்மபூஷண் விருது வழங்கிக் கவுரவித்தது. தமிழக அரசும் இவரது பேரில் முத்துலட்சுமி ரெட்டி மகப்பேறு நிதியுதவி திட்டத்தை செயல்படுத்தி வருகிறது. காந்தி மற்றும் பெரியாருடன் இணைந்து பெண்கள் முன்னேற்றத்திற்காகப் போராடியவர். முக்கியமாக, தேவதாசி முறை ஒழிப்பு, இருதார தடைச்சட்டம், பெண்களுக்கு சொத்துரிமை வழங்கும் சட்டம், பால்ய விவாகங்கள் தடைச்சட்டம், ஏழை பெண்களுக்கு இலவச கல்வி ஆகிய புரட்சிகரமான சட்டங்களைக் கொண்டு வந்து அவற்றை நிறைவேற்றினார். ஆதரவற்ற குழந்தைகள், பெண்கள், முதியோர்களுக்கான இல்லங்களை அமைத்தார். பாரதி கண்ட புதுமைப் பெண்ணாக, இன்றைய பெண்களின் முன்னேற்றத்திற்கு ஒளிவிளக்காகத் திகழ்ந்தவர் முத்துலட்சுமி ரெட்டி. மகத்தான சமூக சேவகியும், தலைசிறந்த மருத்துவரும், பெண்களின் முன்னேற்றத்திற்காகப் பாடுபட்டவருமான டாக்டர் முத்துலட்சுமி ரெட்டி, 1968ஆம் ஆண்டு 82ஆவது வயதில் மறைந்தார். நடப்பாண்டு முதல் இந்தியாவின் முதல் பெண் மருத்துவரான முத்துலட்சுமி ரெட்டியின் பிறந்த நாளான ஜூலை 30ஆம் தேதி தமிழகத்தில் உள்ள அனைத்து அரசு மருத்துவமனைகளிலும் “மருத்துவமனை தினம்” கொண்டாடப்படும் என தமிழக சுகாதாரத் துறை அமைச்சர் விஜயபாஸ்கர் தெரிவித்திருந்தார். அதன்படி இன்று தமிழகம் முழுவதும் உள்ள அரசு மருத்துவமனைகளில் மருத்துவமனை தினம் கொண்டாடப்பட்டு வருகிறது என்பதுக் குறிப்பிடத்தக்கது

**தமிழ்ப் பணிகள்** :இந்திமொழிக் கிளர்ச்சியில் பங்குபெற்றார். தமிழிசை இயக்கம், தமிழ் வளர்ச்சி, தமிழாசிரியர்களின் ஊதிய உயர்வுப் போராட்டம் எனத் தமிழ்ப் பணிகள் செய்தார். மாதர் இந்திய சங்கம் நடத்திய பெண்களுக்கான “ஸ்திரீ தருமம்“ என்னும் மாத இதழின் ஆசிரியராக விளங்கினார்.

குறிப்பு

### 7.4.1 சமூகப்பணி

1926-ஆம் ஆண்டு 43 நாடுகளின் பிரதிநிதிகள் கலந்து கொண்ட அகில உலகப் பெண்கள் மாநாடு, பிரான்சு நாட்டுத் தலைநகர் பாரீசில் நடைபெற்றது. அதில் இந்தியாவின் சார்பில் முத்துலட்சுமி ரெட்டி கலந்து கொண்டார். அப்போது அவர் நிகழ்த்திய சொற்பொழிவில், ஆண்களுக்கு நிகராகப் பெண்கள் முன்னேற வேண்டும். பெண்களை அடிமைகளாக நடத்தும் வழக்கம் ஒழிய வேண்டும் என்று வலியுறுத்தினார்.

இந்தியப் பெண்கள் சங்கத்தின் முதல் தலைவர் என்னும் பெருமையைப் பெற்றவர். சென்னை மாநகராட்சியின் முதல் துணை மேயர் என்னும் பெருமையும் இவருக்கு உண்டு. அன்றைய சென்னை மாகாண சட்டசபைக்கு முத்துலட்சுமி தேர்ந்தெடுக்கப்பட்டார். அதன் மூலம் சட்டமன்றத்துக்குத் தேர்ந்தெடுக்கப்பட்ட முதல் பெண்மணி என்ற பெருமை பெற்றார். 1925-ஆம் ஆண்டு சட்டசபைத் துணைத்தலைவராகத் போட்டியின்றி தேர்ந்தெடுக்கப்பட்டார். இந்தப் பதவியில் இருந்த ஐந்தாண்டுளில் சில புரட்சி சட்டங்களைக் கொண்டு வந்து நிறைவேற்றினார். அவற்றில், தேவதாசி முறை ஒழிப்பு, இருதார தடைச் சட்டம்,பெண்களுக்குச் சொத்துரிமை வழங்கும் சட்டம், பால்ய விவாகரங்களை தடை செய்யும் சட்டம் போன்ற சில குறிப்பிடத்தக்கவை. அனாதையாக்கப்பட்ட குழந்தைகளை வளர்த்து அவர்களுக்கு நல்ல எதிர்காலத்தை உருவாக்க உருவானதே அவ்வை இல்லம் அடையாறில் அமைந்துள்ளது இதனை அமைத்தவர் முத்துலட்சுமி. சென்னையில் புற்றுநோய் மருத்துவமனை அமைக்க பலவிதங்களிலும் நிதி திரட்டினார். இன்று புற்று நோயாளிகளுக்குப் புகலிடமாக விளங்கும் அடையாறு புற்றுநோய் மருத்துவமனைக்குப் பிரதமர் நேரு 1952-ஆம் ஆண்டு அக்டோபர் மாதத்தில் அடிக்கல் நாட்டினார்.

**விருதுகள்:** முத்துலட்சுமியின் சேவைகளுக்காக மத்திய அரசு 1956 இல் பத்ம பூஷண் விருது கொடுத்து கௌரவித்தது என்பதுக் குறிப்பிடத்தக்கது

**உங்கள் முன்னேற்றத்தைச் சரிபார்க்கவும்**

1. நந்தனார் கல்விக் கழகத்தை நிறுவியவர் யார்?
2. இந்தியாவின் முதல் பெண் மருத்துவர் யார்?

## 7.5 உங்கள் முன்னேற்றத்தைச் சரிபார்க்கும் வினாக்களுக்கான விடைகள்

1. சிதம்பரத்தில் 1916 ல் நந்தனார் கல்விக் கழகத்தை நிறுவியவர் சகஜாநந்தா ஆவார்.

2. இந்தியாவின் முதல் பெண் மருத்துவரும், தமிழகத்தின் மாபெரும் பெண்ணியப் போராளியும், அடையாறு புற்றுநோய் மருத்துவமனையை நிறுவியவர் டாக்டர்.முத்துலட்சுமி ரெட்டி ஆவார் .

குறிப்பு

## 7.6 சுருக்கவுரை

- அயோத்தி தாசரின் திராவிட அடையாளம் என்பது சாதிபேதமற்றது. தனித்துவமானது. அது, கிறித்தவர்களை, இசுலாமியர்களை சகோதரர்களாகப் பார்க்கின்ற ஓர் அடையாளமுமாகும். தமிழ்ச் சமூகத்துக்கு இன்றும் பயன்படக்கூடிய சிந்தனைகளை முன்வைத்த அயோத்திதாசப் பண்டிதர் 1914 ஆம் ஆண்டு மே மாதம் 5 ஆம் நாள் சம்மணமிட்டு அமர்ந்த நிலையில் பௌத்த மந்திரங்களை உச்சரித்தபடி இந்த உலகைத் துறந்தார்.
- சகஜாநந்தா தமிழ்நாட்டில் ஆதி திராவிட நலப் பள்ளிகள் உருவாக காரணமாகத் திகழ்ந்தார். தமிழ் மற்றும் சமஸ்கிரத மொழிகளில் புலமை பெற்றிருந்தார். கப்பல் ஓட்டிய தமிழர் வ.உ .சிதம்பரம் பிள்ளையிடம் திருக்குறள் விளக்கம் பெற்றார். அவரைத் தன் ஞானத் தந்தை என்று அடிகளார் குறிபிடுகிறார்.
- பெண் அடிமைத்தனம் கோலாங்கி இருந்த காலகட்டத்தில் அவைகளை உடைத்தெறிந்து துணிந்து பள்ளிக்கு சென்றவர் முத்துலட்சுமி ரெட்டி. பருவமடைந்த பெண்கள் வெளியே போகக் கூடாது என்ற கட்டுபாடுகளினால் அவரால் தொடர்ந்து பள்ளிக்கு செல்ல முடியமால் போனாலும், தந்தையின் உதவியுடன் தனிப்பட்ட முறையில் மெட்ரிக்குலேஷன் தேர்வு எழுதி மாநிலத்தில் முதலிடம் பிடித்தவர் முத்துலட்சுமி ரெட்டி.

## 7.7 முக்கிய கருத்துப்படிமங்கள்

- அயோத்திதாசப்பண்டிதர்
- சகஜாநந்தா
- முத்துலெட்சுமி ரெட்டி

## 7.8 சுயமதிப்பீட்டு பயிற்சி வினாக்கள்

**குறுகிய வினாக்களுக்கு விடையளிக்கவும்**

1. அயோத்திதாசப்பண்டிதர் பற்றி மதிப்பிடுக?

2. சகஜாநந்தாவின் தமிழ்ப் பணியைப் பற்றிக் குறிப்பிடுக?

**விரிவான வினாக்களுக்கு விடையளிக்கவும்**

1. முத்துலெட்சுமிரெட்டியின் சமூகப் பணியைப் பற்றி கட்டுரை வரைக?

## 7.9 மேலும் படிக்க

குறிப்பு


- ஐயங்கார்,சீனிவாச்.. வு (2001), *தமிழர்களின் வரலாறு: ஆரம்ப காலத்திலிருந்து 600 கி.பி வரை.* டெல்லி
- கிருஸ்ணசுவாமி.அ, (1977) விஜயநகரபப் பேரரசின் வரலாறு (கிபி1525 வரை) தமிழ்நாட்டுப் பாடநூல் நிறுவனம், அண்ணாமலைநகர்.
- சர்மா,சு.ளு. (2006). *பண்டைய இந்தியாவின் முந்தைய காலம்.* ஆக்ஸ்.ஃ.போர்ட் யுனிவர்சிட்டி பிரஸ்.
- சாஸ்திரி, ராமசாமி. (2002) *தமிழர்கள்: மக்கள், அவர்களின் வரலாறு மற்றும் கலாச்சாரம்.* புதுடெல்லி, காஸ்மோ பப்ளிகேஷன்ஸ்
- சிராஜீத்தின, (2010), *தமிழ்நாட்டு வரலாறு (கி.பி. 1987 வரை),* பாவை பப்ளிகேசன், சென்னை
- தேவநேயப்பாவணர். (1992) *பண்டைத் தமிழர் நாகரிகமும் பண்பாடும்*, கழக வெளியீடு சென்னை
- மாதவன்,சித்ரா, (2005), *தமிழ்நாட்டின் வரலாறு மற்றும் கலாச்சாரம்: தொகுதி-1 (கி.பி.1310 வரை).* டெல்லி

# அலகு VIII

## பாரதியார் - பாரதிதாசன்

குறிப்பு

## அலகு VIII பாரதியார்



## 8.0 முன்னுரை

'மீசை கவிஞன்' என்றும் 'முண்டாசு கவிஞன்' என்றும் தமிழ் இலக்கிய உலகம் போற்றும் பாரதியார், தாய் மொழியாம் தமிழ் மொழியின் மீது மிகுந்த பற்றுடையவராக திகழ்ந்தார். இவர் சமஸ்கிருதம், வங்காளம், இந்தி, ஆங்கிலம் போன்ற பிறமொழிகளிலும் தனி புலமைப்பெற்று விளங்கினார். 1912 ஆம் ஆண்டு கீதையை தமிழில் மொழிப்பெயர்த்தார். 'கண்ணன்பாட்டு', 'குயில்பாட்டு', 'பாஞ்சாலி சபதம்',' புதிய ஆத்திச்சூடி' போன்ற புகழ் பெற்ற காவியங்கள் பாரதியரால் எழுதப் பெற்றன.

தமிழுக்கும் அமுதென்று பேர், அந்தத் தமிழின்பத் தமிழெங்கள் உயிருக்கு நேர்" என்ற தேன் சுவைசொட்டும் பாடல் வரிகளுக்கு சொந்தக்காரர், 'பாவேந்தர் பாரதிதாசன்' அவர்கள். பெரும் புகழ் படைத்த

குறிப்பு

பாவலரான பாரதிதாசன் அவர்கள், 'புரட்சிக்கவி' என்றும், 'பாவேந்தர்' என்றும் அழைக்கப்பட்டார். தமிழ் இலக்கியம், தமிழ் இலக்கணம் மற்றும் சைவ சித்தாந்த வேதாந்தங்களை முறையாகக் கற்று, தமிழ் மொழிக்கு அருட்தொண்டாற்றியவர், பாரதிதாசன் அவர்கள். தமிழாசிரியர், கவிஞர், அரசியல்வாதி, திரைக் கதாசிரியர், எழுத்தாளர், கவிஞர், என்று பல்வேறு துறைகளில் தமிழ் மொழியின் இனிமையை மக்களிடம் எடுத்துச் சென்றவர் என்று சொன்னால் அது மிகையாகாது. தனது படைப்புகளுக்காக 'சாஹித்ய அகாடமி விருது' பெற்ற பாவேந்தர் பாரதிதாசன் அவர்களின் வாழ்க்கை வரலாறு மற்றும் தமிழ்மொழியில் இன்றளவும் நிலைத்துநிற்கும் என்பதுக் குறிப்பிடத்தக்கது

## 8.1 நோக்கம்

- பாரதியார் இந்திய சுதந்திர போராட்ட காலத்தில் கனல் தெறிக்கும் விடுதலைப்போர் கவிதைகள் வாயிலாக மக்களின் மனதில் விடுதலை உணர்வை ஊட்டியவர் என்பதைப் பற்றி அறிந்துக்கொள்ள முடிகின்றது
- பாரதிதாசன் சாதி மறுப்பு, கடவுள் எதிர்ப்பு போன்ற மூடநம்பிக்கைகளை மக்களின் மனதிலிருந்து அகற்றியதைப் பற்றி அறிந்துக்கொள்ள முடிகின்றது

## 8.2 பாரதியார்

சுப்ரமணிய பாரதியார் ஒரு தமிழ் கவிஞர். இந்திய சுதந்திர போராட்ட காலத்தில் கனல் தெறிக்கும் விடுதலைப்போர் கவிதைகள் வாயிலாக மக்களின் மனதில் விடுதலை உணர்வை ஊட்டியவர். இவர் ஒரு கவிஞர் மட்டுமல்லாமல் ஒரு எழுத்தாளர், பத்திரிக்கையாசிரியர், சமூக சீர்திருத்தவாதி மற்றும் தன்னுடைய பாட்டுகளின் மூலமாக சிந்தனைகளை மக்களிடம் தட்டியெழுப்பியவர். தம் தாய்மொழியாம் தமிழ்மொழி மீது அளவுகடந்த பற்றுக்கொண்ட இவர், "யாமறிந்த மொழிகளிலே தமிழ்மொழிபோல் இனிதாவதெங்கும் காணோம்" என்று போற்றி பாடியுள்ளார். விடுதலைப் போராட்ட காலத்தில், இவருடைய தேசிய உணர்வுள்ள பல்வேறு கவிதைகள் மக்களை ஒருங்கிணைத்த காரணத்தினால் "தேசிய கவியாக" போற்றப்பட்ட மாபெரும் புரட்சி வீரனின் வாழ்க்கை வரலாறு மற்றும் சாதனைகளைப் பற்றி பின்வருமாறுக் குறிப்பிடப்படுகின்.

- **பெயர்:** சுப்பையா (எ) சுப்பிரமணியன்
- **பிறப்பு:** டிசம்பர் 11, 1882
- **பிறந்த இடம்:** எட்டயபுரம், தமிழ்நாடு
- **மற்ற பெயர்கள்:** முண்டாசுக் கவிஞன், சக்தி தாசன், பாரதியார், மகாகவி
- **இருப்பிடம்:** திருவல்லிக்கேணி, சென்னை
- **பணி:** கவிஞர், எழுத்தாளர், விடுதலை போராட்ட வீரர், பத்திரிக்கையாசிரியர்
- **பெற்றோர்:** சின்னசாமி ஐயர், இலக்குமி அம்மாள்
- **துணைவியார் பெயர்:** செல்லம்மாள் பிள்ளைகள் தங்கம்மாள், சகுந்தலா
- **முக்கிய படைப்புகள்**: கண்ணன் பாட்டு, குயில் பாட்டு. பாஞ்சாலி சபதம் மற்றும் பல சமயம் இந்து
- **இறப்பு:** செப்டம்பர் 11, 1921

### 8.2.1 இளமைப் பருவம்

இளம் வயதிலேயே பாரதியாருக்கு தமிழ் மொழி மீது சிறந்த பற்றும், புலமையும் இருந்தது. ஏழு வயதில் பள்ளியில் படித்துவரும்பொழுது கவிதைகள் எழுதத் தொடங்கினார். தன்னுடைய பதினொரு வயதில் கவிபாடும் ஆற்றலை வெளிப்படுத்தினார், இவருடைய கவிப்புலமையை பாராட்டிய எட்டயபுரமன்னர், இவருக்கு “பாரதி” என்ற பட்டத்தை வழங்கினார். அன்று முதல் இவர் “சுப்பிரமணிய பாரதியார்” என அழைக்கப்பெற்றார். .

**பாரதியாரின் திருமண வாழ்க்கை:** பாரதியார் அவர்கள், பள்ளியில் படித்துகொண்டிருக்கும் பொழுதே 1897 ஆம் ஆண்டு செல்லம்மா என்பவரைத் திருமணம் செய்து கொண்டார். தனது தந்தையின் இறப்புக்குப் பிறகு பாரதியார் வறுமை நிலையினை அடைந்தார். சிறிது காலம் காசிக்கு சென்று தங்கியிருந்தார். பிறகு எட்டையபுர மன்னரின் அழைப்பை ஏற்று அரசவை கவிஞராக பணியாற்றினார்.

### 8.2.2 பாரதியாரின் இலக்கிய பணி

‘மீசை கவிஞன்’ என்றும் ‘முண்டாசு கவிஞன்’ என்றும் தமிழ் இலக்கிய உலகம் போற்றும் பாரதியார், தாய் மொழியாம் தமிழ் மொழியின் மீது மிகுந்த பற்றுடையவராக திகழ்ந்தார். இவர் சமஸ்கிருதம், வங்காளம், இந்தி, ஆங்கிலம் போன்ற பிறமொழிகளிலும் தனி புலமைப்பெற்று விளங்கினார். 1912 ஆம் ஆண்டு கீதையை தமிழில்

மொழிப்பெயர்த்தார். 'கண்ணன்பாட்டு', 'குயில்பாட்டு', 'பாஞ்சாலி சபதம்',' புதிய ஆத்திச்சூடி' போன்ற புகழ் பெற்ற காவியங்கள் பாரதியரால் எழுதப் பெற்றன.

குறிப்பு

### 8.2.3 விடுதலைப் போராட்டத்தில் பாரதியின் பங்கு

சுதந்திரப் போரில், பாரதியின் பாடல்கள் உணர்ச்சி வெள்ளமாய், காட்டுத்தீயாய், சுதந்திரக் கனலாய் தமிழ்நாட்டை வீருகொள்ளச் செய்தது. பாரதியார் "இந்திய பத்திரிக்கையின்" மூலம் மக்களிடையே விடுதலை உணர்வை தூண்டும் வகையில் பல எழுச்சியூட்டும் கட்டுரைகளை எழுதினார். பாரதியின் எழுச்சிக்கு, தமிழ்நாட்டில் பலத்த ஆதரவு பெருகுவதைக் கண்ட பிரிட்டிஷ் ஆட்சி "இந்தியா பத்திரிக்கைக்கு" தடை விதித்து அவரை கைது செய்து சிறையிலும் அடைத்தது. அதுமட்டுமல்லாமல், விடுதலைப் போராட்டக் காலத்தில் தேசிய உணர்வுள்ள பல்வேறு கவிதைகளைப் படைத்து மக்களை ஒருங்கிணைத்த காரணத்தால், பாரதி "தேசிய கவியாக" அனைவராலும் போற்றப்பட்டார். இவர் சுதேசிமித்திரனில் உதவி ஆசிரியராக, நவம்பர் 1904 முதல் ஆகஸ்ட் 1906 வரை பணியாற்றினார். "ஆடுவோமே பள்ளு பாடுவோமே ஆனந்த சுதந்திரம் அடைந்துவிட்டோம்" என்று சுதந்திரம் அடைவதற்கு முன்பே தன்னுடைய சுதந்திர தாகத்தை தன் பாட்டின் மூலம் வெளிபடுத்தியவர், மகாகவி சுப்பிரமணிய பாரதியார்.

**இறப்பு:** 1921 ஆம் ஆண்டு ஜூலை மாதம் திருவல்லிகேணியில் உள்ள பார்த்தசாரதி கோவிலுக்கு சென்றபோது, எதிர்பாராவிதமாக அந்த கோவில் யானையால் தூக்கி எறியப்பட்டதால் பலத்த காயமுற்று மிகவும் நோய்வாய்ப்பட்டார். பிறகு, 1921 செப்டம்பர் 11ம் தேதி, தனது 39 ஆவது வயதில் இவ்வுலக வாழ்விலிருந்து விடுதலைப் பெற்றார்.

### 8.2.4 பாரதியாரை நினைவூட்டும் சின்னங்கள்

எட்டயபுரத்திலும், சென்னையில் உள்ள திருவல்லிக்கேணியிலும் பாரதியார் வாழ்ந்த இடத்தை பாரதியாரின் நினைவு இல்லமாக தமிழ்நாடு அரசு மாற்றி இன்று வரை பொதுமக்களின் பார்வைக்காக பராமரித்து வருகிறது. இவர் பிறந்த எட்டயபுரத்தில், பாரதியின் நினைவாக மணிமண்டபமும் அமைக்கப்பட்டு இவருடைய திருவுருவச் சிலையும் வைக்கப்பட்டுள்ளது. பாரதியின் வாழ்க்கை வரலாறு தொடர்பான புகைப்படக் கண்காட்சியும், இவருடைய திருவுருவச் சிலையும், இவரின் நினைவை போற்றும் வகையில் அமைக்கப்பட்டுள்ளது.

பாரதியை மக்கள், 'கவி', 'மானுடம் பாடவந்த மாகவி', 'புது நெறி காட்டிய புலவன்', எ'ண்ணத்தாலும் எழுத்தாலும் இந்திய சிந்தனைக்கு வளம் சேர்த்தவர்', 'பல்துறை அறிஞர்', 'புதிய தமிழகத்தை உருவாக்க கனவு கண்ட கவிக்குயில்', 'தமிழின் கவிதை' மற்றும் உரைநடையில் தன்னிகரற்ற புலமை பெற்ற பேரறிவாளர், என்றெல்லாம்

புகழ்கின்றனர். உலகதமிழர் நாவில் மக்கள்கவி பாரதியாரின் பெயர் அடிக்கடி உச்சரிக்கபடுகிறது என்றால் அது மிகையாகாது.

## 8.3 பாரதிதாசன்

குறிப்பு

தமிழுக்கும் அமுதென்று பேர், அந்தத் தமிழின்பத் தமிழெங்கள் உயிருக்கு நேர்" என்ற தேன் சுவைசொட்டும் பாடல் வரிகளுக்கு சொந்தக்காரர், 'பாவேந்தர் பாரதிதாசன்' அவர்கள். பெரும் புகழ் படைத்த பாவலரான பாரதிதாசன் அவர்கள், 'புரட்சிக்கவி' என்றும், 'பாவேந்தர்' என்றும் அழைக்கப்பட்டார். தமிழ் இலக்கியம், தமிழ் இலக்கணம் மற்றும் சைவ சித்தாந்த வேதாந்தங்களை முறையாகக் கற்று, தமிழ் மொழிக்கு அருட்தொண்டாற்றியவர், பாரதிதாசன் அவர்கள். தமிழாசிரியர், கவிஞர், அரசியல்வாதி, திரைக் கதாசிரியர், எழுத்தாளர், கவிஞர், என்று பல்வேறு துறைகளில் தமிழ் மொழியின் இனிமையை மக்களிடம் எடுத்துச் சென்றவர் என்று சொன்னால் அது மிகையாகாது. தனது படைப்புகளுக்காக 'சாஹித்ய அகாடமி விருது' பெற்ற பாவேந்தர் பாரதிதாசன் அவர்களின் வாழ்க்கை வரலாறு மற்றும் தமிழ்மொழியில் இன்றளவும் நிலைத்துநிற்கும் என்பதுக் குறிப்பிடத்தக்கது

- **பிறப்பு**: ஏப்ரல் 29, 1891
- **பிறப்பிடம்:** புதுவை
- **இயற்பெயர்:** சுப்புரத்தினம
- **இறப்பு:** ஏப்ரல் 21, 1964
- **பணி:** தமிழாசிரியர், கவிஞர், அரசியல்வாதி
- **நாட்டுரிமை:** இந்தியன்

### 8.3.1 இளமை வாழ்க்கையும், கல்வியும்

**பிறப்பு:** பாவேந்தர் பாரதிதாசன் அவர்கள், தென்னிந்தியாவில் இருக்கும் புதுவையில், ஏப்ரல் மாதம் 29 ஆம் தேதி, 1891 ஆம் ஆண்டில் கனகசபை முதலியார் மற்றும் இலக்குமி அம்மாள் தம்பதியருக்கு மகனாகப் பிறந்தார். அவரது தந்தை, அவ்வூரில் பெரிய வணிகராக இருந்தார். பாரதிதாசன் அவர்களின் இயற்பெயர் சுப்புரத்தினம். அவரது தந்தையின் பெயரின் முதல் பாதியை, தன்னுடைய பெயரில் இணைத்து 'கனகசுப்புரத்தினம்' என்று அழைக்கப்பட்டார்.

**கல்வி**: பாரதிதாசன் அவர்கள், தனது இளம் வயதிலிருந்தே தமிழ் மொழி மீது அதீத பற்றுடையவராகத் திகழ்ந்தார். இருப்பினும், புதுவையில் பிரெஞ்சுகாரர்களின் ஆதிக்கம் இருந்ததால், அவர் ஒரு பிரெஞ்சு பள்ளியிலே சேர்ந்தார். அவர் தனது தொடக்கக் கல்வியை, ஆசிரியர் திருப்புளிசாமி அய்யாவிடம் கற்றார். அவர் புகழ்பெற்ற

குறிப்பு

அறிஞர்களின் மேற்பார்வையில் தமிழ் இலக்கியம், தமிழ் இலக்கணம் மற்றும் சைவ சித்தாந்த வேதாந்தங்களை முறையாகக் கற்றார். பின்னர், தமிழ் பயிலும் பள்ளியில் சேர அவருக்கு வாய்ப்பு கிடைத்ததால், அங்கு சேர்ந்து அவருக்கு விருப்பமானத் தமிழ் மொழியில் பாடங்களைக் கற்றார். சிறு வயதிலேயே சுவைமிக்க அழகானப் பாடல்களை, எழுதும் திறனும் பெற்றிருந்தார். பள்ளிப்படிப்பை நன்கு கற்றுத் தேர்ந்த அவர், தனது பதினாறாவது வயதில், புதுவையில் உள்ள கல்வே கல்லூரியில் சேர்ந்து, தமிழ் மொழியின் மீது அவர் வைத்திருந்த பற்றினையும், அவரது தமிழ்ப் புலமையை விரிவுப்படுத்தினார். தமிழறிவு நிறைந்தவராகவும், அவரது விடா முயற்சியாலும், தேர்வில் முழு கவனம் செலுத்தியதால், மூன்றாண்டுகள் பயிலக்கூடிய இளங்கலைப் பட்டத்தை, இரண்டு ஆண்டுகளிலேயே முடித்து கல்லூரியிலேயே முதலாவதாகத் தேர்ச்சிப் பெற்றார். மிகச்சிறிய வயதிலேயே இத்தகைய தமிழ் புலமை அவரிடம் இருந்ததால், கல்லூரிப் படிப்பு முடிந்தவுடனே அவர், 1919ல் காரைக்காலைச் சேர்ந்த அரசினர் கல்லூரித் தமிழாசிரியாராகப் பதவியேற்றார்.

**இல்லற வாழ்க்கை:** பாரதிதாசன் அவர்கள், தமிழாசிரியாராகப் பதவியேற்ற அடுத்த ஆண்டிலே அதாவது 1920ஆம் ஆண்டில் பழநி அம்மையார் என்பவரை திருமணம் செய்து கொண்டார். அவர்கள் இருவருக்கும் நவம்பர் மாதம் 3 ஆம் தேதி, 1928ஆம் ஆண்டில் மன்னர்மன்னன் என்ற மகன் பிறந்தான். அதன் பிறகு, சரஸ்வதி, வசந்தா மற்றும் ரமணி என்ற மகள்களும் பிறந்தனர்.

**பாரதியார் மீது பற்று:** தமிழ்மொழி மீது பற்றுக் கொண்டவராக இருந்த பாரதிதாசன் அவர்கள், அவரது மானசீக குருவாக சுப்ரமணிய பாரதியாரைக் கருதினார். அவரது பாடலைத் தனது நண்பனின் திருமண நிகழ்வின் போது பாடிய அவர், பாரதியாரை நேரில் சந்திக்கவும் செய்தார். பாரதியிடமிருந்து பாராட்டுக்கள் பெற்றதோடு மட்டுமல்லாமல், அவரது நட்பும் கிடைத்தது அவருக்கு. அன்று முதல், அவர் தனது இயற்பெயரான கனகசுப்புரத்தினம் என்பதை ‘பாரதிதாசன்’ என்று மாற்றிக் கொண்டார்.

**தொழில் வாழ்க்கை:** பாரதியாரிடம் நட்பு கொண்ட அன்று முதல், பாரதிதாசன் என்ற பெயரிலே அவர் தனது படைப்புகளை வெளியிட்டார். அச்சமயத்தில், சுதந்திரப் போராட்ட சூழல் நிலவியதாலும், அவர் திராவிட இயக்கத்தின் தீவிர தொண்டன் என்பதாலும், தந்தை பெரியார் மற்றும் பல அரசியல் தலைவர்களுடன் இணைந்து பல போராட்டங்களில் ஈடுபட்டு பலமுறை சிறைக்குச் சென்றார். அவரது இலக்கிய நடையைக் கண்டு வியந்த அன்றைய திரைத் தயாரிப்பாளர்களும், இயக்குனர்களும் அவருக்கு வாய்ப்புகள் வழங்கியதால், அவர் திரைப்படங்களுக்கும் கதை-வசனம் எழுதியுள்ளார். பெருந்தலைவர்களான அண்ணாதுரை, மு. கருணாநிதி, மற்றும் எம்.ஜி. ராமச்சந்திரன் போன்றோர் அவருடைய படைப்புகளுக்காக அவரை ஊக்குவித்ததாலும், அவர் 1954ஆம் ஆண்டில்

புதுச்சேரி சட்டமன்ற உறுப்பினராகவும் தேர்ந்தெடுக்கப்பட்டார். ஐந்து ஆண்டுகள் செம்மையாக செயல்புரிந்த அவர், 1960ல் நடந்த சட்டமன்ற தேர்தலில் தோல்வியைத் தழுவினார்.

குறிப்பு

**படைப்புகள்:** எண்ணற்ற படைப்புகளை அவர் தமிழ்மொழிக்கு வழங்கி இருந்தாலும், சாதி மறுப்பு, கடவுள் எதிர்ப்பு போன்ற மூடநம்பிக்கைகளை மக்களின் மனதிலிருந்து அழிக்கும் விதமாகப் பல்வேறு படைப்புகளை வெளியிட்டார். அவரது மிகச்சிறந்த படைப்புகளில் சில:

- பாண்டியன் பரிசு
- எதிர்பாராத முத்தம்
- குறிஞ்சித்திட்டு
- குடும்ப விளக்கு
- இருண்ட வீடு
- அழகின் சிரிப்பு
- தமிழ் இயக்கம்
- இசையமுது
- குயில்
- தமிழச்சியின் கத்தி
- பாண்டியன் பரிசு
- பாரதிதாசன் ஆத்திசூடி
- பெண்கள் விடுதலை
- பிசிராந்தையார்
- மயிலம் ஸ்ரீ சுப்பிரமணியர் துதியமுது
- முல்லைக் காடு
- கலை மன்றம்
- விடுதலை வேட்கை மற்றும் பல.

**விருதுகள் மற்றும் அங்கீகாரங்கள்:** பாரததிதாசன் அவர்களுக்கு பெரியார், "புரட்சி கவிஞர்" என்ற பட்டமும், அறிஞர் அண்ணா, 'புரட்சிக்கவி' என்ற பட்டமும் வழங்கினர். தமிழ்நாடு மாநில அரசாங்கம், அவரது நினைவாக ஆண்டுதோறும் ஒரு தமிழ் கவிஞருக்கு 'பாரதிதாசன் விருதினை' வழங்கி வருகிறது மற்றும் 'பாரதிதாசன் பல்கலைக்கழகம்' என்ற பெயரில் ஒரு மாநில பல்கலைக்கழகம் திருச்சிராப்பள்ளியில் நிறுவப்பட்டது.

- 1946 – அவரது "அமைதி-ஊமை" என்ற நாடகத்திற்காக அவர் 'தங்கக் கிளி பரிசு' வென்றார்.
- 1970 – அவரது மரணத்திற்குப் பின், அவரது 'பிசிராந்தையார்' நாடகத்திற்காக அவருக்கு 'சாஹித்ய அகாடமி விருது' வழங்கப்பட்டது

* 2001 – அக்டோபர் மாதம் 9ஆம் தேதி, சென்னை தபால் துறை மூலமாக ஒரு நினைவு அஞ்சல்தலை அவரது பெயரில் வெளியிடப்பட்டது.

குறிப்பு

**இறப்பு:** எழுத்தாளர், திரைப்படக் கதாசிரியர், கவிஞர், அரசியல்வாதி என்று பன்முகம் கொண்ட பாரதிதாசன் அவர்கள், ஏப்ரல் மாதம் 21ஆம் தேதி, 1964 ஆம் ஆண்டில் இயற்கை எய்தினார்.

**காலவரிசை**

* 1891: புதுவையில், ஏப்ரல் மாதம் 29 ஆம் தேதி, 1891 ஆம் ஆண்டில் கனகசபை முதலியார் மற்றும் இலக்குமி அம்மாள் தம்பதியருக்கு மகனாகப் பிறந்தார்.
* 1919: காரைக்காலைச் சேர்ந்த அரசினர் கல்லூரித் தமிழாசிரியாராகப் பதவியேற்றார்.
* 1920: பழநி அம்மையார் என்பவரை திருமணம் செய்து கொண்டார்.
* 1954: புதுச்சேரி சட்டமன்ற உறுப்பினராகத் தேர்ந்தெடுக்கப்பட்டார்.
* 1960: சட்டமன்ற தேர்தலில் தோல்வியைத் தழுவினார்.
* 1964: ஏப்ரல் மாதம் 21ஆம் தேதி, 1964 ஆம் ஆண்டில் இயற்கை எய்தினார்.
* 1970: அவரது மரணத்திற்குப் பின் அவரது பிசிராந்தையார் நாடகத்திற்காக அவருக்கு ‘சாஹித்ய அகாடமி விருது’ வழங்கப்பட்டது.

**உங்கள் முன்னேற்றத்தைச் சரிபார்க்கவும்**

1. பாரதியார் என பெயர் பெறுவதற்கானக் காரணம் என்ன?
2. பாவேந்தர் என்பவர் யார்?

## 8.4 உங்கள் முன்னேற்றத்தைச் சரிபார்க்கும் வினாக்களுக்கான விடைகள்

1. பாரதியார் தன்னுடைய பதினொரு வயதில் கவிபாடும் ஆற்றலை வெளிப்படுத்தினார், இவருடைய கவிப்புலமையை பாராட்டிய எட்டயபுரமன்னர், இவருக்கு “பாரதி” என்ற பட்டத்தை வழங்கினார். அன்று முதல் இவர் “சுப்பிரமணிய பாரதியார்” என அழைக்கப்பெற்றார்.

2. பெரும் புகழ் படைத்த பாவலரான பாரதிதாசன் அவர்கள், 'புரட்சிக்கவி' என்றும், 'பாவேந்தர்' என்றும் அழைக்கப்பட்டார். .

குறிப்பு

## 8.5 சுருக்கவுரை

- பாரதியை மக்கள், 'கவி', 'மானுடம் பாடவந்த மாகவி', 'புது நெறி காட்டிய புலவன்', எ'ண்ணத்தாலும் எழுத்தாலும் இந்திய சிந்தனைக்கு வளம் சேர்த்தவர்', 'பல்துறை அறிஞர்', 'புதிய தமிழகத்தை உருவாக்க கனவு கண்ட கவிக்குயில்', 'தமிழின் கவிதை' மற்றும் உரைநடையில் தன்னிகரற்ற புலமை பெற்ற பேரறிவாளர், என்றெல்லாம் புகழ்கின்றனர். உலகதமிழர் நாவில் மக்கள்கவி பாரதியாரின் பெயர் அடிக்கடி உச்சரிக்கபடுகிறது என்றால் அது மிகையாகாது.

- பாரதிதாசன் அவர்களுக்கு பெரியார், "புரட்சி கவிஞர்" என்ற பட்டமும், அறிஞர் அண்ணா, 'புரட்சிக்கவி' என்ற பட்டமும் வழங்கினர். தமிழ்நாடு மாநில அரசாங்கம், அவரது நினைவாக ஆண்டுதோறும் ஒரு தமிழ் கவிஞருக்கு 'பாரதிதாசன் விருதினை' வழங்கி வருகிறது மற்றும் 'பாரதிதாசன் பல்கலைக்கழகம்' என்ற பெயரில் ஒரு மாநில பல்கலைக்கழகம் திருச்சிராப்பள்ளியில் நிறுவப்பட்டது.

## 8.6 முக்கிய கருத்துப்படிமங்கள்

- பாரதியார்
- பாரதிதாசன்

## 8.7 சுயமதிப்பீட்டு பயிற்சி வினாக்கள்

**குறுகிய வினாக்களுக்கு விடையளிக்கவும்**

1. பாரதிதாசன் பற்றி மதிப்பிடுக?

**விரிவான வினாக்களுக்கு விடையளிக்கவும்**

1. பாரதியாரின் தமிழ்ப் பணியைப் பற்றி கட்டுரை வரைக?

## 8.8 மேலும் படிக்க

குறிப்பு


- ஐயங்கார்,சீனிவாசீ. வு (2001), *தமிழர்களின் வரலாறு: ஆரம்ப காலத்திலிருந்து 600 கி.பி வரை.* டெல்லி
- கிருஸ்ணசுவாமி.அ, (1977) விஜயநகரபப் பேரரசின் வரலாறு (கிபி1525 வரை) தமிழ்நாட்டுப் பாடநூல் நிறுவனம், அண்ணாமலைநகர்.
- சர்மா,சு.ளு. (2006). *பண்டைய இந்தியாவின் முந்தைய காலம்.* ஆக்ஸ்ஃபோர்ட் யுனிவர்சிட்டி பிரஸ்.
- சாஸ்திரி, ராமசாமி. (2002) *தமிழர்கள்: மக்கள், அவர்களின் வரலாறு மற்றும் கலாச்சாரம்.* புதுடெல்லி, காஸ்மோ பப்ளிகேஷன்ஸ்
- சிராஜீத்தின, (2010), *தமிழ்நாட்டு வரலாறு (கி.பி. 1987 வரை),* பாவை பப்ளிகேசன், சென்னை
- தேவநேயப்பாவணர். (1992) *பண்டைத் தமிழர் நாகரிகமும் பண்பாடும்,* கழக வெளியீடு சென்னை
- மாதவன்,சித்ரா, (2005), *தமிழ்நாட்டின் வரலாறு மற்றும் கலாச்சாரம்: தொகுதி-1 (கி.பி.1310 வரை).* டெல்லி

# அலகு IX

## மதப் பரப்பாளர்கள் மற்றும் அவர்களின் அறிவுசார் பங்களிப்பு - ஆழ்வார்கள் மற்றும் நாயன்மார்கள்



### அலகு IX ஆழ்வார்கள் மற்றும் நாயன்மார்கள்



### 9.0 முன்னுரை

பக்தி இயக்கம், பல்லவர்களின் ஆட்சிக் காலமான கி பி 600 முதல் 900 முடிய உள்ள காலத்தில், தமிழகத்தில், தழைத்தோங்கிருந்த சமணம் மற்றும் பௌத்த சமயக் கருத்துக்களை எதிர்த்து வளர்ந்தது இந்து சமய பக்தி இயக்கம். இக்கால கட்டத்தில் நாயன்மார்கள் மற்றும் ஆழ்வார்கள், தேவாரம், திருவாசகம், பெரியபுராணம் மற்றும் கம்பராமாயணம், நாலாயிர திவ்வியப் பிரபந்தம் போன்ற சைவ மற்றும் வைண சமய பக்தி இலக்கிய நூல்களை இயற்றினர். பெருமளவில் சமண மற்றும் பௌத்த சமயத்திற்கு மாறியவர்கள் மீண்டும் தாய்ச் சமயமான சைவ மற்றும் வைணவ சமயத்திற்கு மாறினர். பல்லவர்கள் ஆட்சிக் காலத்தில் பக்தி இயக்கம் உச்ச கட்டத்தை நோக்கிச் சென்றது. சமண, பௌத்த தத்துவக் கருத்துக்களுக்கு எதிரான வாதப் போரில் சைவர்கள் வென்றனர். பக்தி இயக்கத்தின் விளைவாக சைவமும், வைணவமும் தழைத்ததால், தமிழ்நாட்டில் புறச்சமயங்களான பௌத்தமும், சமணமும் மறைந்தது. பக்தி இயக்கத்தால் தமிழ் பக்தி இலக்கியங்கள் மலர்ச்சியடைந்தது. மேலும் தமிழ் நாடெங்கும் சைவ,

வைணவக் கோயில்கள் எழுப்பப்பட்டது. கி பி ஏழாம் நூற்றாண்டு முதல் பத்தாம் நூற்றாண்டு முடிய பக்தி இயக்க இலக்கியத்தின் ஆணி வேராக விளங்கிய புனிதர்களான திருஞானசம்பந்தர், மாணிக்கவாசகர், அப்பர், சுந்தரர், நம்மாழ்வார், ஆதிசங்கரர், நாதமுனிகள், வித்யாரண்யர், வல்லபர், நிம்பர்க்கர் மற்றும் தியாகராஜர் போன்றோர் சிறந்த பக்திப் பாடல்களை எழுதிய எழுத்தாள கவிஞர்களும் ஆவர்.

நாயன்மார்கள் என்போர் பெரிய புராணம் எனும் நூலில் குறிப்பிடப்படும் சைவ அடியார்கள் ஆவார். நாயன்மார் எண்ணிக்கை அடிப்படையில் 63 நபர்கள் ஆவார்கள். சுந்தரமூர்த்தியார் திருத்தொண்டத் தொகையில் அறுபது சிவனடியார்கள் பற்றிய குறிப்பிட்டுள்ளார். அந்த நூலினை மூலமாக கொண்டு சேக்கிழார் பெரிய புராணத்தினை இயற்றினார். எனவே திருத்தொண்டத் தொகையை எழுதிய சுந்தரமூத்தியாரையும், அவரது பெற்றோர் சடையனார் - இசை ஞானியார் ஆகிய மூவரையும் நாயன்மார்களாக இணைத்துக் கொண்டார். நாயன்மார்களுக்குச் சிவாலயங்களின் சுற்றுபிரகாரத்திற்குள் கற் சிலைகள் வைக்கப்படுகின்றன. அத்துடன் அறுபத்து மூவரின் உலோகச் சிலைகளும் ஊர்வலத்தின் பொழுது எடுத்துச் செல்லப்படுகின்றன. இந்த ஊர்வலத்திற்கு அறுபத்து மூவர் திருவீதி உலா என்று பெயர்.

வைணவ சமயத்தின் முதன்மைத் தெய்வமாகிய திருமாலைப் போற்றித் தமிழ்ச் செய்யுட்களால் பாடியவர்கள் ஆழ்வார்கள் ஆவர். தென்மொழியாம் தமிழ் மொழியில் வைணவ இலக்கியங்களை வளர்த்தவர்கள் பரம்பரையில், நாலாயிர திவ்வியப் பிரபந்தம் (அல்லது) ஆழ்வார் அருளிச்செயல் என்னும் தொகுப்பு நூலில் இடம் பெற்றுள்ள பாடல்களைப் பாடிய ஆழ்வார்கள் 12 பே ர். அவர்களுள், இறைவனை இறைவனாகக் காணாது, இறைவனோடு உறவுமுறையில் வாழ்ந்ததால் ஆண்டாளையும், இறைவனைப் பாடாது ஆசானைப் பாடினார் என்பதால் மதுரகவியாழ்வாரையும் வேறு வரிசையில் தொகுத்து, ஆழ்வார்கள் பதின்மர் 10 பேர் மட்டுமே எனக் காட்டுவாரும் உண்டு. இவர்கள் 5 முதல் 9 நூற்றாண்டுக் கால அளவில் வாழ்ந்தவர்கள்.

## 9.1 நோக்கம்

- நாயனமார்களின் சைவ சமயச் சிந்தனைகளைப் பற்றி அறிந்துக்கொள்ள முடிகின்றுத
- ஆழ்வார்களின் வைணவச் சமயச் சிந்தனைகளைப் பற்றி அறிந்துக்கொள்ள முடிகின்றது

## 9.2 மதப் புனிதர்கள் மற்றும் அவர்களின் அறிவுசார் பங்களிப்பு

உலகியல் செல்வம் அனைத்தும் பெறலாம் என்னும் வேட்கையை முன்னிறுத்தியதால் வேத வேள்வி தமிழ் அரசர்களையும் செல்வந்தர்களையும் விரைந்து கவர்ந்தது. இதன் வழித் தமிழ் நாட்டு

அரண்மனைகளின் செங்கோல்களை வைதீகம் கைப்பற்றியது. மரபு சார் ஊர்த்தெய்வங்கள் பலவும் நம்பிக்கைத் தளங்களில் ஊன்றி நின்றன. குல தெய்வம் அல்லது இல்லுறை தெய்வம், காவல் தெய்வங்கள், வீரர்களுக்கான நடுகல் வழிபாடு போன்றவை தமிழரின் மரபு சார் மதங்கள் ஆகும். தொல்காப்பியம் குறிக்கும் குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல், பாலை என்னும் ஐவகை நிலத்திணைகளுக்கும் முறையே முருகன், திருமால், இந்திரன், வருணன், கொற்றவை ஆகியவை தமிழரின் தொன்மைத் தெய்வங்கள். இவற்றுள் இந்திரன், வருணன் என்பவை வைதீகத்தின் சாயல் பெற்றுத் திரிந்த பெயர்கள். நம்பிக்கை சார்ந்த சிறுதெய்வங்களின் வழிபாடு மலிந்திருந்த காலத்தில் அறிவு சார்ந்த சிவ வழிபாடு சான்றோர் சிந்தனையில் வளர்ந்து சித்தாந்தம் என்ற மெய்யறிவுத் துறையாக அமைந்தது. உயிர்கள் பிறந்தும் இறந்தும் பக்குவப்படும் வரை தன்னை மறைக்கின்றான். பிறப்பு இறப்பிலிருந்து இளைப்பாறும் பொருட்டு படைத்தவற்றை அழிக்கின்றான். பக்குவப்பட்ட உயிர்களை இடையறா இன்பத்தில் நிலைக்க அருளுகின்றான். இவ்வாறு படைத்தல், காத்தல், மறைத்தல், அழித்தல், அருளல் என்னும் ஐந்தொழிகளை உயிர்கள் பொருட்டு இறைவன் செய்தபடி இருக்கின்றான் என்பது சித்தாந்தம்.

இருபத்தெட்டு சைவ ஆகமங்களைத் தனக்கு வேதமாய்க் கொண்டது சிவனைப் போற்றும் சைவம். ஆகமங்களின் செயல்முறை நூலாக அமைவது பன்னிரு திருமுறைகள். இவ்விரண்டு நூல்களின் வழியில் அமைந்தவை பதினான்கு மெய்கண்ட சாத்திரங்கள். இவற்றுள் ஆகமம் விதி நூல், திருமுறை செயல் நூல், மெய்கண்ட சாத்திரங்கள் சைவத்தின் இலக்கண நூல்கள். மற்றோர் முறையில் கூறினால் சைவத்தின் வேதம் ஆகமம், மெய்யறிவு நூல் மெய்கண்ட சாத்திரங்கள், மெய்யுணர்வு (பத்தி) நூல் திருமுறைகள். சைவம் இமயம் முதல் குமரி வரை பல அடைமொழிகளைக் கொண்டு விரிந்தது. என்றாலும் தென் தமிழ் நாட்டில் நுண்ணிய தத்துவத் துறையாக செம்மைப்பட்டது. இதன் வளத்தை இந்தியச் சிறு மதங்கள் யாவும் பங்கிட்டுக் கொண்டன. கணபதியைப் போற்றும் காணாபத்தியம், முருகனைப் போற்றும் கௌமாரம், சக்தியைப் போற்றும் சாக்தம் ஆகிய மதங்கள் யாவும் முறையே சிவனின் பிள்ளைகள் என்றும் மனைவி என்றும் உறவு முறைகளால் தம் நிலையை உறுதிப்படுத்திக் கொண்டன. உறவுமுறைகளை வலிமைப்படுத்த ஏராளமான புராணங்கள் உருவாக்கப்பட்டன. தமிழர் சமயக் கிரியைகளோடு வைதீக வேள்விக் கிரியைகள் கலந்தன. ஆரிய பிராமணர்களின் தொழில் வளம் கருதி உருவாக்கப்பட்ட கிரியைகள் அறிவுக்கு ஒவ்வா நம்பிக்கைகளை உருவாக்கின. இன்றும் உருவாக்கிக் கொண்டிருக்கின்றன.

தனிப்பெரும் சமயமான சைவம் தென்னிந்தியச் சிறு சமயங்கள் உயிர்த்து உறுதி பெற உதவிய காலத்தில் வைதீகம் சைவம் உட்பட அனைத்துச் சமயங்களையும் வாரி விழுங்கித் தன் வயிற்றில் அடக்கிக்

குறிப்பு

கொண்டது. இதனால் வேதங்களை ஏற்காத சமணம், பௌத்தம் அவைதீகம் என்றும் மற்றவை அனைத்தும் வைதீகம் என்றும் ஆரிய மயப்பட்டன. இக்காலத்தில் தமிழரின் பழஞ்சமயங்களான கிராமத்துத் தெய்வங்கள் வைதீகத்தின் கைகளுக்குத் தப்பித் தம் மரபுகளைக் காத்துக் கொண்டன. சிற்றூர்களைக் கடந்து விரிந்த சமயங்கள் வைதீகத்தில் கலந்து உரு மாறின. முருகன் சுப்ரமணியன், கந்தன் என்றும் திருமால் விஷ்ணு என்றும் மாற்றம் கண்டனர். நிலத்திணை கடந்து பொதுக் கடவுளாய் இருந்த சிவன் உருத்திரன் ஆனான். தமிழர் அமைத்த கோயில்களில் பிராமணர் பூசகராயும் சமற்கிருதம் பூசனை மொழியாகவும் ஆனது. சங்கம் வைத்துத் தமிழ் வளர்த்த அரசர்களே இதற்கெல்லாம் வழி கொடுத்து வணங்கி நின்றனர். ஆரிய மயப்பட்ட சைவ சமயத்தை மீட்டுப் புத்துருவாக்கம் செய்யும் முயற்சியில் திருஞானசம்பந்தர், திருநாவுக்கரசர், சுந்தரர், மாணிக்கவாசகர் என்னும் நால்வர் பெருமக்கள் அரும்பாடு பட்டனர். சமண, பௌத்த மதங்களின் வலிமையை எதிர்கொள்ள இயலாத நிலையில் வைதீகத்தைப் பகைத்துக் கொள்ளாமல் அதே வேளையில் சைவத்தையும் தமிழையும் மீட்கும் போராட்ட முறையை மேற்கொண்டனர்.

சமற்கிருத மொழியைத் தேவபாஷை என்று கூறும் பிராமண மரபில் வந்த திருஞானசம்பந்தர் தன்னைத் தமிழ்ஞானசம்பந்தர் என்று வலிந்து பல பாடல்களில் குறிப்பிட்டார். வைதீக நெறிக்கு ஒவ்வாத உருவ வழிபாட்டு மரபை மீட்டார். தமிழால் சிவபெருமானைப் பாடும் பதிகங்கள் இயற்றினார். இவர் வழியில் திருநாவுக்கரசர் மேலும் உறைத்தெழுந்தார். சாதிமை கடந்த பத்திமையை அப்பர் முன்னைலைப்படுத்தினார். சாதி, குலம், பிறப்பால் மக்களை உயர்ந்தோர் தாழ்ந்தோர் எனக் கூறுவதை இழிந்த பண்பு எனச் சாடினார் மாணிக்கவாசகர். இவ்வாறு நால்வர் பெருமக்களும் ஏனைய சைவச் சான்றோரும் ஆரிய வருணாச்சிரமத்தைக் கண்டிக்கும் போராட்டத்தின் மறுதலையாகச் சைவம் குறிக்கும் 'ஒன்றே குலமும் ஒருவனே தேவனும்' (10.2072) என்ற மனித குல ஒருமைப்பாட்டை வலியுறுத்தினர். ஆரிய மாயை என்று கூறி வைதீகம் கலந்த தமிழர் சமயங்களைப் புறக்கணிக்கும் தமிழ்ச் சிந்தனையாளர் ஆரியமும் வைதீகமும் நீங்கிய தமிழர் சமயங்களை அடையாளம் கண்டு மீட்டெடுக்கும் பணியை மேற்கொள்ள வேண்டும். இவற்றுள்ளும் சைவம் தமிழர் வளப்படுத்திய தத்துவக் களஞ்சியம் என்பதை உணர்ந்து அதனைப் போற்றிக் கைக்கொள்ள வேண்டும்.

தமிழரின் மரபு சார்ந்த சமயங்களை வைதீகப் பிடியிலிருந்து மீட்கும் முயற்சியில் தோற்றுப் போனவர்கள் தமிழருக்குச் சமயமே இல்லை என்று மறுதலிப்பது தமிழரின் பண்பாட்டு வரலாற்றை ஊனப்படுத்திவிடும். குறிப்பாகச் சைவ சமயத்தையும் சைவ சித்தாந்தத்தையும் மறுதலிப்பது ஆய கலைகள் அறுபத்து நான்கையும் அறிந்த தமிழனுக்குக் கடவுள் பற்றிய சிந்தனை மட்டும் இல்லை என்று கூறுவதாய் முடியும். இப்பார்வையினின்று மாறி வைதீகப் பிடியிலிருந்து

சைவத்தை மீட்க வேண்டும். மீட்டால் சைவம் அறிவார்ந்த சமயமாகச் சமய உலகைத் தலைமை கொள்ளும் என்பது உறுதி.



## 9.3 ஆழ்வார்கள் மற்றும் நாயன்மார்கள்

பக்திஇயக்கத்தின் மூலம் சைவம் மற்றும் வைணவச் சமயங்களை வளர்ச்சிப் பெறச் செய்த் நாயன்மார்கள் மற்றும் ஆழ்வார்களை பற்றி பின்வருமாறு விளக்கப்படுகின்றன.

### 9.3.1 ஆழ்வார்கள்

ஆழ்வார்கள் தம்முடைய தமிழ் பாசுரங்களால் வைணவ சமயக் கடவுளான திருமாலைப் போற்றி பாடி மகிழ்ந்தவர்கள். திருமாலின் அடியவர்களான இவர்கள் திருமாலின் பெருமையும், தமிழின் சிறப்பினையும் உலகுக்கு உணர்த்தியவர்கள். வடமொழியில் உள்ள வேதங்களுக்கு இணையாக இவர்களின் பாசுரங்கள் போற்றப்படுகின்றன. ஆழ்வார்கள் பாடிய பாடல்களின் தொகுப்பு நாலாயிர திவ்ய பிரபந்தம் என்று அழைக்கப்படுகிறது. ஆழ்வார்களின் காலம் ஆறாம் நூற்றாண்டு முதல் ஒன்பதாம் நூற்றாண்டு வரை என்று கருதப்படுகிறது.

**ஆழ்வார்கள் மொத்தம் பன்னிரெண்டு பேர் ஆவார்.**

- பொய்கையாழ்வார்
- பூதத்தாழ்வார்
- பேயாழ்வார்
- திருமழிசை ஆழ்வார்
- நம்மாழ்வார்
- திருமங்கையாழ்வார்
- குலசேகர ஆழ்வார்
- பெரியாழ்வார்
- ஆண்டாள் நாச்சியார்
- தொண்டரடிப் பொடியாழ்வார்
- மதுரகவி ஆழ்வார்
- திருப்பாணாழ்வார்

இவர்களில் பொய்கையாழ்வார், பூதத்தாழ்வார், பேயாழ்வார் ஆகிய மூவரும் முதல் ஆழ்வார்கள் என்று குறிப்பிடப்படுகின்றனர். இவர்கள் காலத்தால் மற்றைய ஆழ்வார்களுக்கு முந்தியோர் ஆதலால் முதல் ஆழ்வார்கள் என்று அழைக்கப்படுகின்றனர். இவர்கள் மூவரும் சமகாலத்தினர் ஆவர். முதல் ஆழ்வார்கள் மூவரும் தாயின் வயிற்றில் பிறக்காமல் தானே தோன்றி இறைவனால் ஒரே நேரத்தில் ஆட்கொள்ளப்பட்டவர்கள் என்ற சிறப்பினை உடையவர்கள. மதுரகவி ஆழ்வார் மட்டும் இறைவனைப் பாடாமல் மற்றொரு ஆழ்வாரான

நம்மாழ்வாரைப் பற்றிய பாசுரங்கள் பாடியுள்ளார் என்பது குறிப்பிடத்தக்கது.



**பொய்கையாழ்வார்** இவரே பன்னிரு ஆழ்வார்களில் முதல் ஆழ்வார் என்ற சிறப்பினைப் பெறுகின்றார். இவர் காஞ்சிபுரத்தில் திருவெ∴கா என்னுமிடத்தில் உள்ள பொய்கையில் தோன்றியவர். பொய்கையில் தோன்றியதால் பொய்கையாழ்வார் என்று அழைக்கப்படுகிறார். இவரே திருமாலின் பத்து அவதாரங்களையும் முதலில் சிறப்பித்துப் பாடியவர் ஆவார். இவர் திருமாலின் கையிலுள்ள பாஞ்சஜன்யம் என்னும் சங்கின் அம்சமாகத் தோன்றியவர் என்று கருதப்படுகிறார். இவர் கவிஞர் தலைவன் என்று வைணவர்களால் சிறப்பிக்கப்படுகிறார். இவரால் அந்தாதியாகப் பாடப்பட்ட நூறு பாடல்களும் முதல் திருவந்தாதி எனப் போற்றப்படுகிறது.

ஒரு சமயம் பொய்கையாழ்வார் மழையின் காரணமாக திருக்கோவிலூர் மிருகண்டு முனிவரது ஆசிரமத்துக்கு சென்றார். அங்கு பூதத்தாழ்வாரும் பேயாழ்வாரும் வந்தனர். இவர்கள் மூவரும் நெருக்கியடித்து நிற்க அங்கு திருமால் மூவருக்கும் காட்சியளித்தார். பொய்கையாழ்வார் 108 திவ்ய தேசங்களில் மொத்தம் 6 கோயில்களைப் பற்றி பிற ஆழ்வார்களுடன் இணைந்து மங்களாசனம் செய்துள்ளார். (மங்களாசனம் என்பது ஒரு கோவிலில் உள்ள இறைவனைப் போற்றிப் பாடல்கள் இயற்றுவது ஆகும்.) இவர் கிரக முனி, மகாதேவயார், தமிழ் தலைவன் ஆகிய வேறு பெயர்களால் சிறப்பிக்கப்படுகிறார்.

**பூதத்தாழ்வார்:** முதல் ஆழ்வார்களில் இவர் இரண்டாமவர். இவர் மாமல்லபுரத்தில் உள்ள தலசயனப் பெருமாள் கோவிலில் மல்லிகை புதர்களுக்கிடையே நீலோத்பவ மலரின் நடுவில் தோன்றியவர் என்று கருதப்படுகிறது. இவர் திருமாலின் கையில் உள்ள கௌமோதகி என்ற கதையின் அம்சமாவார். உலக வாழ்க்கையில் இன்புறாமல் திருமாலிடத்தில் நீங்கா பக்தி கொண்டவர். திருக்கோவிலூர் மிருகண்டு முனிவர் ஆசிரமத்தில் பொய்கையாழ்வார் மற்றும் பேயாழ்வாருடன் இறைவனைத் தரிசித்த போது அவரைப் பற்றி நூறு பாடல்கள் பாடினார். அவை இரண்டாம் திருவந்தாதி எனப் போற்றப்படுகின்றன. இவர் பிற ஆழ்வார்களுடன் சேர்ந்து 14 கோயில்களை மங்களாசனம் செய்துள்ளார்.

**பேயாழ்வார்:** இவர் முதல் ஆழ்வார்களில் மூன்றாமவர் ஆவார். இவர் மயிலாப்பூரில் ஆதிகேசவ பெருமாள் கோவில் குளத்தில் செவ்வல்லி மலரில் தோன்றியவர் என்று கருதப்படுகிறது. இவர் திருமாலின் நந்தகம் என்னும் வாளின் அம்சமாகத் தோன்றியவர். இவர் திருமாலின் திருப்புகழை பாமாலையாக்கி தினமும் போற்றுவார். அப்போது அவர் கண்களில் ஆனந்த வெள்ளம் வழிந்தோடும். பாடல்கள் பாடும்போது ஆடிப் பாடி அழுது தொழுவார். இறைபக்தியினால் இவர் பித்தர் போலும் பேயர் போலும் திரிந்ததினால் பேயாழ்வார் என்றழைக்கப்பட்டார். திருக்கோவிலூர் மிருண்டு முனிவர் ஆசிரமத்தில்

பொய்கையாழ்வார் மற்றும் பூதத்தாழ்வாருடன் இருந்த போது இவரே முதலில் இறைதரிசனம் கிடைக்கப் பெற்றார்.

குறிப்பு

இவர் தனியாக ஒரு கோவிலிலும், மற்ற ஆழ்வார்களுடன் இணைந்து 11 கோவில்களிலும் மங்களாசனம் செய்துள்ளார்.

**திருமழிசை ஆழ்வார்:** இவர் திருமழிசை என்னும் இடத்தில் பார்கவ முனிவர் கனகாங்கி ஆகியோருக்கு மகனாகப் பிறந்தார். பின் திருவாளன் என்பவரால் வளர்க்கப்பட்டார். இவர் திருமாலின் ஆழியான சக்கரத்தின் அம்சமாவார். கனிக்கண்ணன் என்பவரை சீடராக்கக் கொண்டு பல இடங்களுக்கு சென்று இறைவனை வழிபட்டுள்ளார். வயது முதிர்ந்த பெண்ணிற்கு இளமையை திருப்பி அளித்த பெருமை இவரைச் சாரும். சைவம், சமணம், புத்தம் என பல மதங்களை ஆராய்ந்து சைவராக இருந்த இவரை பேயாழ்வார் வைணவ மதத்திற்கு மாற்றினார். இவர் பக்திசாரர், திருமழிசையார், திருமழிசைப்பிரான் என்றெல்லாம் அழைக்கப்படுகிறார். இவர் நான்முகன் திருவந்தாதி என்ற நூறு பாடல்களையும், திருசந்த விருத்தம் என்ற 120 விருத்தங்களைக் கொண்ட பாடல்களையும் பாடியுள்ளார். இவர் தனியாகச் சென்று இரண்டு கோவில்களையும், மற்ற ஆழ்வார்களுடன் இணைந்து 11 கோவில்களையும் மங்களாசனம் செய்துள்ளார்.

**நம்மாழ்வார்:** வைணத்தில் ஆழ்வார் என்றாலே அது நம்மாழ்வாரையே குறிக்கும். இவர் தூத்துக்குடி மாவட்டத்தில் உள்ள திருக்குருகூர் எனப்படும் ஆழ்வார்திருநகரியில் காரியார், உடைய நங்கை ஆகியோருக்கு மகனாகத் தோன்றினார். இவர் பிறந்தவுடன் அழாமல் தன் ஞானத்தால் சடம் என்னும் காற்றை வென்றதால் சடகோபன் என்றழைக்கப்பட்டார். பதினாறு ஆண்டுகள் திருக்குருகூர் நம்பி கோவிலின் புளியமரப்பொந்தில் யோகத்தில் இருந்து மதுரகவி ஆழ்வாரின் கேள்விக்கு பதில் தந்து அவரை சீடராகப் பெற்ற பெருமை இவரைச் சாரும். இவர் இயற்றிய திருவிருத்தம், திருவாசிரியம், பெரிய திருவந்தாதி, பெரியதிருவாய்மொழி ஆகிய பாடல்கள் ரிக், யசூர், சாம, அதர்வண வேதங்களுக்கு இணையானவை ஆகும் என்பது பெரியோர்களின் வாக்கு. இவர் திருமாலின் படைத்தலைவரான விஷ்வக்னேசர் என்பவரின் அவதாரமாகக் கருதப்படுகிறார். இவர் சடாரி, பராங்குசன்,மாறன், வகுளாபரணன், குருகையர் ஆகிய பெயர்களால் சிறப்பிக்கப்படுகிறார். வைணவத்தில் நம்மாழ்வாரை ஆன்மாவாகவும், ஏனைய ஆழ்வார்களை உடலாகவும் கருதுவதுண்டு. இவர் 37 திருக்கோவில்களை மங்களாசனம் செய்துள்ளார்.

**திருமங்கையாழ்வார்**: இவர் சோழ நாட்டில் உள்ள திருக்குரையலூர் என்னும் ஊரில் ஆலி, வல்லிதிரு ஆகியோருக்கு மகனாகப் பிறந்தார். இவர் திருமாலின் கையிலுள்ள சார்ங்கம் என்ற வில்லின் அம்சமாக்க கருதப்படுகிறார். இவருக்கு பெற்றோர் இட்டபெயர்

நீலன் என்பதாகும். இளமையிலே வீரத்திலும், பக்தியிலும் சிறந்து விளங்கினார். இவருடைய வீரத்தைப் பார்த்த சோழ அரசன் படைதலைவராக இருந்த நீலனை திருமங்கை என்னும் நாட்டிற்கு சிற்றசரானக்கினான். தன் மனைவியின் விருப்பப்படி தினமும் அடியார்களுக்கு திருவமுது படைத்தும், இறைவழிபாட்டில் ஈடுபட்டும் செல்வங்களை இழந்தார். பின் பணக்காரர்களிடம் கொள்ளையடித்து அடியார்களுக்கு திருவமுது படைத்து வந்த நிலையில் திருமால் திருமகளோடு திருமணக் கோலத்தில் திருமங்கையாழ்வாருக்கு காட்சியருளினார். இவர் பெரியதிருமொழி, குருந்தாண்டகம், நெடுந்தாண்டகம், திருவெழுக்கூற்றிருக்கை, சிறிய திருமடல், பெரிய திருமடல் ஆகிய படைப்புகளை படைத்துள்ளார். இவர் 46 கோவில்களைத் தனியாகவும், பிற ஆழ்வார்களுடன் சேர்ந்து 36 கோவில்களையும் மொத்தம் 82 கோவில்களை மங்களாசனனம் செய்துள்ளார். இவரே ஆழ்வார்களுள் அதிகக் கோவில்களை மங்களாசனம் செய்தவர் என்ற சிறப்பினைப் பெறுகிறார்.

**குலசேகர ஆழ்வார்:** இவர் திருவஞ்சிக்களம் என்னும் ஊரில் திடவிரதன் என்ற சேர நாட்டு அரசனுக்கு திருமாலின் மார்பில் இருக்கும் மணியான கௌஸ்துப அம்சத்தின் வடிவாக தோன்றினார். இவர் போர்க்கலைகளில் சிறந்து விளங்கிய இவர் வடமொழியிலும் தேர்ச்சி பெற்றவர். நீதிநெறி தவறாமல் ஆட்சி புரிந்த இவரை இவ்வுலக மாயை நீக்கி இறை தொண்டு செய்யுமாறு திருமால் பணித்தார்.இவர் திருமால் மீது பாடிய பாசுரங்கள் பெருமாள் திருமொழி என்றழைக்கப்படுகிறது. இவர் கொல்லிக்காவலன், கூடல்நாயகன், வில்லவர் கோன் ஆகிய பெயர்களால் சிறப்பிக்கப்படுகிறார். இவர் தனியாக ஒரு கோவிலையும், பிற ஆழ்வார்களுடன் சேர்ந்து ஏழு கோவில்களையும் மங்களாசனம் செய்துள்ளார்.

**பெரியாழ்வார்:** இவர் திருவில்லிபுத்தூரில் முகுந்தர், பதுமவல்லி ஆகியோருக்கு திருமாலின் வாகனமான கருடாழ்வாரின் அம்சமாகத் தோன்றினார். இவரின் இயற்பெயர் விஷ்ணுசித்தர். திருவில்லிபுத்தூரில் உள்ள வடபத்ரசாயி பெருமாளின் மீதிருந்த அளவற்ற பக்தியின் காரணமாக தினமும் அவருக்கு பூமாலை தொடுத்து கொடுப்பதை வழக்கமாகக் கொண்டிருந்தார். இவர் திருமாலின் கருணையால் வல்லபதேவன் என்ற பாண்டிய அரசனின் அவையில் வாதாடி அரசனின் சந்தேகத்தை போக்கி பொற்கிழி பெற்று யானையில் ஏற்றி ஊர்வலம் செய்து சிறப்பிக்கப்பட்டார். அப்போது திருமால் திருமகளுடன் கருட வாகனத்தில் காட்சியருளினார். அதனைக் கண்ட விஷ்ணுசித்தர் திருமாலின் அழகில் சொக்கி, திருமாலுக்கு கண்திருஷ்டி பட்டுவிடும் எனக்கருதி பல்லாண்டு பல்லாண்டு பல்லாயிரத்தாண்டு எனத் தொடங்கும் திருப்பல்லாண்டு பாடினார். இறைவனுக்கே கண்ஏற்றினை கழிக்க முயன்றதால் ஆழ்வார்களில் பெரியவர் என்னும் பொருள்படும்படி பெரியாழ்வார் என்றழைக்கப்பட்டார். இவரே ஆண்டாள் நாச்சியாரின்

வளர்ப்பு தந்தை ஆவார்.ஆண்டாளை அரங்கனுக்கு மணம்முடித்துக் கொடுத்ததினால் திருமாலின் மாமனார் என்ற சிறப்பினைப் பெற்றார்.

குறிப்பு

திருப்பல்லாண்டு, பெரியாழ்வார் திருமொழி போன்றவை இவரின் படைப்புகளாகும். இவர் தனியாக 2 கோவில்களையும், பிற ஆழ்வார்களுடன் சேர்ந்து 17 கோவில்களையும் சேர்த்து மொத்தம் 19 திவ்ய தேசக் கோவில்களை மங்களாசனம் செய்துள்ளார். இவர் திருவில்லிபுத்தூரில் உள்ள வடபத்ர சாயி கோவிலின் வளாகத்தில் பெரியாழ்வாரால் துளசி செடி அருகில் கண்டெடுக்கப்பட்டார்.

**ஆண்டாள் நாச்சியார்** பன்னிரண்டு ஆழ்வார்களில் பெண் ஆழ்வார் இவர் ஒருவரே ஆவார். இவர் திருமாலின் மனைவியான திருமகளின் அம்சமாகத் தோன்றியவர். சிறுவயது முதலே திருமாலின் மீது அதீத பக்தி கொண்டார். நாளடைவில் அந்த பக்தியே திருமாலின் மீது காதலாக மாறி திருமாலை மட்டுமே திருமணம் செய்வேன் என்ற மன உறுதியைக் கொடுத்தது. மானிடர்கள் இறைவன்பால் மாசற்ற அன்பினைச் செலுத்தி மனஉறுதியுடன் வழிபட்டால் இறைவனை அடைய முடியும் என்ற உண்மையை தனது வாழ்க்கையின் மூலம் உலகுக்கு உணர்த்தியவர். சூடிக்கொடுத்த சுடர் கொடியாள், கோதை நாச்சியார், கோதை பிராட்டி என்றெல்லாம் இவ்வம்மை சிறப்பிக்கப்படுகிறார். இவர் இயற்றிய பாடல்கள் நாச்சியார் திருமொழி, திருப்பாவை என்று வழங்கப்படுகின்றன. இவர் பிற ஆழ்வார்களுடன் இணைந்து மொத்தம் 10 கோவில்களை மங்களாசனம் செய்துள்ளார்.

**தொண்டரடிப் பொடியாழ்வார்:** இவர் திருமாலின் தொண்டர்களின் காலடி மண்ணைத் தன் தலைமேல் வைத்துக் கொண்டதால் தொண்டரடிப் பொடியாழ்வார் என்றழைக்கப்பட்டார். இவர் சோழ நாட்டில் திருமண்டக்குடி என்னும் ஊரில் வேத விசாரதர் என்பவருக்கு திருமாலின் வைஜெயந்தி வனமாலையின் அம்சமாகத் தோன்றினார். இவரின் இயற்பெயர் விப்பிர நாராணயர் என்பதாகும். இவர் திருமாலின் மீதுள்ள அளவற்ற பக்தியால் தன்னை அடிமையாக பாவித்துக் கொண்டு பூமாலைகளுடன் பாமாலைகள் பாடி வழிபடுவதை வழக்கமாகக் கொண்டார். இவர் தேவதேவி என்ற பெண்ணின் மேல் காதல் கொண்டு தன் செல்வத்தை இழந்த நிலையில் இவருக்காக திருவரங்கத்தில் வீற்றிருக்கும் இறைவன் அரங்கன் கோவில் வட்டிலைத் தந்து உதவ இவர் மேல் திருட்டுப்பழி விழுந்தது. இறுதியில் உண்மை அரங்கனால் உலக்கு உணர்த்தப்பட்டபோது இவர் அரங்கனுக்காக அடிமை பூண்டார். இவர் திருபள்ளிஎழுச்சி மற்றும் திருமாலை ஆகியவற்றை படைத்துள்ளார். இவர் பிற ஆழ்வார்களுடன் இணைந்து 2 கோவில்களை மங்களாசனம் செய்துள்ளார்.

**மதுரகவி ஆழ்வார்**: இவர் தூத்துக்குடி மாவட்டத்தில் திருக்கோளுர் என்ற இடத்தில் பிறந்தார். இவர் சிறுவயதிலேயே

**குறிப்பு**

செந்தமிழில் நாவிற்கினிய பாடல்களைப் பாடிய காரணத்தால் மதுரகவி ஆழ்வார் என்றழைக்கப்பட்டார். இவர் வடநாட்டில் உள்ள திருமால் சேத்திரங்களை தரிசித்துக் கொண்டிருக்கும்போது தென் திசையில் ஒரு ஒளி ஏற்படுவதைக் கண்டு அத்திசை நோக்கி செல்கையில் அங்கு நம்மாழ்வாரைக் கண்டார். அவரிடம் கேள்வி வினவ அதுவரை பேசாதிருந்த நம்மாழ்வார் மதுரகவி ஆழ்வாருக்கு பதிலுரை கூறினார். அதனைக் கேட்ட மாத்திரத்தில் நம்மாழ்வாரைக் குருவாக ஏற்றார். அவரிடமிருந்து சூட்சமங்களைக் கற்று உணர்ந்தார். இவர் கண்ணிநுன் சிறுதாம்பு என்ற பதிகத்தை மட்டும் தன் குருவாகிய நம்மாழ்வார் மீது பாடியுள்ளார். இவர் இளங்கவியார், ஆழ்வாருக்கு அடியான் என்ற பெயர்களால் சிறப்பிக்கப்படுகிறார்.

**திருப்பாணாழ்வார்:** இவர் திருச்சி உறையூரில் திருமாலின் மார்பில் உள்ள மருவான ஸ்ரீவத்ஸத்தின் அம்சமாக பாணர் குலத்தில் தோன்றியவர். தீண்டத்தகாதோர் குலத்தில் தோன்றியதால் காவிரியாற்றின் கரையில் நின்று அரங்கனைப் பாடுவார். ஒரு சமயம் சாரங்கர் என்பவர் அரங்கனுக்கு காவிரியில் இருந்து தண்ணீர் கொண்டு செல்லும்போது வழியில் நின்ற திருப்பாணாழ்வாரை கல்லால் தாக்கினார். இதனால் ஆழ்வாரின் நெற்றியில் இரத்தம் வழிந்தது. இதனை அறியாது கருவறைக்கு சென்று சாரங்கர் பார்த்தபோது அரங்கனின் நெற்றியில் இரத்தம் வழிந்தது கண்டு திகைக்க திருப்பாணாழ்வார் தனது பக்தன் எனவும், அடியவருக்கு ஏற்படும் துன்பம் தனக்கு ஏற்பட்டது எனக்கூறி திருப்பாணாழ்வாரை தோளில் சுமந்து கோவிலுக்குள் அழைத்து வர கட்டளையிட்டார் திருமால்.

திருமாலின் விருப்பப்படி உள்ளே வந்த திருப்பாணாழ்வார் திருமாலின் உச்சி முதல் பாதம் வரை உள்ள அங்கங்களைப் பற்றி பாடி பூத உடலோடு இறைவனோடு இரண்டறக் கலந்தார். இறைவன் முன் அனைவரும் சமம் என்ற உண்மையை இவரின் வாழ்க்கை மூலம் அறியலாம். இவர் பாணர், முனிவாகனர், யோகிவாகனர் போன்ற பெயர்களால் சிறப்பிக்கப்படுகிறார். இவர் பிற ஆழ்வார்களுடன் இணைந்து 3 கோவில்களை மங்களாசனம் செய்துள்ளார்.

### 9.3.2 நாயன்மார்கள்

நாயன்மாரில் அப்பர், சம்பந்தர், சுந்தரர் ஆகிய மூவரும், நாயன்மார் வரிசையில் தனியாக இல்லாத மாணிக்கவாசகர் அவர்களும் முதன்மையானவர்கள். இந்த நால்வரும் சைவ சமய குரவர் என்று அழைக்கப்படுகிறார்கள். சைவத் திருமுறைகள் என அழைக்கப்படும் 12 திருமுறைகளின் தொகுதியில் நாயன்மாரின் பாடல்கள் தொகுக்கப்பட்டுள்ளன. முதல் மூன்று திருமுறைகள் திருஞான சம்பந்தராலும், திருமுறைகள் 4,5,6 திருநாவுக்கரசராலும், 7ஆம் திருமுறை சுந்தரராலும் ஆக்கப்பட்ட பண்ணோடு அமைந்த இசைப்பாடல்களாகும். நாயன்மாரில் சிலரே சமய நூல்களில் புலமை

குறிப்பு

உடையவர்கள். மற்றவர்கள் மிகச் சிறந்த பக்தர்கள் மட்டுமே. பலரும் பல்வேறு தொழில்கள் செய்து உயிர்வாழ்ந்தவர்கள். இறையருள் பெற பக்தி மட்டுமே போதுமானது என்பதும் எல்லோரும் இறைவன் திருவடிகளை அடையலாம் என்பதுமே இவர்கள் வாழ்க்கை தரும் பாடமாக உள்ளது. நாயன்மார்களை மரபு அடிப்படையில் நோக்கும் போது, அரசர், அந்தணர், வணிகர், வேளாளர், ஆதி சைவர், மரபுக்கொருவர், மரபு கூறப்படாதவர் என வகைப்படுத்துகின்றனர். அறுபத்துமூன்று நாயன்மாரில் மூவர் பெண்கள். கி.பி. 3-4 ஆம் நூற்றாண்டில் வாழ்ந்த காரைக்கால் அம்மையார் நாயன்மாரில் காலத்தால் மூத்தவர். தான் பிறந்து வாழ்ந்த ஊரின் பெயராலேயே அறியப்படும் காரைக்கால் அம்மையாரின் இயற்பெயர் புனிதவதியார் ஆகும். மதுரையை ஆண்ட கூன் பாண்டியன் என்ற பாண்டிய மன்னன் நின்றசீர் நெடுமாற நாயனார் என்ற அறியப்படுகிறார். அவர் மனைவி மங்கையர்க்கரசியார் என்பவர் நாயன்மாரில் மற்றொரு பெண் ஆவார். திருநாவலுரைச் சேர்ந்த சடையனார் என்ற நாயனாரின் மனைவி இசைஞானியார் மூன்றாவது பெண் நாயனார் ஆவார். இவர்களின் மகன் சுந்தரமூர்த்தியார் சைவக்குரவர் நால்வருள் ஒருவரும் நாயன்மாரில் ஒருவரும் ஆவார்.

**திருநீலகண்ட நாயனார்:** கூடா நட்பின் விளைவால், மனைவியை இளம் வயது முதல் தீண்டக் கூடாது, முதுமைகாலத்தில், மனைவியாருடன் கோல் பிடித்து, குளத்தில் முழுகி, சிவ பெருமான் அருளால் இளமை பெற்றார்.

**இயற்பகை நாயனார்:** சிவனடியாராக வந்த சிவனிடம், தன்னுடைய மனைவியை , முழுநம்பிகையுடன் அனுப்பியவர்.

**இளையான்குடிமாற நாயனார்:** நடு இரவில், சிவனாடியார் வேடத்தில் வந்த சிவபிரானுக்காக, நெல் அறுத்தவர்.தன்னுடைய , வீட்டுக் கூரையையும் விறகாக ஆக்கி, சிவனடியாருக்கு உணவு தந்தவர்.

**மெய்ப்பொருளார்:** தன்னுடைய பகைவன், பொலி சிவவேடம் பூண்டு தன்னைக் கொன்றான். இருப்பினும், சாகும்தறுவாயிலும், சிவவேடத்திற்கு மரியாதைத் தந்து, பகைவனின் உயிரைக் காப்பாற்றியவர்

**விறல்மிண்டர்:** சிவ பகதர்களை வணங்காத காரணத்தினால், சுந்தர நாயனாரைக் கடிந்து ஏசியவர். திருத்தொண்ட தொகை பாட காரணமாக விளங்கியவர்.

**அமர்நீதியார்:** சிவனடியாராக வந்த சிவனின் கோவணம் தொலைந்துப் போக, ஈடாக , தன்னுடைய சொத்தையும்,குடும்பத்தையும் ஈடாகத் தந்தவர்.

**குறிப்பு**

**எறிபத்தர்:** சிவபக்தரின் பூஜைக்குரிய பூவை எறிந்த மன்னனின் யானையைக் கொன்றவர்.பின் தவறுசெய்ததாக எண்ணிய மன்னன், சிவபக்தன் என்று உணர்ந்தவுடன், தன் கழுத்தை வெட்டத்துணிந்தவர்.

**ஏனாதிநாதர்:** கொல்ல வந்த பகைவனின் நெற்றியில் திருநீறு இருந்ததையறிந்து, பகைவனைக்கொல்லாமல், தான் உயிர் இழந்தவர்.

**கண்ணப்பர்:** பக்தியில், சிவனுக்காக, இரு கண்களையும் தோண்டி எடுத்தவர். அன்புப் பெருக்கால் மாமிசத்தையும் இறைவருக்குப் படைத்தவர்.

**குங்கிலியக்கலயர்:** சாய்ந்த லிங்கத்தை தான் கழுத்தில் கயிறு கட்டி இழுத்தவர். வறுமையில் வாடினாலும், மனைவி கொடுத்த தாலியை விற்று உணவு வாங்காமல் சிவ பூஜைக்காக தூபம் ஏற்றியவர்.

**மானக்கஞ்சறார்:** தன் மகளுக்குக் கல்யாணம் என்றாலும், சிவனடியார் கேட்க, மகளின் அழகிய கூந்தலை வெட்டியவர்.

**அரிவாட்டாயர்:** சிவபூஜைக்குரிய பொருட்கள் கீழே விழுந்ததால் மாறாக தன்னுடைய கழுத்தை வெட்டத்துணிந்தவர்.

**ஆனாயர்:** புல்லாங்குழல் ஓசையில் சிவ பக்தியை வெளிப்படுத்தியவர்.

**மூர்த்தி நாயனார்:** சந்தனக் கட்டைகள் கிடைக்காது தன்னுடைய முழங்கையைக் கல்லில் தேய்த்தவர். நாடாளும் பொறுப்பு வந்தாலும் திருநீறு, உருத்திராக்கம், சடைமுடியைத் தன்னுடையசின்னமாகக் கொண்டவர்.

**முருக நாயனார்:** வழிபாட்டுக்கு உரிய காலத்திற்கு ஏற்ப எம்பெருமானுக்கு பூமாலையாம் பாமாலையை (பாட்டினால்) சாத்தி அர்ச்சனை புரிவார். இடைவிடாமல் இறைவனுடைய பஞ்சாட்சர மந்திரத்தை ஓதிக்கொண்டேயிருப்பார்.

**உருத்திரபசுபதி:** கழுத்தளவு நீரில் பகல் இரவு பாராமல் ருத்ரம் ஓதியவர்.

**திருநாளைப்போவார்:** தாழ்ந்த குலமென்பதால் கோயிலில் நுழையாமல் வெளி நின்று சிவனை வணங்குவார். தன்தரிசனத்தை மறைத்த நந்தியை நகரச் செய்தவர். சிதம்பரம் திருத்தலம் போக வெகு ஆவல்கொண்டவர்.

**திருக்குறிப்புத் தொண்டர்:** சிவபிரான் வேடமிட்ட சிவனின் அழுக்குத் துணியைத் துவைத்தவர். ஆனால், குறித்தநேரத்தில் தன் பணியைச் செய்ய இயலாததால் தன் தலையைக் கல்லில் மோதியவர்.

குறிப்பு

**சண்டேசுர நாயனார்:** சிவலிங்கத்திற்கு பால் அபிஷேகம் செய்தவர். பாற்குடத்தைக் காலால் உடைத்த தந்தையின் காலை வெட்டியவர்.

**திருநாவுக்கரசர் சுவாமிகள்:** தேவாரம் பாடி உழவாரப் பணியில் ஈடுபட்டு சிவன் அருளைச் சிறப்பித்தவர். பற்பல அற்புதங்கள் மூலம் சிவனருளைக் கண்முன் காட்டியவர்.

**குலச்சிறையார்:** பாண்டிய நாட்டின் அமைச்சராக இருந்து சைவத்தைக் காத்தவர்.

**பெருமிழலைக் குறும்பர்:** சிவனாடியருக்கு வேண்டியது அளித்து உதவி புரிபவர்.

சுந்தரருடன் கயிலை சென்றவர்.

**காரைக்கால் அம்மையார்:** இறைவனின் அருளால் , கணவருக்காக மாம்பழம் வரவழைத்தார். பின், இறைவனே துடிக்க பேய் வடிவம் எடுத்தவர். சிவபெருமானால் அம்மையே என்று அன்புடன் அழைக்கப்பெற்றவர். அறுபத்து மூவருள் அமரும் பாக்கியம் பெற்ற ஒரே அம்மையார்.

**அப்பூதி அடிகள்:** திருநாவுக்கரசரின் பெயரில் பற்பல தொண்டுகள் புரிந்தவர். தன் மகன் பாம்பால் கடியுண்ட போதிலும், திருநாவுக்கரசரின் உணவு உபசரிப்பு பாதிக்கப்படடக்கூடாது என்ற அச்சத்தால் இறந்த மகனை மறைத்துவைத்தவர். பின் இறந்த மகனை சிவன்அருளால் உயிர் பெற்ற செய்தவர்.

**திருநீலநக்கர்:** திருச்சாத்தமங்கை அவயந்தி ஆலயத்தில், சிவலிங்கத்தின் மீது உள்ள சிலந்தியை ஊதிய மனைவியை கடிந்து ஏசியவர்.ஈசன் கனவில் காட்சியளித்தது அருள்புரிந்தார்

**நமிநந்தி அடிகள்:** ஈசன் அருளால் தண்ணீரால் விளக்கு ஏற்றி அற்புதம் நிகழ்த்தியவர்.

**திருஞானசம்பந்தர்:** ஞானக் குழந்தை பல அற்புதங்கள் செய்தவர். பார்வதி அம்மையிடம் ஞானப்பால் உண்டபேறு பெற்றவர். அப்பர் பெருமானால் மிகவும் போற்றப் பட்டவர். சமணர்களை வென்று சைவம் தழைக்கச் செய்தவர்.

**ஏயர்கோன் கலிக்காமர்:** இறைவனை தூதுதவராய் அனுப்பிய சுந்தரநாயனாரிடம் கடிந்து பேசியதால், சூலைநோய் பெற்றார். பின் சிவன் அருளால் நோய் நீக்கப்பட்டது.

**திருமூலர்:** திருமந்திரம் பாடியவர். நந்தி எம்பெருமானின் மாணாக்கர். சித்தர்.விடம் தீண்டி மூலன் என்பவர் இறந்தார் இதனால்

குறிப்பு

பசுக்கள் துயரம் கொண்டன. பசுவின் துயரம் தீர்க்க மூலன் உடலில் புகுந்து பசுக்களை காத்தார்.

**தண்டி அடிகள்:** கண் குருடாக இருந்தாலும் சமுதாய நோக்கம் கொண்டு குளம் தோண்டியவர்.சமணர்கள் சவால் விட சிவஅருளால் கண் பார்வை மீண்டும் பெற்றவர். சமணர்கள் பார்வை இழந்தனர்.

**மூர்க்கர்:** சூதாடி வரும் வருமானத்தில் சிவ பூஜை நடத்தியவர். சிவனடியார்க்கு வேண்டிய தேவைகள் செய்தார்.

**சோமாசிமாறர்:** நிறைய யாகம் நடத்தி சிவ பூஜை செய்தவர்.லோகம் சுபிட்சம் பெற பல சிவயாகம் நடத்தி ஈசனை மகிழ்வித்தார். சுந்தரரின் நண்பர்.

**சாக்கியர்:** அன்பால் சிவ லிங்கத்தின் மீது கல் எறிந்து வழிபட்டவர்.இவர் சிவபக்தியால் எறிந்த கல் அனைத்தும் மலர்களாக மாறின.

**சிறப்புலி:** சிவனாடியார்கள் பேரன்புடையவர் வேண்டுவதை அளிக்கும் வள்ளல். சிவ பூஜையைத் தவறாமல் செய்தவர்.

**சிறுத்தொண்டர்:** பைரவ அடியாராய் வந்த சிவனுக்காக தன் மகனையே வெட்டி கறி சமைக்கத் துணிந்தவர்.

**சேரமான் பெருமாள்:** சுந்தரரின் நண்பர். சிவ பூஜையைத் தவறாமல் செய்தவர். சிவனடியாரை சிவனாக பாவித்து உபசரித்தார்.

**கணநாதர்:** சிவ பூஜையை அதிக பக்தியுடன் செய்வார். திருஞானசம்பந்த மூர்த்தியுடன் நட்பு கொண்டு சிவாலயம் பல சென்று வழிபடும் பெறும் பெற்றார்.

**கூற்றுவர்:** நாடாள முடிசூட விரும்பியவர். ஆனால், வாய்ப்புக் கிடைக்காததால் தன்சிந்தையில் சிவனே முடி சூட்டி தந்ததாக எண்ணியவர்.

**புகழ்ச்சோழ நாயனார்:** எறிபத்தர். தவறு செய்த யானையை கொன்றுவித்தார் என்று அறிந்து சிவனை நினைத்து தன் உயிரை விட நினைத்த மன்னர்.சிவனாடியார் தலை கொய்திய காரணத்தால் யாகத்தில் உயிர் துறந்தவர்.

**நரசிங்க முனையரையர்:** சுந்தரமூர்த்தி நாயனாரை வளர்த்தவர். சிவாலயம் பல கட்டி சைவம் வளர்த்தார். மூர்த்தி வேடம் கொண்ட சிவனாடியரை கண்ட பல பதுங்கி செல்ல அவரை வணங்கி நீதி அளித்தார்.

குறிப்பு

**அதிபத்தர்:** வலையில் கிடைக்கும் முதல் மீனை சிவனை நினைத்து, ஆற்றில் விடுபவர். அன்று ஒருபொன் மீன் கிடைத்தாலும் சிவனுக்காக ஆற்றில் விட்டு விட்டார்.

**கலிக்கம்பர்:** முன்பு வேலைக்காரனாக இருந்தவன் சிவனடியாராய் வந்திட உபசரிக்க மறுத்தமனைவியின் கையை வெட்டியவர்.

**கலியர்:** வறுமையில் தன் மனைவியே விற்று விளக்கு ஏற்றினார். எண்ணெய் வாங்கக் காசுஇல்லாத சமயத்தில் தன் இரத்தத்தால் விளக்கு ஏற்றியவர்.

**சத்தி:** சிவனைப் பற்றி தவறாக பேசியவரின் நாக்கை அறுத்தவர்.

**ஐயடிகள் காடவர்கோன்:** மன்னன் பதவியை விட்டு திருத்தல யாத்திரை மேற்கொண்டவர்.

**கணம்புல்லர்:** விளக்கு ஏற்றுவதற்குத் தடை ஏற்பட்டதால், தன் தலைமுடியைக் கொண்டு விளக்கு ஏற்றியவர்

**காரி:** காரிக்கோவை என்ற நூல் இயற்றி வரும் வருமானத்தில் சிவாலயங்களை அமைத்தார்.

**நின்றசீர் நெடுமாறனார்:** திருஞான சம்பந்தாரால் தன்னுடைய நோயும் கூனும் நீக்கப்பெற்று சைவத்தைவளர்க்கும் அரசராய் வாழ்ந்தவர்.

**வாயிலார்:** இறைவனை எப்போதும் நினைக்கக்கூடிய தமது மனக்கோயிலில் இருத்தினார். உணர்வுஎன்னும் தூய விளக்கேற்றினார். ஒப்பில்லா அரும்பெரும் இன்பம் என்னும்திருவமுதத்தால் வழிபட்டு சிவபெருமானுடைய சேவடி நீழலை எய்தும் பேரின்ப வாழ்வுபெற்றார்.

**முனையடுவார்:** அரசருக்காகப் போர் புரிந்து வரும் வருமானத்தில் சிவனாடியார்களா அனைவருக்கும் உணவு அளித்தார்.

**கழற்சிங்க நாயனார்:** சிவ பூஜைக்கு உரிய மலரை முகர்ந்த மனைவியின் கையை வெட்டியவர்.

**இடங்கழி:** அரசனாய் இருந்தாலும் தன்னுடைய நெல் களஞ்சியத்தை சிவ பூஜைக்கு வாரித் தந்தவர்.

**செருத்துணை நாயனார்:** சிவ பூஜைக்குரிய மலரை மோந்த கழற்சிங்கநாயனாரின் மனைவியின் மூக்கை வெட்டியவர்.

**புகழ்த்துணை:** வறுமை வந்தாலும் கோயிலில் சிவ பூஜையைத் தவறாமல் செய்தவர். பின் ஊரின்பஞ்சத்தைத் தீர்க்க பொருள் பெற்றார்.

**கோட்புலி:** சிவபூஜைக்குரிய நெல்லை எடுத்த உறவினர்களின் நெல்லை அழித்தவர்.

**பூசலார்:** பொருள் இல்லாததால் மனத்தில் கோயில் கட்டினார். மன்னன் கட்டிய கற் கோயிலைவிட்டு இறைவன் முதலில் பூசலாரின் மனக்கோவிலுக்கு வருகை அளித்தார்.

**குறிப்பு**

**மங்கையர்க்கரசியார்சை:** சைவத்தைப் பரப்பிய பாண்டிய மகாராணி. நின்ற சீர் நெடுமாறனின் மனைவி. அமைச்சர் குலச்சிறையாரின் துணையுடன் ஞான சம்பந்தரை மதுரைக்கு அழைத்து சைவமதம் தழைக்கும் படி செய்த அம்மையார்.

**நேசர்:** சிவனாடியார்களுக்கு உடையும் கோவணமும் அளித்தார். எப்பொழுதும் சிவனின் நாமத்தை நினைத்தவர்.

**கோச்செங்கட் சோழர்:** முற்பிறவியில், சிலந்தியாய் சிவனை வழிபட்டு யானையால் இடர் பட்டு மன்னராய்பிறந்தார். பின் மன்னராய் நிறைய சிவ ஆலயங்களை யானை நுழைய இயலா வண்ணம்கட்டினார்.

**திருநீலகண்ட யாழ்ப்பாணர்:** ஞானசம்பந்தருடன் யாழ் இசையின் மூலம் சிவனைப் போற்றியவர்

**சடையனார் நாயனார்:** சுந்தரமூர்த்தி நாயனாரின் தந்தை.

**இசைஞானியார்:** சுந்தரமூர்த்தி நாயனாரின் அன்னை.

**சுந்தரமூர்த்தி நாயனார்:** இவா் கடைசியாவாா்

**உங்கள் முன்னேற்றத்தைச் சரிபார்க்கவும்**

மங்களாசனம் என்றாளல் என்ன?

பெண் ஆழ்வார் என்பவர் யார்?

## 9.4 உங்கள் முன்னேற்றத்தைச் சரிபார்க்கும் வினாக்களுக்கான விடைகள்

- மங்களாசனம் என்பது ஒரு கோவிலில் உள்ள இறைவனைப் போற்றிப் பாடல்கள் இயற்றுவது ஆகும்.
- ஆண்டாள் நாச்சியார் பன்னிரண்டு ஆழ்வார்களில் பெண் ஆழ்வார் இவர் ஒருவரே ஆவார். இவர் திருமாலின் மனைவியான திருமகளின் அம்சமாகத் தோன்றியவர்.

## 9.5 சுருக்கவுரை

- தமிழரின் மரபு சார்ந்த சமயங்களை வைதீகப் பிடியிலிருந்து மீட்கும் முயற்சியில் தோற்றுப் போனவர்கள் தமிழருக்குச் சமயமே

இல்லை என்று மறுதலிப்பது தமிழரின் பண்பாட்டு வரலாற்றை ஊனப்படுத்திவிடும்.

- சைவ சமயத்தையும் சைவ சித்தாந்தத்தையும் மறுதலிப்பது ஆய கலைகள் அறுபத்து நான்கையும் அறிந்த தமிழனுக்குக் கடவுள் பற்றிய சிந்தனை மட்டும் இல்லை என்று கூறுவதாய் முடியும்.
- வைதீகப் பிடியிலிருந்து சைவத்தை மீட்க வேண்டும். மீட்டால் சைவம் அறிவார்ந்த சமயமாகச் சமய உலகைத் தலைமை கொள்ளும் என்பது உறுதி.
- ஆழ்வார்கள் தம்முடைய தமிழ் பாசுரங்களால் வைணவ சமயக் கடவுளான திருமாலைப் போற்றி பாடி மகிழ்ந்தவர்கள். திருமாலின் அடியவர்களான இவர்கள் திருமாலின் பெருமையும், தமிழின் சிறப்பினையும் உலகுக்கு உணர்த்தியவர்கள்.
- நாயன்மாரில் அப்பர், சம்பந்தர், சுந்தரர் ஆகிய மூவரும், நாயன்மார் வரிசையில் தனியாக இல்லாத மாணிக்கவாசகர் அவர்களும் முதன்மையானவர்கள். இந்த நால்வரும் சைவ சமய குரவர் என்று அழைக்கப்படுகிறார்கள்.

## 9.6 முக்கிய கருத்துப்படிமங்கள்

- நாயன்மார்கள்
- ஆழ்வார்கள்

## 9.7 சுயமதிப்பீட்டு பயிற்சி வினாக்கள்

**குறுகிய வினாக்களுக்கு விடையளிக்கவும்**

1. ஆழ்வார்களைப் பற்றி சிறுகுறிப்பு வரைக?

**விரிவான வினாக்களுக்கு விடையளிக்கவும்**

1. நாயன்மார்களி சமய நெறியைப் பற்றி கட்டுரை வரைக?

## 9.8 மேலும் படிக்க


- ஐயங்கார்,சீனிவாச:. வு (2001), *தமிழர்களின் வரலாறு: ஆரம்ப காலத்திலிருந்து 600 கி.பி வரை.* டெல்லி
- கிருஸ்ணசுவாமி.அ, (1977) விஜயநகரபப் பேரரசின் வரலாறு (கிபி1525 வரை) தமிழ்நாட்டுப் பாடநூல் நிறுவனம், அண்ணாமலைநகர்.

- சர்மா,சு.ளு. (2006). *பண்டைய இந்தியாவின் முந்தைய காலம்.* ஆக்ஸ்.ஃ.போர்ட் யுனிவர்சிட்டி பிரஸ்.
- சாஸ்திரி, ராமசாமி. (2002) *தமிழர்கள்: மக்கள், அவர்களின் வரலாறு மற்றும் கலாச்சாரம்.* புதுடெல்லி, காஸ்மோ பப்ளிகேஷன்ஸ்
- சிராஜீத்தின, (2010), *தமிழ்நாட்டு வரலாறு (கி.பி. 1987 வரை),* பாவை பப்ளிகேசன், சென்னை
- தேவநேயப்பாவணர். (1992) *பண்டைத் தமிழர் நாகரிகமும் பண்பாடும்,* கழக வெளியீடு சென்னை
- மாதவன்,சித்ரா, (2005), *தமிழ்நாட்டின் வரலாறு மற்றும் கலாச்சாரம்: தொகுதி-1 (கி.பி.1310 வரை).* டெல்லி

# அலகு X
# திருமூலர் - இராமானுசர் - வீரமாமுனிவர்

குறிப்பு

## அலகு X திருமூலர்



## 10.0 முன்னுரை

திருமூலர் அல்லது திருமூல நாயனார் சேக்கிழார் சுவாமிகளால் புகழ்ந்து பேசப்பட்ட 63 நாயன்மார்களுள் ஒருவரும், பதினெண் சித்தர்களுள் ஒருவரும் ஆவார். இவர் சிறந்த ஞானியாய் விளங்கியவர். திருமூலர் வரலாற்றை நம்பியாண்டார் நம்பிகள் திருத்தொண்டர் திருவந்தாதியில் சுருக்கமாய்க் கூறுகிறார்.

இராமானுசர் ஒன்பதாவது நூற்றாண்டைச் சார்ந்த நாதமுனிகள் என்ற முதல் ஆச்சாரியர் அடங்கிய குரு பரம்பரையில் ஆளவந்தாருக்கு அடுத்து வந்தவர் இராமானுசர். இராமானுசர் (இராமானுசர்,1017-1137) இந்து தத்துவப் பிரிவுகளில் ஒன்றான வேதாந்தத்தின் விளக்கங்களில் ஒன்றான விசிஷ்டாத்துவைதத்தின் முன்னோடியாக விளங்கினவர். அண்மைக்காலத்தில் அறிஞர்கள், இவரது பிறப்பு இன்னும் 20-60 ஆண்டுகள் வரை பிந்தியதாக இருக்கும் எனக் கருதுகிறார்கள். இவரது இறப்பும் 20 ஆண்டுகள் வரை பிந்தியே நிகழ்ந்திருக்க வேண்டுமென்பதும் சிலரது கருத்து. இவர் விசிட்டாத்துவைத தத்துவ இயலை நாடளாவிய முறையில் பரப்பிய மெய்யியலாளர். பிரம்ம சூத்திரத்திற்கு ஸ்ரீபாஷ்யம்

**குறிப்பு**

என்ற ஓர் உயர்தர உரையை இயற்றி, ஆதி சங்கரரின் அத்வைதத் தத்துவத்திற்கு மாற்றுச்சொன்ன ஆன்மீகவாதி. பாரததேசத்தின், சரித்திரப்பிரசித்தி பெற்று உலகளவில் புகழடைந்த, மூன்று முக்கிய குருமார்களில் ஒருவர்.

வீரமாமுனிவர் (நவம்பர் 8, 1680 – பெப்ரவரி 4, 1742) இத்தாலி நாட்டிலுள்ள கேசுதிகிலியோன் என்னும் இடத்தில் பிறந்தார். இவரின் இயற்பெயர் – கான்ச்டன்டைன் சோசப்பு பெச்கி (ஊழளெவயவெைநெ துழளநிா டீநளஉாை). இவர் இயேசு சபையைச் சேர்ந்த குரு ஆவார். கிறித்தவ மதத்தைப் பரப்பும் நோக்கில், 1709ஆம் ஆண்டு இயேசுசபைப் குருவானபின், 1710 ஆம் ஆண்டு தமிழகத்துக்கு வந்தார். இவர் தமிழ் மொழியின் வளர்ச்சிக்கும், முன்னேற்றத்திற்கும் சிறப்பான பணிகளைச் செய்துள்ளார். 23 நூல்களைத் தமிழில் எழுதியதுடன், இயேசுக் கிறித்துவின் வாழ்க்கை தொடர்பான நிகழ்ச்சிகளையும் இயேசுவின் வளர்ப்புத் தந்தையாகிய புனித யோசேப்பின் வரலாற்றையும் தமிழ்ப் பண்பாட்டுக்கேற்ப "தேம்பாவணி" என்ற பெருங்காவியமாக இயற்றியது இவரின் தமிழ்ப் புலமைக்குச் சான்றாக உள்ளது. திருக்குறள், தேவாரம், திருப்புகழ், நன்னூல், ஆத்திசூடி ஆகிய நூல்களை பிற மொழிகளில் மொழி பெயர்த்தவர்

## 10.1 நோக்கம்

- திருமூலரின் சமயப் பணியினைப் பற்றி அறிந்துக் கொள்ள முடிகின்றது
- இராமானுசர் ஒரு மெய்யியலாளர் என்பதைப் பற்றி அறிந்துக் கொள்ள முடிகின்றது
- வீரமாமுனிவர் தமிழ் மொழியின் வளர்ச்சிக்கும், முன்னேற்றத்திற்கும் சிறப்பான பணிகளைச் செய்துள்ளார் என்பதைப் பற்றி அறிந்துக் கொள்ள முடிகின்றது

## 10.2 திருமூலர்

திருமூலர் அல்லது திருமூல நாயனார் சேக்கிழார் சுவாமிகளால் புகழ்ந்து பேசப்பட்ட 63 நாயன்மார்களுள் ஒருவரும், பதினெண் சித்தர்களுள் ஒருவரும் ஆவார். இவர் சிறந்த ஞானியாய் விளங்கியவர். திருமூலர் வரலாற்றை நம்பியாண்டார் நம்பிகள் திருத்தொண்டர் திருவந்தாதியில் சுருக்கமாய்க் கூறுகிறார். இவர் வாழ்ந்த காலம் கி.மு 5000 வருடங்களுக்கு முந்தயது எனினும் இவரால் அருளப்பட்ட திருமந்திரமாலை பல காலத்திற்கு பின்னரே உலகிற்கு வழங்கப்பட்டது என்பதால் தற்கால அறிஞர்கள் கி.பி என்று கூறுகின்றனர். இது 3000 பாடல்களைக் கொண்டது. இதனைச் சைவத்திருமுறை பன்னிரண்டினுள் பத்தாவது திருமுறையாய்த் தொகுத்துள்ளனர்.

## 10.3 இராமானுசர்

குறிப்பு

ஒன்பதாவது நூற்றாண்டைச் சார்ந்த நாதமுனிகள் என்ற முதல் ஆச்சாரியர் அடங்கிய குரு பரம்பரையில் ஆளவந்தாருக்கு அடுத்து வந்தவர் இராமானுசர். இராமானுசர் (இராமானுசர்,1017-1137) இந்து தத்துவப் பிரிவுகளில் ஒன்றான வேதாந்தத்தின் விளக்கங்களில் ஒன்றான விசிஷ்டாத்துவைதத்தின் முன்னோடியாக விளங்கினவர். அண்மைக்காலத்தில் அறிஞர்கள், இவரது பிறப்பு இன்னும் 20-60 ஆண்டுகள் வரை பிந்தியதாக இருக்கும் எனக் கருதுகிறார்கள். இவரது இறப்பும் 20 ஆண்டுகள் வரை பிந்தியே நிகழ்ந்திருக்க வேண்டுமென்பதும் சிலரது கருத்து. இவர் விசிட்டாத்துவைத தத்துவ இயலை நாடளாவிய முறையில் பரப்பிய மெய்யியலாளர். பிரம்ம சூத்திரத்திற்கு ஸ்ரீபாஷ்யம் என்ற ஓர் உயர்தர உரையை இயற்றி, ஆதி சங்கரரின் அத்வைதத் தத்துவத்திற்கு மாற்றுச்சொன்ன ஆன்மீகவாதி. பாரததேசத்தின், சரித்திரப்பிரசித்தி பெற்று உலகளவில் புகழடைந்த, மூன்று முக்கிய குருமார்களில் ஒருவர். மற்ற இருவரில் ஒருவர் ஆதி சங்கரர். மற்றவர் துவைத சமயப்பிரிவை நிலைநாட்டிய மத்வர். இராமானுசரைப் பின்பற்றியவர்கள் வைஷ்ணவர் அல்லது வைணவர் எனப்படுவர். இராமானுசர் திருவாய்மொழியின் செவிலித்தாய் எனப் போற்றப்படுபவர். தமிழ்நெறி போற்றும் வைணவராவார்.

இராமானுசர் பாரததேசம் முழுவதும் யாத்திரை செய்து வைணவத்தின் பெருமையை எங்கும் பறை சாற்றினார். எதிர்வாதங்கள் புரிந்தவர்களை வென்று வைணவ மடங்களை நிறுவினார். சில இடங்களில், ஆன்மீகத்தில் பிடிப்பு இருந்தும் இல்லறத்திலேயே இருக்க விரும்பியவர்களையும் தன் மடங்களின் ஆன்மீகத் தலைவர்களாக்கினார். திருவரங்கத்திலுள்ள தலைமை மடத்திற்கு மடாதிபதியாக வரவேண்டிய விதி முறைகளை வழிப்படுத்தினார். ஒவ்வொருவரிடமும், முக்கியமாக தாழ்த்தப்பட்ட இன மக்களிடையேயும், இரக்கம், கருணை, பரிவு முதலிய நற்குணங்களைச் சொரிந்ததோடு ”திருக்குலத்தார்” என்றும் அவர்களை அழைக்கலானார் (இக்குணத்தால் கவரப்பட்டே, பின்னர் வந்த காந்திமகானும் ”ஹரிஜன்” என்றார்). தமிழ் பிரபந்தங்களை ஓதவும் வைணவச் சின்னங்களை தரிக்கவும் எந்தச் சாதியினரோ ஆணோ பெண்ணோ எல்லோருக்கும் வைணவத்தில் இடம் இருக்கச் செய்தார்.

## 10.4 வீரமாமுனிவர்

வீரமாமுனிவர் (நவம்பர் 8, 1680 – பெப்ரவரி 4, 1742) இத்தாலி நாட்டிலுள்ள கேசுதிகிலியோன் என்னும் இடத்தில் பிறந்தார். இவரின் இயற்பெயர் – கான்ச்டன்டைன் சோசப்பு பெச்கி (ஊழளவயவெiநெ துழளநிா டீநளஉாi). இவர் இயேசு சபையைச் சேர்ந்த குரு ஆவார். கிறித்தவ மதத்தைப் பரப்பும் நோக்கில், 1709ஆம் ஆண்டு இயேசுசபைப்

**குறிப்பு**

குருவானபின், 1710 ஆம் ஆண்டு தமிழகத்துக்கு வந்தார். இவர் தமிழ் மொழியின் வளர்ச்சிக்கும், முன்னேற்றத்திற்கும் சிறப்பான பணிகளைச் செய்துள்ளார். 23 நூல்களைத் தமிழில் எழுதியதுடன், இயேசுக் கிறித்துவின் வாழ்க்கை தொடர்பான நிகழ்ச்சிகளையும் இயேசுவின் வளர்ப்புத் தந்தையாகிய புனித யோசேப்பின் வரலாற்றையும் தமிழ்ப் பண்பாட்டுக்கேற்ப "தேம்பாவணி" என்ற பெருங்காவியமாக இயற்றியது இவரின் தமிழ்ப் புலமைக்குச் சான்றாக உள்ளது. திருக்குறள், தேவாரம், திருப்புகழ், நன்னூல், ஆத்திசூடி ஆகிய நூல்களை பிற மொழிகளில் மொழி பெயர்த்தவர்

**இந்தியாவில்** வீராமாமுனிவர் லிஸ்பனில் இருந்து புறப்பட்டு 1710 சூனில் கிறித்தவ மதம் பரப்பு பணி செய்ய கோவா வந்து சேர்ந்தார்.

**தமிழகத்தில்** கோனான்குப்பத்தில் பெரிய நாயகி அன்னை ஆலயத்தின் முன் அமைந்துள்ள வீரமாமுனிவர் திருவுருவம் சில நாட்கள் கோவாவில் தங்கியவர், தமிழ்நாடு செல்ல உத்தேசித்து, கொச்சி வந்து அங்கிருந்து கால்நடையாக அம்பலக்காடு வந்து தங்கி மதுரையில் காமநாயக்கன்பட்டி வந்து சேர்ந்தார்.

**10.4.1 தமிழகத்தில் வீரமாமுனிவர்**

1822 இல், முதன் முதலாக இவருடைய சரித்திரத்தைத் தமிழில் எழுதி வெளியிட்ட வித்துவான் முத்துசாமி பிள்ளை, இவருடைய நடையுடை பாவனைகளை, அந்நூலில் கீழ்வருமாறு எழுதியிருக்கிறார். இந்தத் தேசத்தில் வந்த நாள் முதலாகப் புலால் மாமிசங்களை நிவர்த்தித்து, இரண்டு தமிழ்த் தவசிப் பிள்ளைகளைப் பரிசுத்த அன்னபாகஞ் செய்யச் சொல்லித் தினமொரு பொழுது மாத்திரம் போசனம் பண்ணிக் கொண்டிருப்பார். தமது மடத்திலிருக்கும் பொழுது, கோபிச் சந்தனம் நெற்றியிலிட்டுக் கொண்டு, தலைக்குச் சூரியகாந்திப பட்டுக் குல்லாவும், அரைக்கு நீர்க்காவிச் சோமனுந் திருநெல்வேலிக் கம்பிச் சோமன் போர்வை முக்காடுமிட்டுக் காலிற் பாதகுறடும் போட்டுக் கொண்டிருப்பார். இவர் வெளியிற் சாரி போகும் போது பூங்காவி அங்கியும் நடுக்கட்டும், வெள்ளைப் பாகையும், இளங்காவி யுத்தரிய முக்காடும், கையினிற் காவி யுருமாலையும், காதில் முத்துக் கடுக்கனும், கெம்பொட்டுக் கடுக்கனும், விரலிற்றம்பாக்கு மோதிரமும், கையிற்றண்டுக் கோலும், காலிற் சோடுடனும் வந்து, பல்லக்கு மெத்தையின் மேலிட்டிருக்கும் புலித்தோலாசனத்தின் மேலெழுந்தருளியிருந்து, உபய வெண்சாமரை வீசவும், இரண்டு மயிற்றோகைக்கொத் திரட்டவும், தங்கக் கலசம் வைத்த காவிப்பட்டுக் குடைபிடிக்கவுஞ் சாரிபோவார். இவரிறங்கும் இடங்களிலும் புலிதோலாசனத்தின் மேலுட்காருவார்.

குறிப்பு

### 10.4.2 தமிழ்ப் பணி

- தமிழகம் வந்த பின், சுப்பிரதீபக் கவிராயரிடம் தமிழ் இலக்கண, இலக்கியம் கற்று, இலக்கியப் பேருரைகள் நடத்துமளவுக்குப் புலமை பெற்றார்.
- இலக்கியச் சுவடிகளைப் பல இடங்கள் சென்று தேடி எடுத்ததால் “சுவடி தேடும் சாமியார்” எனவும் அழைக்கப்பட்டார். இவற்றில் காண அரிதான பல பொக்கிசங்கள் அழிக்கப்பட்டதாகவும் கூறப்படுகிறது.
- தமிழின் சிறப்பை மேல் நாட்டார் உணர திருக்குறள், தேவாரம், திருப்புகழ், நன்னூல், ஆத்திசூடி போன்ற நூல்களை பிற ஐரோப்பிய மொழியில் வெளியிட்டார்.
- தமிழ் கற்க ஏதுவாக தமிழ் – லத்தீன் அகராதியை உருவாக்கினார். அதில் 1000 தமிழ்ச் சொற்களுக்கு லத்தீன் விளக்கம் அளிக்கப்பட்டது. இதுவே முதல் தமிழ் அகரமுதலி ஆகும். பின்பு 4400 சொற்களைக் கொண்ட தமிழ் – போத்துக்கீய அகராதியை உருவாக்கினார்.
- சதுரகராதியை, நிகண்டுக்கு ஒரு மாற்றாகக் கொண்டு வந்தார்.
- அக்காலத்தில் சுவடிகளில் மெய்யெழுத்துகளுக்கு புள்ளி வைக்காமலே எழுதுவது வழக்கம். புள்ளிக்குப் ஈடாக நீண்ட கோடிருக்கும். மேலும் குறில், நெடில் விளக்க என்று “ர” சேர்த்தேழுதுவது வழக்கம். “ஆ” என எழுத “அர” என 2 எழுத்துக்கள் வழக்கிலிருந்தது. (அ:அர, எ:எர) இந்த நிலையை மாற்றி “ஆ, ஏ” என மாறுதல் செய்தவர் இவர்.
- தமிழ் இலக்கிய இலக்கணங்கள் கவிதை வடிவில் இருந்து வந்தன. அவற்றை மக்கள் படித்தறிய எளிதில் முடியவில்லை என்பதனை அறிந்து உரைநடையாக மாற்றியவர் இவர்.

**வீரமாமுனிவரின் இறப்பு:** 1742இல் மதுரைப் பணித்தளம் விட்டுச் சென்ற வீரமாமுனிவர், கடற்கரையில் 1745 வரை பணி புரிந்த பின், 1746-47 ஆண்டுகளைக் கேரள நாட்டிலுள்ள அம்பலக்காட்டில் அமைந்த குருமடத்தில் செலவழித்து, 1747ஆம் ஆண்டு பெப்ருவரி நான்காம் நாளில் தமது 67ஆம் வயதில் உயிர்துறந்தார். திப்பு சுல்தான் காலத்தில் நடந்த வேதகலாபனையில் பல கிறித்துவ நிறுவனங்கள் இடம் தெரியாமல் அழிந்து போயின. வீரமாமுனிவரது கல்லறைக்கும் அந்தக் கதி நேர்ந்திருக்கிறது. தமிழுக்கு இவ்வளவு தொண்டு செய்த பெரியார், தமிழ் நாட்டை விட்டுக் கேரள நாடு சென்று செத்ததும், அங்கு அவரை அடக்கம் செய்த கல்லறையும் தெரியாத நிலையில் இருப்பதும், தமிழ் மக்களுக்கு வருத்தமளிக்கும் செய்திகளாக உள்ளன. நிற்க, சிலர் இவர் மணப்பாட்டில் இறந்தார் என்றும், வேறு சிலர் மணப்பாறையில் உயிர் துறந்தார் என்றும் கூறுவது வரலாற்றுச் சான்றுக்குப் புறம்பானது. 1746-47 ஆண்டுகளில் கேரள நாட்டு அம்பலக்காட்டில் முனிவர் வாழ்ந்தார் என்பதையும், அங்கே மரித்தார் என்பதையும் அக்கால அதிகாரபூர்வமான

அறிக்கையின் வாயிலாக உறுதியாக அறியலாம். வீரமா முனிவர் எழுதிய பரமார்த்த குருவின் கதையை 1822 இல் ஆங்கிலத்தில் மொழி பெயர்த்த பெஞ்சமின் பாபிங்டன் என்பவர் "வீரமா முனிவர் திருச்சியில் சந்தா சாகிப் என்பவரின் அரசில் திவானாகப் பணியாற்றினார் என்றும், பின்னர் மரதர்களின் படையெடுப்பை அடுத்து, வீரமாமுனிவர் டச்சு ஆட்சியில் இருந்த காயல்பட்டினத்தில் வாழ்ந்து நோயால் தாக்கப்பட்டு இறந்தார்" எனக் குறிப்பிடுகிறார்.

**உங்கள் முன்னேற்றத்தைச் சரிபார்க்கவும்**

1. விசிஷ்டாத்துவைதத்தின் முன்னோடி யார்?
2. செவிலித்தாய் எனப் போற்றப்படுபவர்?
3. ஆத்திசூடியை எழுதியவர் யார்?

## 10.5 உங்கள் முன்னேற்றத்தைச் சரிபார்க்கும் வினாக்களுக்கான விடைகள்

1. விசிஷ்டாத்துவைதத்தின் முன்னோடி இராமானுசர் ஆவார்.
2. இராமானுசர் திருவாய்மொழியின் செவிலித்தாய் எனப் போற்றப்படுபவர்.
3. ஆத்திசூடியை எழுதியவர் வீரமாமுனிவர் ஆவார்.

## 10.6 சுருக்கவுரை

- திருமூலர் அல்லது திருமூல நாயனார் சேக்கிழார் சுவாமிகளால் புகழ்ந்து பேசப்பட்ட 63 நாயன்மார்களுள் ஒருவரும், பதினெண் சித்தர்களுள் ஒருவரும் ஆவார். இவர் சிறந்த ஞானியாய் விளங்கியவர்.
- இராமானுசர் பாரததேசம் முழுவதும் யாத்திரை செய்து வைணவத்தின் பெருமையை எங்கும் பறை சாற்றினார். எதிர்வாதங்கள் புரிந்தவர்களை வென்று வைணவ மடங்களை நிறுவினார். சில இடங்களில், ஆன்மீகத்தில் பிடிப்பு இருந்தும் இல்லறத்திலேயே இருக்க விரும்பியவர்களையும் தன் மடங்களின் ஆன்மீகத் தலைவர்களாக்கினார்
- தமிழகம் வந்த பின், சுப்பிரதீபக் கவிராயரிடம் தமிழ் இலக்கண, இலக்கியம் கற்று, இலக்கியப் பேருரைகள் நடத்துமளவுக்குப் புலமை பெற்றார்.

- இலக்கியச் சுவடிகளைப் பல இடங்கள் சென்று தேடி எடுத்ததால் "சுவடி தேடும் சாமியார்" எனவும் அழைக்கப்பட்டார். இவற்றில் காண அரிதான பல பொக்கிசங்கள் அழிக்கப்பட்டதாகவும் கூறப்படுகிறது.

## 10.7 முக்கிய கருத்துப்படிமங்கள்

- திருமூலர்
- இராமானுசர்
- வீரமாமுனிவர்

## 10.8 சுயமதிப்பீட்டு பயிற்சி வினாக்கள்

**குறுகிய வினாக்களுக்கு விடையளிக்கவும்**

1. திருமூலரைப் பற்றி மதிப்பிடுக?

2 இராமானுசர் பற்றி சிறு குறிப்பு வரைக?

**விரிவான வினாக்களுக்கு விடையளிக்கவும்**

1. வீரமாமுனிவரின் தமிழ்பணியைப் பற்றிக் கட்டுரை வரைக?

## 10.9 மேலும் படிக்க


- ஐயங்கார்,சீனிவாசீ. வு (2001), *தமிழர்களின் வரலாறு: ஆரம்ப காலத்திலிருந்து 600 கி.பி வரை.* டெல்லி
- கிருஸ்ணசுவாமி.அ, (1977) விஜயநகரபப் பேரரசின் வரலாறு (கிபி1525 வரை) தமிழ்நாட்டுப் பாடநூல் நிறுவனம், அண்ணாமலைநகர்.
- சர்மா,சு.ளு. (2006). *பண்டைய இந்தியாவின் முந்தைய காலம்.* ஆக்ஸ்.ோபோர்ட் யுனிவர்சிட்டி பிரஸ்.
- சாஸ்திரி, ராமசாமி. (2002) *தமிழர்கள்: மக்கள், அவர்களின் வரலாறு மற்றும் கலாச்சாரம்.* புதுடெல்லி, காஸ்மோ பப்ளிகேஷன்ஸ்
- சிராஜீத்தின, (2010), *தமிழ்நாட்டு வரலாறு (கி.பி. 1987 வரை),* பாவை பப்ளிகேசன், சென்னை
- தேவநேயப்பாவணர். (1992) *பண்டைத் தமிழர் நாகரிகமும் பண்பாடும்,* கழக வெளியீடு சென்னை
- மாதவன்,சித்ரா, (2005), *தமிழ்நாட்டின் வரலாறு மற்றும் கலாச்சாரம்: தொகுதி-1 (கி.பி.1310 வரை).* டெல்லி

குறிப்பு

# அலகு XI
# கால்டுவெல் - ஜீயூ போப் - இராபர்ட் -டி-நொபிலி

## அலகு XI கால்டுவெல்

11.0 முன்னுரை

11.1 நோக்கம்

11.2 கால்டுவெல்

11.3 ஜீயூ போப்

11.4 இராபர்ட் -டி-நொபிலி

11.5 உங்கள் முன்னேற்றத்தைச் சரிபார்க்கும் வினாக்களுக்கான விடைகள்

11.6 சுருக்கவுரை

11.7 முக்கிய கருத்துப்படிமங்கள்

11.8 சுயமதிப்பீட்டு பயிற்சி வினாக்கள்

11.9 மேலும் படிக்க

## 11.0 முன்னுரை

கால்டுவெல் அயர்லாந்து நாட்டில் கிளாடி என்னும் ஆற்றங்கரையோரம் வாழ்ந்த தம்பதிக்கு 1814ல் பிறந்தார் கால்டுவெல். கால்டுவெல் பிறந்த சில ஆண்டுகளிலேயே அவரது குடும்பம் ஸ்காட்லாந்து நாட்டில் உள்ள கிளாஸ்கோ நகருக்கு இடம் பெயர்ந்தனர். கிளாசுக்கோ பல்கலைகழகத்தில் இணைந்து கல்வி பயின்றவர், சிறுவயது முதலே மதப்பற்றோடு வளர்ந்தார். கிருஸ்த்துவத்தை உலகம் முழுவதும் பரப்ப இங்கிலாந்தில் உருவாக்கப்பட்ட லண்டன் மிஷினரி சொசைட்டி என்கிற அமைப்பின் மூலம் இந்தியாவுக்கு 30 மத போதகர்கள் இந்தியாவுக்கு அன்னைமேரி என்கிற கப்பலில் புறப்பட்டனர். கடலில் ஏற்பட்ட புயல் காற்றில் சிக்கி மற்றொரு கப்பலுடன் மோதி விபத்துக்குள்ளானது. இரண்டு கப்பல்களில் பயணம் செய்த நூற்றுக்கணக்கானவர்கள் டால்பீன்களுக்கு இறையாகினர். 6 பேர் மட்டும்மே தப்பினர். அதில் ராபர்ட் கால்டுவெல்லும் ஒருவர். பின்னர் வேறு கப்பல் வந்து உதவிச்செய்ய 1838 ஜனவரி 8ந்தேதி சென்னை துறைமுகத்தில் வந்து இறங்கினார் கால்டுவெல்.

ஜி.யு. போப் கனடாவின் பிரின்ஸ் எட்வெர்ட் தீவ என்னுமிடத்தில் ஜான் போப், காதரீன் யூக்ளோ போப் ஆகியோருக்கு பிறந்தார் போப். ஜீயார்ஜ் யூக்ளோ என்பது போப்பின் இயற்பெயர். தந்தையாரின் வாணிபத்திற்காக எட்வர்ட் தீவு சென்றிருந்த குடும்பம், போப்பின் குழந்தைப் பருவத்திலேயே 1826 ஆம் ஆண்டு இங்கிலாந்துக்கு குடும்பத்துடன் திரும்பியது.19 வயது வரை ஹாக்ஸ்டன் கல்லூரியில் கல்வி பயின்றார். இங்கிலாந்து பல்கலைக்கழகம் ஒன்றில் 1885 முதல் 1908 வரை தமிழ் மற்றும் தெலுங்கு கற்பிக்கும் பேராசிரியராகப் பணியாற்றினார். 1886 ஆம் ஆண்டு திருக்குறளை ஆங்கிலத்தில் மொழிபெயர்த்தார். புறப்பொருள் வெண்பா மாலை, புறநானூறு, திருவருட்பயன் போன்ற நூல்களை பதிப்பித்தார். தமிழ் மீது பெரும் பற்று கொண்ட இவர் நாலடியார், திருவாசகம் ஆகியவற்றையும் ஆங்கிலத்தில் மொழிபெயர்த்தவர்.

இராபர்ட் -டி-நொபிலி இத்தாலி நாட்டில் பிறந்து, 1606இல் தமிழ்நாடு வந்து தமிழும் வடமொழியும் கற்றார் நொபிலி. காவியும் பூணூலும் அணிந்து மரக்கறி உணவுண்டு, தத்துவ போதகர் என்று தம் பெயரை மாற்றி, தம்மை இத்தாலியப் பிராமணர் என்று கூறிக் கொண்டார். நூற்றுக்கணக்கான உயர் சாதி இந்துக்களைக் கிறித்தவராக்கினார். திருமலை நாயக்கரின் நண்பரான பின், சில ஆண்டுகள் கழித்து இலங்கையும் சென்று வந்தார். 1647இல் மயிலாப்பூரில் மறைந்தார்.

## 11.1 நோக்கம்:

- கால்டுவெல் தமிழராய்ச்சி பணி மேற்கொண்டதைப் பற்றி அறிந்துக்கொள்ள முடிகின்றது
- ஜி. யு. போப் திருவாசகத்தை ஆங்கில மொழியில் மொழிப் பெயர்த்ததைப் பற்றி அறிந்துக் கொள்ள முடிகின்றது
- இராபர்ட் -டி-நொபிலி தம்மை இத்தாலியப் பிராமணர் என்று கூறிக் கொண்டதைப் பற்றி அறிய முடிகின்றது

## 11.2 கால்டுவெல்

அயர்லாந்து நாட்டில் கிளாடி என்னும் ஆற்றங்கரையோரம் வாழ்ந்த தம்பதிக்கு 1814ல் பிறந்தார் கால்டுவெல். கால்டுவெல் பிறந்த சில ஆண்டுகளிலேயே அவரது குடும்பம் ஸ்காட்லாந்து நாட்டில் உள்ள கிளாஸ்கோ நகருக்கு இடம் பெயர்ந்தனர். கிளாசுக்கோ பல்கலைகழகத்தில் இணைந்து கல்வி பயின்றவர், சிறுவயது முதலே மதப்பற்றோடு வளர்ந்தார். கிருஸ்த்துவத்தை உலகம் முழுவதும் பரப்ப இங்கிலாந்தில் உருவாக்கப்பட்ட லண்டன் மிஷினரி சொசைட்டி என்கிற அமைப்பின் மூலம் இந்தியாவுக்கு 30 மத போதகர்கள் இந்தியாவுக்கு அன்னைமேரி என்கிற கப்பலில் புறப்பட்டனர். கடலில் ஏற்பட்ட புயல் காற்றில் சிக்கி மற்றொரு கப்பலுடன் மோதி விபத்துக்குள்ளானது.

**குறிப்பு**

இரண்டு கப்பல்களில் பயணம் செய்த நூற்றுக்கணக்கானவர்கள் டால்பீன்களுக்கு இறையாகினர். 6 பேர் மட்டும்மே தப்பினர். அதில் ராபர்ட் கால்டுவெல்லும் ஒருவர். பின்னர் வேறு கப்பல் வந்து உதவிச்செய்ய 1838 ஜனவரி 8ந்தேதி சென்னை துறைமுகத்தில் வந்து இறங்கினார் கால்டுவெல்.

தமிழகத்தில் அவர் சென்ற இடங்களில் எல்லாம் புறக்கணித்தனர் மக்கள். அதற்கு காரணம் மொழி அறியாமை. இதனால் ஒரு சமூக மக்களிடம் உரையாட வேண்டும்மென்றால் அந்த சமூக மக்களின் தாய்மொழியில் உரையாடினால் தான் அம்மக்களுடன் நெருக்கம் ஏற்படும் என்பதை உணர்ந்த கால்டுவெல் தமிழை கற்க துவங்கினார். கல்லூரியில் படித்த காலத்தில் தனது பேராசிரியர் சாண்ட்போர்டு, கற்பிக்கும் போது கூறிய மொழி ஆராய்ச்சி பற்றிய தகவல்கள் மதத்தை உருவாக்க தமிழகம் வந்து தங்கிய போது உதவியது.

சென்னையில் இருந்து சிதம்பரம், தஞ்சை, திருச்சி, கன்னியாகுமரி, திருநெல்வேலி என கால்நடையாகவே தமிழகத்தை வலம் வந்தார். இறுதியாக திருநெல்வேலி அடுத்த இடையான்குடி என்கிற இடத்தில் நிரந்தரமாக தங்கிய கால்டுவெல் 1847ல் இடையான்குடியில் சர்ச் உருவாக்கி சமயப்பணியை ஆரம்பித்தார். அப்போது ஆரிய – திராவிட மோதல் அதிகமாக நடைபெற்று வந்த சமயம். மொழிகள் அனைத்தும் ஆரிய மொழிக்குடும்பத்தில் இருந்து வந்தது என்ற கருத்து வைக்கப்பட்டது. அப்போது சென்னையில் பணியாற்றிய எல்லிஸ் என்கிற ஆங்கிலேய அதிகாரி, தமிழ், தெலுங்கு, மலையாளம், கன்னடம் போன்றவை ஆரிய மொழிக்குடும்பத்தை சார்ந்தவயைல்ல. அது தனி மொழிக்குடும்பத்தை சேர்ந்தது என்றார். அதனை அடிப்படையாக வைத்துக்கொண்டு கால்டுவெல் தமிழராய்ச்சி பணியும் செய்தார். 15 ஆண்டுகளாம் மொழி ஆராய்ச்சி செய்து ஆவண தரவுகளோடு ஒரு நூல் எழுதி வெளியிட்டார்.

திராவிட மொழிகளின் ஒப்பிலங்கணம் என்கிற நூலை ஆங்கிலத்தில் எழுதி 1856ல் வெளியிட்டார் கால்டுவெல். அந்த நூலே திராவிடர்களை உலகம் முழுக்க அறிய உதவியது. அதோடு, குமரி கண்டம் என்கிற ஒரு கண்டம் இருந்தது. அங்கு வாழ்ந்த தமிழ் மக்களே இந்தியா முழுமைக்கும் பரவியிருந்தனர். உலகம் முழுக்கயிருந்த மக்களுடன் குமரி கண்ட மக்கள் தொடர்புகளை வைத்திருந்தனர், குமரி கண்டத்தை கடல்நீர் அழித்தபோது அங்கிருந்த தப்பிய மக்கள் உலகின் பல்வேறு நாடுகளுக்கு தப்பி சென்று வாழ்ந்து, சந்ததியை உருவாக்கினர் என ஆய்வு தரவுகளோடு அறிவித்தார் கால்டுவெல்.

திருநெல்வேலி மாவட்ட அரசியல் மற்றும் பொதுவரலாறு என்கிற நூலையும் எழுதியுள்ளார் கால்டுவெல். இந்த நூலை அப்போதுயிருந்த சென்னை ராஜஸ்தானியை நிர்வாகம் செய்துவந்த ஆங்கிலேய அரச நிர்வாகம்மே வெளியிட்டது. கால்டுவெண், சங்க இலக்கியம், இலக்கண

நூல்கள் என அனைத்தையும் வாசித்தார். நாகர்கோவிலில் வாழ்ந்த மால்டா என்பவரின் மகளான எலிசாவை திருமணம் செய்துக்கொண்டார். இந்த தம்பதிக்கு இரண்டு மகள், ஒரு மகன் என பிறந்தனர். 1891 ஆகஸ்ட் 28ந்தேதி உடல் நலிவுற்று இறந்தார்.

## 11.3 ஜீயூ போப்

ஜி. யு. போப் கனடாவின் பிரின்ஸ் எட்வெர்ட் தீவ என்னுமிடத்தில் ஜான் போப், காதரீன் யூக்ளோ போப் ஆகியோருக்கு பிறந்தார் போப். ஜீயார்ஜ் யூக்ளோ என்பது போப்பின் இயற்பெயர். தந்தையாரின் வாணிபத்திற்காக எட்வர்ட் தீவு சென்றிருந்த குடும்பம், போப்பின் குழந்தைப் பருவத்திலேயே 1826 ஆம் ஆண்டு இங்கிலாந்துக்கு குடும்பத்துடன் திரும்பியது.19 வயது வரை ஹாக்ஸ்டன் கல்லூரியில் கல்வி பயின்றார். இங்கிலாந்து பல்கலைக்கழகம் ஒன்றில் 1885 முதல் 1908 வரை தமிழ் மற்றும் தெலுங்கு கற்பிக்கும் பேராசிரியராகப் பணியாற்றினார். 1886 ஆம் ஆண்டு திருக்குறளை ஆங்கிலத்தில் மொழிபெயர்த்தார். புறப்பொருள் வெண்பா மாலை, புறநானூறு, திருவருட்பயன் போன்ற நூல்களை பதிப்பித்தார். தமிழ் மீது பெரும் பற்று கொண்ட இவர் நாலடியார், திருவாசகம் ஆகியவற்றையும் ஆங்கிலத்தில் மொழிபெயர்த்தவர்.

**தமிழ்நாட்டிற்கு வருகை:** விவிலிய நூற்கழகத்தைச் சேர்ந்து சமயப்பணி புரிவதற்காக 1839 இல் தமிழ் நாட்டிற்கு வந்தார். கப்பலில் பயணம் செய்த எட்டு மாதங்களிலேயே தமிழை நன்கு கற்றார். சென்னைக்கு வந்த போப் சாந்தோம் பகுதியில் தங்கினார். வெஸ்லியன் சங்கம் சார்பாக சென்னை வந்த போப், சென்னையில் இங்கிலாந்து திருச்சபையில் சேர்ந்தார். அங்கு 'குரு' பட்டம் பெற்றார். எஸ்.பி.ஜி எனும் நற்செய்திக் கழகத்தின் தொண்டராக ஏற்றுக் கொள்ளப்பட்டார். அச்சங்கத்தால் சாயர்புரம் சிற்றூருக்கு சமயத்தொண்டுக்காக அனுப்பி வைக்கப்பட்டார்

**சாயர்புரத்தில்:** தூத்துக்குடிக்கு அருகே உள்ள சாயர்புரத்தில் தங்கியிருந்த அவர் ஆரியங்காவுப் பிள்ளை , இராமானுசக் கவிராயரிடத்திலும் தமிழ் இலக்கண இலக்கியங்களைக் கற்றார். அருகில் உள்ள செந்தியம்பலம் கிராமத்தை சேர்ந்த நம்மாழ்வார் என்பவர் போப் உடன் நட்பாகி ஞான சிகாமணி என்று தன் பெயரை மாற்றி கிறித்துவரானார். அதனால் ஒரு துவக்க பள்ளிக்கு அவர் பெயரை சூடினார் போப். தமிழ் தவிர தெலுங்கு, மற்றும் சமஸ்கிருதம் ஆகிய மொழிகளையும் கற்றுத் தேர்ந்தார். போப்பின் சாயர்புர பணி சமயப்பணி, கல்விப்பணி என இரு பகுதிகள் கொண்டது. 1849 ஆம் ஆண்டு திருமணம் செய்துகொண்ட போப் பின் இங்கிலாந்து சென்றார்.

**தஞ்சாவூரில்:** 1851 ஆம் ஆண்டு தன் மனைவியுடன் தமிழகம் திரும்பினார். எட்டு ஆண்டுகள் தஞ்சாவூரில் சமயப்பணியை தொடர்ந்தார்.

இந்த கால கட்டத்தில் புறநானூறு, நன்னூல், திருவாசகம், நாலடியார் போன்ற நூல்களை கற்றார். சில ஆங்கில மொழி இதழ்களில் தமிழ் குறித்த ஆய்வுக் கட்டுரைகளையும் எழுதினார். போப்பின் தஞ்சாவூர் பணி சமயப்பணி, கல்விப்பணி, தமிழ்ப்பணி என முப்பரிமாணம் கொண்டது.

**உதகமண்டலத்தில்:** தஞ்சையில் கிறித்துவத்திற்கு மதம் மாறிய பின்னர் சாதி உயர்வு தாழ்வுகளை மறக்காத உயர் சமூகத்தைச் சேர்ந்தோராகக் கருதப்பட்டோர் தங்களுக்கு முதலிடம் கேட்டனர். போப் இறைவன் முன்னிலையில் அனைவரும் சமம் என்றார். அவரது கருத்து முதலிடம் கேட்டோரால் ஏற்கப்படவில்லை. கிறித்துவ சபையான நற்செய்திக் கழகத்தாரும் உயர் சமூகத்தைச் சேர்ந்தோராகக் கருதப்பட்டவர்களைச் சார்ந்து நின்றதால், போப் தமது 16 வருட நற்செய்திக் கழகத் தொண்டர் பணியிலிருந்து விலகி கிறித்துவ சங்கங்களின் சார்பின்றி அவர்களது பொருள் உதவியின்றி தனிப்பட்ட முறையில் சமயப் பணியாற்றும் நோக்குடன், போதிய பொருளின்றி தஞ்சையிலிருந்து மனைவி மற்றும் ஐந்து மக்களுடன் மாட்டு வண்டியில் ஏறி 24 நாட்கள் பயணம் செய்து உதகமண்டலம் சென்றார். உதகையில் ஐரோப்பிய மாணவர்களுக்கு ஆசிரியராக அமர்ந்து பாடம் சொன்னார், பின்னர் உதகையில் சிறந்த பள்ளியை உருவாக்கினார், சிறைத் தண்டனை பெற்றிருந்த ஐரோப்பிய குற்றவாளிகளைக் கண்டு பேசுவார். இடைவிடாது பழைய தமிழ்நூல்களைக் கற்றுவந்தார். பழைய ஏட்டுச் சுவடிகளைத் தேடிச் சேகரித்தார். உதகையில் அவரது பணிக்காக இங்கிலாந்தின் கந்தர் புரி அத்தியட்சர் 'மறை நூற் புலவர்' எனும் பட்டம் அளித்தார்.

**பெங்களூரில்:** 1871இல் சில சூழல் காரணமாக பெங்களூர் சென்று அங்கு கல்விப் பணியும் சமயப்பணியும் ஆற்றினார். அங்கு உடல் நலம் குன்றியதால் 1882இல் இங்கிலாந்து திரும்பினார்.

### தமிழ்த் தொண்டுகள்

- இங்கிலாந்து பல்கலைக்கழகம் ஒன்றில் 1885 முதல் 1908 வரை தமிழ் மற்றும் தெலுங்கு கற்பிக்கும் பேராசிரியராக பணியாற்றினார்.
- 1886 ஆம் ஆண்டு திருக்குறளை ஆங்கிலத்தில் மொழிப்பெயர்த்தார்.
- புறப்பொருள் வெண்பா மாலை, புறநானூறு, திருவருட்பயன் போன்ற நூல்களை பதிப்பித்தார்.
- தமிழ் மீது பெரும் பற்று பெற்ற அவர் நாலடியார், திருவாசகம் ஆகியவற்றையும் ஆங்கிலத்தில் மொழிபெயர்த்தவர்.

## 11.4 இராபர்ட் -டி-நொபிலி

இத்தாலி நாட்டில் பிறந்து, 1606இல் தமிழ்நாடு வந்து தமிழும் வடமொழியும் கற்றார் நொபிலி. காவியும் பூணூலும் அணிந்து மரக்கறி உணவுண்டு, தத்துவ போதகர் என்று தம் பெயரை மாற்றி, தம்மை

இத்தாலியப் பிராமணர் என்று கூறிக் கொண்டார். நூற்றுக்கணக்கான உயர் சாதி இந்துக்களைக் கிறித்தவராக்கினார். திருமலை நாயக்கரின் நண்பரான பின், சில ஆண்டுகள் கழித்து இலங்கையும் சென்று வந்தார். 1647இல் மயிலாப்பூரில் மறைந்தார்.

'முதல் உரைநடை நூலை'த் தமிழில் எழுதிய பெருமை இவரையே சாரும். சமயச் சார்புடைய, வடசொல் கலந்த மேனாட்டு மொழி கலந்த ஒரு கொச்சை மொழியில் பல நூல்கள் எழுதினார். அச்சேறாத காரணத்தால் அவை அழிந்தன. பிற மதங்களைக் கண்டிப்பது இவர் காலத்தில் நிலவியதை அறிகிறோம். ஞானோபதேச காண்டம், மந்திர மாலை, ஆத்தும நிர்ணயம், தூஷணதிக்காரம், சத்திய வேத இலட்சணம், சகுண நிவாரணம், பரமசூட்சும அபிப்ராயம், கடவுள் நிர்ணயம், புனர்ஜென்ம ஆட்சேபம், நித்ய ஜீவன சல்லாபம், தத்துவக் கண்ணாடி, ஏசுநாதர் சரித்திரம், தவசுச் சதகம், ஞானதீபிகை, நீதிச்சொல், அநித்திய நித்திய வித்யாசம், பிரபஞ்ச விரோத வித்யாசம் முதலிய 17 நூல்களை இயற்றியுள்ளார்.

தமிழகத்தில் அவர் காலத்தில் உயர் இனத்தவராகக் கருதப்பட்டு வந்த பிராமணர்களைத் தம் சமயத்தில் ஈடுபடுமாறு செய்வதையே தலையாய குறிக்கோளாகக் கொண்டார். காவியுடையும் பூணூலும் அணிந்தார். புறத்தோற்றத்தில் தமிழ்த்துறவியாக மாற்றம் கொண்டாலும் அகவுணர்வில் சமயக்கோட்பாடுகளினின்று சிறிதும் வழுவவில்லை. தாம் அணிந்திருந்த ஐம்புரிகள் தமதிரித்துவத்தையும், இரண்டு வெள்ளிப் புரிகள் கிறிஸ்து பிரானின் உடலையும் உயிரையும் குறித்தனவாகக் கூறினார்.

வேதங்கள், புராணங்கள் ஆகியவற்றை ஆய்ந்தறிய வடமொழி, தமிழ், தெலுங்கு ஆகிய மொழிகளில் தேர்ச்சி பெற்றார். தமிழில் நாற்பது உரைநடை நூல்கள், மூன்று கவிதை நூல்களையும் இயற்றியுள்ளார். இவற்றில் ஞானோபதேச காண்டம், மந்திர மாலை, ஆத்தும நிர்ணயம், தத்துவக் கண்ணாடி, சேசுநாதர் சரித்திரம், ஞான தீபிகை, நீதிச்சொல், புனர்ஜென்ம ஆக்ஷேபம், தூஷண திக்காரம், நித்திய சீவன சல்லாபம், கடவுள் நிர்ணயம், அர்ச். தேவமாதா சரித்திரம், ஞானோபதேசக் குறிப்பிடம், ஞானோபதேசம் ஆகிய நூல்கள் குறிப்பிடத்தக்கவை. இவற்றைவிட சமஸ்கிருதத்தில் எட்டு நூல்கள், அதிலே ஒன்றுக்குப் பெயர் "கிறிஸ்து கீதை", நான்கு தெலுங்கு நூல்கள் ஆகியவற்றையும் எழுதினார்.

**உங்கள் முன்னேற்றத்தைச் சரிபார்க்கவும்**

1. திருவாசகத்தை ஆங்கிலத்தில் மொழிப்பெயர்த்தவர் யார்?
3. முதல் உரைநடை நூலைத் தமிழில் எழுதியவர் யார்?

## 11.5 உங்கள் முன்னேற்றத்தைச் சரிபார்க்கும் வினாக்களுக்கான விடைகள்

குறிப்பு

1. திருவாசகத்தை ஆங்கிலத்தில் மொழிப்பெயர்த்தவர் ஜீயூ. போப் ஆவார்.
2. முதல் உரைநடை நூலைத் தமிழில் எழுதியவர் இராபர்ட் - டி - நொபிலி ஆவார்.

## 11.6 சுருக்கவுரை

- திருநெல்வேலி மாவட்ட அரசியல் மற்றும் பொதுவரலாறு என்கிற நூலையும் எழுதியுள்ளார் கால்டுவெல். இந்த நூலை அப்போதுயிருந்த சென்னை ராஜஸ்தானியை நிர்வாகம் செய்துவந்த ஆங்கிலேய அரச நிர்வாகம்மே வெளியிட்டது. கால்டுவெண், சங்க இலக்கியம், இலக்கண நூல்கள் என அனைத்தையும் வாசித்தார். நாகர்கோவிலில் வாழ்ந்த மால்டா என்பவரின் மகளான எலிசாவை திருமணம் செய்துக்கொண்டார். இந்த தம்பதிக்கு இரண்டு மகள், ஒரு மகன் என பிறந்தனர். 1891 ஆகஸ்ட் 28ந்தேதி உடல் நலிவுற்று இறந்தார்.

- ஜீயூ. போப் இங்கிலாந்து பல்கலைக்கழகம் ஒன்றில் 1885 முதல் 1908 வரை தமிழ் மற்றும் தெலுங்கு கற்பிக்கும் பேராசிரியராக பணியாற்றினார்.

- 1886 ஆம் ஆண்டு திருக்குறளை ஆங்கிலத்தில் மொழிப்பெயர்த்தார்.

- புறப்பொருள் வெண்பா மாலை, புறநானூறு, திருவருட்பயன் போன்ற நூல்களை பதிப்பித்தார்.

- தமிழ் மீது பெரும் பற்று பெற்ற அவர் நாலடியார், திருவாசகம் ஆகியவற்றையும் ஆங்கிலத்தில் மொழிபெயர்த்தவர்.

- இராபர்ட் - டி - நொபிலி தமிழகத்தில் அவர் காலத்தில் உயர் இனத்தவராகக் கருதப்பட்டு வந்த பிராமணர்களைத் தம் சமயத்தில் ஈடுபடுமாறு செய்வதையே தலையாய குறிக்கோளாகக் கொண்டார். காவியுடையும் பூணூலும் அணிந்தார். புறத்தோற்றத்தில் தமிழ்த்துறவியாக மாற்றம் கொண்டாலும் அகவுணர்வில் சமயக்கோட்பாடுகளினின்று சிறிதும் வழுவவில்லை. தாம் அணிந்திருந்த ஐம்புரிகள் தமதிரித்துவத்தையும், இரண்டு வெள்ளிப் புரிகள் கிறிஸ்து பிரானின் உடலையும் உயிரையும் குறித்தனவாகக் கூறினார்.

## 11.7 முக்கிய கருத்துப்படிமங்கள்

குறிப்பு

- கால்டுவெல்
- ஜீயூ போப்
- இராபர்ட் - டி – நொபிலி

## 11.8 சுயமதிப்பீட்டு பயிற்சி வினாக்கள்

**குறுகிய வினாக்களுக்கு விடையளிக்கவும்**

1. கால்டுவெல் பற்றி மதிப்பிடுக?
2 இராபர்ட் - டி - நொபிலி பற்றி சிறு குறிப்பு வரைக?

**விரிவான வினாக்களுக்கு விடையளிக்கவும்**

1. ஜீயூ போப்பின் தமிழ்பணியைப் பற்றிக் கட்டுரை வரைக?

## 11.9 மேலும் படிக்க


- ஐயங்கார்,சீனிவாச.். வு (2001), *தமிழர்களின் வரலாறு: ஆரம்ப காலத்திலிருந்து 600 கி.பி வரை.* டெல்லி
- கிருஸ்ணசுவாமி.அ, (1977) விஜயநகரபப் பேரரசின் வரலாறு (கிபி1525 வரை) தமிழ்நாட்டுப் பாடநூல் நிறுவனம், அண்ணாமலைநகர்.
- சர்மா,சு.ளு. (2006). *பண்டைய இந்தியாவின் முந்தைய காலம்.* ஆக்ஸ்.்.போர்ட் யுனிவர்சிட்டி பிரஸ்.
- சாஸ்திரி, ராமசாமி. (2002) *தமிழர்கள்: மக்கள், அவர்களின் வரலாறு மற்றும் கலாச்சாரம்.* புதுடெல்லி, காஸ்மோ பப்ளிகேஷன்ஸ்
- சிராஜீத்தின, (2010), *தமிழ்நாட்டு வரலாறு (கி.பி. 1987 வரை),* பாவை பப்ளிகேசன், சென்னை
- தேவநேயப்பாவணர். (1992) *பண்டைத் தமிழர் நாகரிகமும் பண்பாடும்,* கழக வெளியீடு சென்னை
- மாதவன்,சித்ரா, (2005), *தமிழ்நாட்டின் வரலாறு மற்றும் கலாச்சாரம்: தொகுதி-1 (கி.பி.1310 வரை).* டெல்லி

குறிப்பு

# அலகு XII
# பிராமணர் அல்லாதோர் சங்கம் - காரணம் - நீதிக் கட்சி – திராவிட இயக்கம்

## அலகு XII பிராமணர் அல்லாதோர் சங்கம்



## 12.0 முன்னுரை

திராவிட இயக்கத்திற்கு 1940 ஆம் ஆண்டுகள் முக்கிய திருப்பத்தை ஏற்படுத்திய காலமாக அமைந்தன. 1944 ஆம் ஆண்டு திராவிடர் கழகம் அமைக்கப்பட்டது. 1949 ஆம் ஆண்டு திராவிட முன்னேற்றக் கழகம் உதயமானது. இந்த மாற்றங்களால், விரிந்த மக்கள் செல்வாக்கை திராவிட இயக்கம் பெற்றது. திராவிடர் கழகம் தோன்றுவதற்கு முன்னதாக ஒரு முயற்சி மேற்கொள்ளப்பட்டது. மிகவும்

பலவீனப்பட்டு, தேய்ந்து கொண்டிருந்த நீதிக்கட்சியை தூக்கி நிறுத்தும் முயற்சிகள் நடந்தன. சட்டரீதியாக பல சீர்திருத்த நடவடிக்கைகளை ஆட்சியிலிருந்த போது கொண்டு வந்தபோதும், நீதிக்கட்சி தனது செல்வாக்குத் தளத்தை விரிவாக்கிட இயலவில்லை. சமூகத்தின் மேல்தட்டு செல்வந்தர்கள், நிலவுடைமையாளர்கள் , ஜமீன்தார்கள் போன்றவர்களைக் கொண்ட கட்சியாக இருந்ததால், அடித்தட்டு மக்களை அது கவர இயலவில்லை. இந்தக் குறைபாடு நீடித்த நிலையில், ஆங்கிலேய ஆட்சி மீதான விசுவாசத்தையும், நேசத்தையும் நீதிக்கட்சியின் தலைமை கைவிடவில்லை. தமிழகத்திலும், நாட்டின் அனைத்துப் பகுதிகளிலும் விடுதலைக்கான போராட்டம் தீவிரமான நிலையில், நீதிக்கட்சி ஆங்கிலேய அடக்குமுறை அரசுடன் நட்பும், நெருங்கிய உறவும் கொண்டிருந்தது. இந்த நிலைபாடும் மக்களிடமிருந்து நீதிக்கட்சி, தனிமைப்படுவதற்கு முக்கியக் காரணமாக அமைந்தது.

## 12.1 நோக்கம்

- பிராமணா் அல்லாதோா் சங்கமத்தின் கொள்கைகளைப் பற்றி அறிந்துக் கொள்ள முடிகின்றது
- நீதிக் கட்சியின் கட்சியின் ஆட்சி முறையைப் பற்றி அறிந்துக் கொள்ள முடிகின்றது
- திராவிட இயக்குத்தின் தமிழ் வளர்ச்சியைப் பற்றி அறிந்துக் கொள்ள முடிகின்றது

## 12.2 பிராமணா் அல்லாதோா் சங்கம்

1912-ல் டாக்டர் சி.நடேசனாரின் முயற்சியால் தோற்றுவிக்கப்பட்டது மெட்ராஸ் யுனைடெட் லீக் அதுவே 1913 முதல் பிராமணர் அல்லாதாரைக் குறிக்க திராவிடர் சங்கம் என்று புதுப் பெயர் பெற்றது. 1916-ல் டி.எம்.நாயர், தியாகராயர் உள்ளிட்டோர் முன்னின்று தொடங்கிய தென்னிந்திய நலவுரிமைச் சங்கம், நீதிக் கட்சியாக அழைக்கப்பெற்றது. நீதிக் கட்சி திராவிடர் கழகம் ஆனது. திராவிடர் கழகத்திலிருந்து திமுகவும் அதிலிருந்து அதிமுகவும் உருவாயின. ஒட்டுமொத்தமாக இவற்றை 'திராவிடர் இயக்கம்' என்று ஒரு பொதுச் சொல்லால் குறிப்பதாகக் கொண்டால், இழிவுகள் பலவற்றிலிருந்து இந்தத் திராவிடர் இயக்கமே நம் மக்களை மீட்டெடுத்தது. திராவிடர் என்ற பெயர் மாற்றமே திராவிட இயக்கத்தின் சாதனை என்று சொல்லலாம். ஏனென்றால், 1901-ல் எடுக்கப்பட்ட சென்னை மாகாணத்து மக்கள்தொகைக் கணக்கில் 'பிராமணர்கள் 3.4ழு, சூத்திரர்கள் 94.3ழு' என்று பிராமணர் அல்லாதாரை அரசாங்கமே சூத்திரர்கள் என்று குறிப்பிடும் இழிநிலைதான் அன்று இருந்தது. இந்த நிலையில்தான் பெரியார் சூத்திரன் என்றால் ஆத்திரம் கொண்டடி என்ற பெருமுழக்கத்தை வீதிகளில் எல்லாம் ஒலிக்கச் செய்தார். பின்னதாக,

நீதிக் கட்சி ஆதரவு பெற்ற டாக்டர் சுப்பராயன் அமைச்சரவை சூத்திரன் என்ற இழி பட்டத்தைப் பதிவேடுகளிலிருந்து ஒழித்தது.

குறிப்பு

## 12.3 காரணம்

இந்திய சமூக அமைப்பில் வட இந்திய பிராமணர்களுடன் ஒப்பிடுகையில் சென்னை மாகாணத்தில் தென்னிந்திய பிராமணர்கள் உயரிய இடத்தைப் பெற்றிருந்தனர். மொத்த மக்கள் தொகையில் 3.2 விழுக்காடே இருந்த தமிழ் பிராமணர்கள் 1850களில் இந்தியர்கள் வகிக்கக்கூடிய அரசு பதவிகளில் பெருமளவில் இடம்பெறத் தொடங்கினர். இதன் மூலம் அவர்களது அரசியல் செல்வாக்குப் பெருகியது. 19ம் நூற்றாண்டிலும் 20ம் நூற்றாண்டின் துவக்கத்திலும் இந்திய நிருவாகப் பணிகள் மற்றும் நகர்ப்புறங்களில் புதிதாக உருவான தொழில்களிலும் பிராமணர்களே ஆதிக்கம் செலுத்தினர். பிராமணர் சாதியில் கல்வியறிவும் ஆங்கில அறிவும் அதிகமாக இருந்ததே இந்த முன்னேற்றத்துக்கு முக்கிய காரணம். இதனால் பிராமணரல்லாதோருக்கும் பிராமணருக்குமிடையே இருந்த அரசியல், சமூக, மற்றும் பொருளாதார ஏற்றத்தாழ்வுகள் அதிகமாயின. அன்னி பெசண்டின் ஹோம் ரூல் இயக்கத்தால் இந்தப் பாகுபாடு மேலும் அதிகரித்தது.

1912 இல் சென்னை மாகாணத்தில் சில குறிப்பிட்ட பணிகளில் பல்வேறு சாதியினரின் விகிதம் பின்வரும் பட்டியலில் தரப்பட்டுள்ளது. பிராமணர்களின் இந்த ஆதிக்கம் சென்னை மாகாண சட்டமன்றத்திலும் காணப்பட்டது. 1910–20 காலகட்டத்தில் ஆளுனரால் சட்டமன்றத்துக்கு நியமிக்கப்பட்ட ஒன்பது நிருவாக உறுப்பினர்களில் எட்டு பேர் பிராமணர்கள். நியமிக்கப்பட்டவர்களில் மட்டுமல்லாது உள்ளாட்சி அமைப்புகளால் தேர்ந்தெடுக்கப்பட உறுப்பினர்களிலும் பெரும்பான்மையினர் பிராமணர்கள். இந்திய தேசிய காங்கிரசின் சென்னை மாகாணக் குழுவிலும் பிராமணர்களே ஆதிக்கம் செலுத்தினர். சென்னை மாகாணத்தில் அப்போது வெளி வந்து கொண்டிருந்த 11 முக்கிய இதழ்களில் நான்கு (தி இந்து, இந்தியன் ரெவியூ, சுதேசமித்திரன் மற்றும் ஆந்திரப் பத்திரிக்கா) பிராமணர்களால் நடத்தப்பட்டவை. மேலும், அன்னி பெசண்டின் நியூ இந்தியா பிராமண ஆதரவு நிலைப்பாட்டைக் கொண்டது. மீதமிருந்த ஆறில் இரண்டு பிரித்தானிய ஆதரவு இதழ்கள் (மெட்ராஸ் மெயில், மெட்ராஸ் டைம்ஸ்) மேலும் நான்கு எவாஞ்செலிக்கக் கிறித்தவப் பிரச்சார இதழ்கள். இந்த ஆதிக்கம் சரியனறு எனப் பிராமணரல்லாத தலைவர்கள் துண்டறிக்கைகளிலும் சென்னை ஆளுனருக்கு எழுதிய திறந்த கடிதங்களிலும் தெரிவித்து வந்தனர். இவற்றுள் 1895 இல் "∴பேர்பிளே" என்று தன்னை அழைத்துக்கொண்ட ஒரு பெயரிலி எழுத்தாளர் எழுதிய துண்டறிக்கைக் குறிப்பிடத்தக்கது.

குறிப்பு

20ம் நூற்றாண்டின் இரண்டாம் பத்தாண்டில் சென்னை மாகாணத்தில் பிராமணர்கள் மூன்று அரசியல் குழுக்களாகப் பிரிந்திருந்தனர். அவை - சேத்துப்பட்டு ஐயர்கள் மற்றும் வெம்பாக்கம் ஐயங்கார்களைக் கொண்ட மயிலாப்பூர் குழு, தி இந்து உரிமையாளர் கஸ்தூரி ரங்க ஐயங்கார் தலைமையில் செயல்பட்ட எழும்பூர் குழு மற்றும் சி. ராஜகோபாலச்சாரியின் சேலம் தேசியவாதிகள் குழு ஆகியவை. இம்மூன்றுடன் போட்டியிடும் வகையில் நான்காவதாகப் பிராமணரல்லாதோர் குழு ஒன்று தோன்றி நீதிக்கட்சியாக உருவெடுத்தது.

ஆட்சியில் பங்கேற்று நேரடி மாற்றங்களைக் கொண்டுவந்தது மட்டும் அல்லாமல், எல்லாத் தளங்களிலும் மாற்றுகளை உருவாக்க முற்பட்டது திராவிட இயக்கம். டாக்டர் சி.நடேசன், பிராமணர் அல்லாத மாணவர்கள் தங்கிப் படிக்க சென்னையில் 1916-ல் உருவாக்கிய திராவிட சங்க விடுதியை (னுசயஎனையைெ யுளளழஉயைவழைெ ர்ழளவநட) ஓர் உதாரணமாகச் சொல்லலாம். மாணவர் விடுதிகளில்கூடப் பாகுபாடுகள் நிறைந்திருந்த காலத்தில் மாற்றாகத் தொடங்கப்பட்ட மாணவர் விடுதி இது. பிற்காலத்தில் இந்திய நிதியமைச்சராக ஆகவிருந்த ஆர்.கே.சண்முகம், பாரிஸ்டர் ரங்கராமானுஜம், அண்ணாமலைப் பல்கலைக்கழகத்தில் துணை வேந்தர்களாக விளங்கிய டி.எம்.நாராயணசாமிப் பிள்ளை, எஸ்.ஜி.மணவாள ராமானுஜம் மற்றும் சடகோப முதலியார், பிற்காலத்தில் சென்னை உயர் நீதிமன்ற நீதிபதியாக வந்த சுப்பிரமணிய நாடார் போன்றவர்களெல்லாம் இந்த விடுதியில் தங்கிப் படித்தவர்கள். அந்தக் காலகட்டத்தில் உத்தியோகத் துறையில் எங்கும் பிராமணர் ஆதிக்கம் பிராமணர் அல்லாதாருக்கு முட்டுக்கட்டை என்ற நிலை இருந்தது. எடுத்துக்காட்டாக 1912-ல் சென்னை மாகாணத்தின் நிலை என்ன துணை ஆட்சியர்களில் 55மூ, சார்பு நீதிபதி 82.5மூ, மாவட்ட முன்சீப்களில் 72.6மூ பிராமணர்கள். இந்தப் பதவிகளில் இந்து பிராமணர் அல்லாதார் முறையே 21.5மூ, 16.7மூ, 19.5மூ. கடப்பை மாவட்டத்தில் வருவாய்த் துறையில் உயர் பதவி வகித்த டி.கிருஷ்ணாராவ் ("ஹஸுர் செரஸ்தார் - மாவட்ட ஆட்சியர் பதவிக்கு நிகரானது) என்பவரின் உறவினர்கள் 116 பேர் அந்தத் துறையில் இருந்தனர்.

சென்னை சட்ட மன்றத்தில் 1914-ல் சட்ட மன்ற உறுப்பினர் குன்சிராமன் நாயர் எழுப்பிய வினாவுக்குக் சென்னைப் பல்கலைக்கழகத்தில் பதிவுசெய்யப்பட்ட 650 பட்டதாரிகளில் பிராமணர்கள் 452 பேர், பிராமணர் அல்லாத இந்துக்கள் 12 பேர், பிற இனத்தவர் 74 பேர் கல்வி, வேலைவாய்ப்பு நிலை தான். உணவு விடுதிகளைப் பெரும்பாலும் பிராமணர்களே நடத்திவந்தனர். பிராமணர் அல்லாதார் உள்ளே சென்று உட்கார்ந்து சாப்பிட முடியாது. எடுப்புச் சாப்பாடுதான் வாங்கிச் சென்று வெளியே சாப்பிட வேண்டும். சென்னையில் அன்றைய மவுன்ட் ரோடிலும், ஜார்ஜ் டவுனிலும் இருந்த உணவு விடுதிகளில், 'பஞ்சமர்களும், நாய்களும், குஷ்டரோகிகளும்

உள்ளே நுழையக் கூடாது' என்று விளம்பரப் பலகைகளை வைத்திருந்தனர். ரயில்வே உணவு விடுதிகளில் பிராமணாள், இதராள் என்று விளம்பரப் பலகை வைக்கப்பட்டு இருந்தது. இது மட்டுமல்ல. இருப்புப் பாதைகள் போடப்பட்டு, ரயில் பயணம் தொடங்கிய காலத்தில், நான்கு வகைப் பெட்டிகள் இருந்தன. அவற்றை நான்கு வருணத்தாரும் தனித்தனியாகப் பயன்படுத்தும்படியாக உத்தரவு பிறப்பிக்க வேண்டும் என இந்து மத வேதியக் கூட்டம் ரயில்வே நிர்வாகத்தைக் கேட்கும் அளவுக்குப் பேதங்கள் மோசமாக இருந்தன.

## 12.4 நீதிக் கட்சி

பரவலாக நீதிக் கட்சி (துரளவஉைந ீயசவல, ஜஸ்டிஸ் கட்சி) என்று அறியப்பட்ட தென்னிந்திய நல உரிமைச் சங்கம் (ளுழரவா ஐனெயைெ டுடைநசயட குநனநசயவழைெ, சவுத் இந்தியன் லிபரல் ∴பெடரேசன்) சென்னை மாகாணத்தில் செயல்பட்ட ஒரு அரசியல் கட்சி. இது 1916 ஆம் ஆண்டு டாக்டர் சி. நடேசனால், டி. எம். நாயர் மற்றும் தியாகராய செட்டி ஆகியோருடன் இணைந்து நிறுவப்பட்டது. சென்னை மாகாணத்தில் தொடர்ச்சியாக நிகழ்ந்த பிராமணரல்லாதோர் மாநாடுகளின் விளைவாக இக்கட்சி உருவாக்கப்பட்டது.

சென்னை மாகாணச் சமூகத்தில் 19ம் நூற்றாண்டின் பிற்பகுதியிலும் 20ம் நூறாண்டின் முற்பகுதியிலும் பிராமணர் மற்றும் பிராமணரல்லாதோருக்கிடையே வகுப்புவாரியாகப் பிரிவினை ஏற்பட்டிருந்தது. பிராமணர்கள், மொத்த மக்கள் தொகையில் தங்கள் சதவிகிதத்தை விட மிக அதிக அளவில் அரசு பணிகளில் இடம் பெற்றிருந்ததும், பிற சாதியினரை அவர்கள் நடத்திய விதமும் இப்பிரிவினைக்கு முக்கிய காரணங்கள். 20ம் நூற்றாண்டின் துவக்கத்தில் பிராமணரல்லாதோருக்காக ஒரு அரசியல் அமைப்பை உருவாக்க நடந்த பல முயற்சிகள் தோல்வியில் முடிவடைந்திருந்தன. நீதிக்கட்சியின் உருவாக்கம் இத்தேவையை நிறைவேற்றியது. இக்கட்சி தன் ஆரம்ப ஆண்டுகளில் பிரித்தானிய இந்தியாவின் சட்டமன்றங்களிலும், பிரித்தானிய ஆட்சியாளர்களிடமும் முறையிட்டு அரசு பணிகள் மற்றும் சட்டமன்றங்களில் பிராமணரல்லாதோருக்கு வகுப்புவாரிப் பிரதிநிதித்துவம் பெற முயற்சி செய்தது.

மாண்டேகு கெம்ஸ்∴போர்ட் அரசியல் சீர்திருத்தங்களின் விளைவாக இந்திய அரசுச் சட்டம், 1919 இயற்றப்பட்டு, சென்னை மாகாணத்தில் இரட்டை ஆட்சி முறை நடைமுறைப்படுத்தப்பட்டது. இம்முறையின் கீழ் 1920ம் ஆண்டு முதலில் நடைபெற்ற தேர்தலில் நீதிக்கட்சி பங்கேற்று வெற்றி பெற்றது. 1920–37 காலகட்டத்தில் இரட்டை ஆட்சி முறையில் ஆட்சி புரிந்த ஐந்து அரசுகளில் நான்கு நீதிக்கட்சி அரசுகளே. சென்னை மாகாணத்தில் நீதிக்கட்சி தேசியவாத இந்திய தேசிய காங்கிரசு கட்சிக்கு அரசியல் மாற்றாகச் செயல்பட்டது.

13 ஆண்டுகள் பதவியில் இருந்த நீதிக்கட்சி 1937 தேர்தலில் காங்கிரசிடம் தோல்வியடைந்தது. இத்தோல்வியிலிருந்து அதனால் மீளமுடியவில்லை. 1938 இல் பெரியார் ஈ. வே. ராமசாமி நீதிக்கட்சியின் தலைவரானார். 1944ல் கட்சியைத் திராவிடர் கழகமாக மாற்றிய ஈ. வே. ராமசாமி, கட்சி தேர்தல்களில் போட்டியிடுவதை நிறுத்தினார். ஆனால் இம்மாற்றத்தை ஏற்காத ஒரு குழுவினர் "நீதிக்கட்சி" என்ற பெயரில் போட்டிக் கட்சி ஒன்றைத் தொடங்கி 1952 தேர்தலில் போட்டியிட்டனர். அதன் பின்னால் அப்பிரிவு மெதுவாகச் செயலிழந்து விட்டது.

பிரித்தானிய இந்திய அரசியலில் நீதிக்கட்சி மைய நீரோட்டத்திலிருந்து விலகித் தனித்தே செயல்பட்டது. பிராமண எதிர்ப்பே இக்கட்சியின் கொள்கைகளின் மையக்கருத்தாக இருந்தது. அன்னி பெசண்டின் ஹோம் ரூல் இயக்கத்தால் பிராமணர்களின் ஆதிக்கம் அதிகரிக்குமென நீதிக்கட்சி கருதியதால் அதனை எதிர்த்தது காங்கிரசின் ஒத்துழையாமை இயக்கத்துக்கு எதிராகவும் செயல்பட்டது. மகாத்மா காந்தி பார்ப்பனியத்தை புகழ்ந்ததால் அவரையும் எதிர்த்தது. தேசியவாதத்தை முன்னிறுத்திய காங்கிரசில் பிராமணர் ஆதிக்கம் அதிகமாக இருந்ததால், காங்கிரசு தலைமையில் நடைபெற்ற இந்திய விடுதலை இயக்கத்தையும் அது ஆதரிக்கவில்லை. பிராமணரல்லாத அனைத்து பிரிவினரின் நலனுக்காகச் செயல்படுவதாக நீதிக்கட்சி கூறினாலும், விரைவில் அது முசுலிம்கள் மற்றும் பட்டியல் பிரிவு மக்களின் ஆதரவை இழந்து விட்டது. பிராமணரல்லாத வெள்ளாள சாதியினரான முதலியார்கள் மற்றும் பிள்ளைகள், பலிஜா நாயுடுகள், பெரி செட்டிகள், காப்புகள், கம்மாக்கள் ஆகியோரின் நலனுக்காக அது செயல்படுவதாக முசுலிம்களும் பட்டியல் பிரிவு மக்களும் குற்றம் சாட்டினர்.

சாதி அடிப்படியில் இட ஒதுக்கீட்டை அறிமுகப்படுத்தியது, கல்வி மற்றும் சமய சீர்திருத்தங்களைக் கொண்டு வந்தது ஆகியவை நீதிக்கட்சி அரசுகளின் குறிப்பிடத் தக்க செயல்கள். நீதிக்கட்சி ஆட்சிகாலத்தில் ஆந்திரப் பல்கலைக்கழகமும், அண்ணாமலைப் பல்கலைக்கழகமும் தொடங்கப்பட்டன. சென்னை நகரின் தற்கால தி. நகர்ப் பகுதி நீதிக்கட்சி அரசுகளால் உருவாக்கப்பட்டது. எதிர்க்கட்சியாக இருந்தபோது 1937–40 இந்தி எதிர்ப்பு போராட்டத்தில் முக்கிய பங்காற்றியது. 1967 இலிருந்து தமிழ் நாட்டை ஆட்சி புரிந்து கொண்டிருக்கும் திராவிட கட்சிகளான திமுக மற்றும் அதிமுக ஆகியவற்றுக்கு நீதிகட்சியும் திராவிடர் கழகமும் கொள்கை மற்றும் அரசியல் ரீதியாக முன்னோடிகளாகக் கருதப்படுகின்றன.

**பிராமணர் - பிராமணரல்லாதோர் பாகுபாடு:** இந்திய சமூக அமைப்பில் வட இந்திய பிராமணர்களுடன் ஒப்பிடுகையில் சென்னை மாகாணத்தில் தென்னிந்திய பிராமணர்கள் உயரிய இடத்தைப் பெற்றிருந்தனர். மொத்த மக்கள் தொகையில் 3.2 விழுக்காடே இருந்த

தமிழ் பிராமணர்கள் 1850களில் இந்தியர்கள் வகிக்கக்கூடிய அரசு பதவிகளில் பெருமளவில் இடம்பெறத் தொடங்கினர். இதன் மூலம் அவர்களது அரசியல் செல்வாக்குப் பெருகியது. 19ம் நூற்றாண்டிலும் 20ம் நூற்றாண்டின் துவக்கத்திலும் இந்திய நிருவாகப் பணிகள் மற்றும் நகர்ப்புறங்களில் புதிதாக உருவான தொழில்களிலும் பிராமணர்களே ஆதிக்கம் செலுத்தினர். பிராமணர் சாதியில் கல்வியறிவும் ஆங்கில அறிவும் அதிகமாக இருந்ததே இந்த முன்னேற்றத்துக்கு முக்கிய காரணம். இதனால் பிராமணரல்லாதோருக்கும் பிராமணருக்குமிடையே இருந்த அரசியல், சமூக, மற்றும் பொருளாதார ஏற்றத்தாழ்வுகள் அதிகமாயின. அன்னி பெசண்டின் ஹோம் ரூல் இயக்கத்தால் இந்தப் பாகுபாடு மேலும் அதிகரித்தது.

1912 இல் சென்னை மாகாணத்தில் சில குறிப்பிட்ட பணிகளில் பல்வேறு சாதியினரின் விகிதம் பின்வரும் பட்டியலில் தரப்பட்டுள்ளது. பிராமணர்களின் இந்த ஆதிக்கம் சென்னை மாகாண சட்டமன்றத்திலும் காணப்பட்டது. 1910–20 காலகட்டத்தில் ஆளுனரால் சட்டமன்றத்துக்கு நியமிக்கப்பட்ட ஒன்பது நிருவாக உறுப்பினர்களில் எட்டு பேர் பிராமணர்கள். நியமிக்கப்பட்டவர்களில் மட்டுமல்லாது உள்ளாட்சி அமைப்புகளால் தேர்ந்தெடுக்கப்பட உறுப்பினர்களிலும் பெரும்பான்மையினர் பிராமணர்கள். இந்திய தேசிய காங்கிரசின் சென்னை மாகாணக் குழுவிலும் பிராமணர்களே ஆதிக்கம் செலுத்தினர். சென்னை மாகாணத்தில் அப்போது வெளி வந்து கொண்டிருந்த 11 முக்கிய இதழ்களில் நான்கு (தி இந்து, இந்தியன் ரெவியூ, சுதேசமித்திரன் மற்றும் ஆந்திரப் பத்திரிக்கா) பிராமணர்களால் நடத்தப்பட்டவை. மேலும், அன்னி பெசண்டின் நியூ இந்தியா பிராமண ஆதரவு நிலைப்பாட்டைக் கொண்டது. மீதமிருந்த ஆறில் இரண்டு பிரித்தானிய ஆதரவு இதழ்கள் (மெட்ராஸ் மெயில், மெட்ராஸ் டைம்ஸ்) மேலும் நான்கு எவாஞ்செலிக்கக் கிறித்தவப் பிரச்சார இதழ்கள். இந்த ஆதிக்கம் சரியனறு எனப் பிராமணரல்லாத தலைவர்கள் துண்டறிக்கைகளிலும் சென்னை ஆளுனருக்கு எழுதிய திறந்த கடிதங்களிலும் தெரிவித்து வந்தனர். இவற்றுள் 1895 இல் "∴பேர்பிளே" என்று தன்னை அழைத்துக்கொண்ட ஒரு பெயரிலி எழுத்தாளர் எழுதிய துண்டறிக்கைக் குறிப்பிடத்தக்கது.

20ம் நூற்றாண்டின் இரண்டாம் பத்தாண்டில் சென்னை மாகாணத்தில் பிராமணர்கள் மூன்று அரசியல் குழுக்களாகப் பிரிந்திருந்தனர். அவை - சேத்துப்பட்டு ஐயர்கள் மற்றும் வெம்பாக்கம் ஐயங்கார்களைக் கொண்ட மயிலாப்பூர் குழு, தி இந்து உரிமையாளர் கஸ்தூரி ரங்க ஐயங்கார் தலைமையில் செயல்பட்ட எழும்பூர் குழு மற்றும் சி. ராஜகோபாலச்சாரியின் சேலம் தேசியவாதிகள் குழு ஆகியவை. இம்மூன்றுடன் போட்டியிடும் வகையில் நான்காவதாகப் பிராமணரல்லாதோர் குழு ஒன்று தோன்றி நீதிக்கட்சியாக உருவெடுத்தது.

குறிப்பு

**வகுப்புவாதமும், பிரித்தானிய ஆட்சியாளர்களும்:** பிராமணரல்லாதோர் இயக்கத்தின் தோற்றம் மற்றும் வளர்ச்சியில் பிரித்தானிய ஆட்சியாளர்களின் பங்குகுறித்து வரலாற்றாளர்களிடையே ஒருமித்த கருத்து இல்லை. காத்லீன் கோ, திராவிட இயக்கத்தின் வளர்ச்சியில் பிரித்தானியர்களுக்குப் பங்கிருந்தாலும் அது தனிப்பட்ட முறையில் தென்னிந்தியாவில் செல்வாக்கு கொண்டிருந்தது என்கிறார். யூஜீன் இர்ஷிக் பிரித்தானிய ஆட்சியாளர்கள் பிராமணரல்லாதோர் இயக்கத்தின் வளர்ச்சியை ஊக்குவித்தாலும், அவ்வளர்ச்சி அவர்களது செயல்களால் மட்டும் நிகழவில்லையெனக் கருதுகிறார். பிராமணரல்லாதோர் இயக்கம் தேசியவாத எதிர்ப்பு இயக்கமாகவே செயல்பட்டது, பிரித்தானிய அரசின் கொள்கைகளால் தான் அது உருவாக்கப்பட்டதைக் குறிக்கிறது என்பது டேவிட் வாஷ்புரூக்கின் கருத்து. வாஷ்புரூக்கின் இக்கூற்று பி. ராஜாராமனால் மறுக்கப்படுகிறது. பிராமணர் மற்றும் பிராமணரல்லாதோர் இடையே நிலவிய சமூகப் பிளவே நீதிக்கட்சியின் உருவாக்கத்துக்குக் காரணம் என்கிறார் ராஜாராமன்.

நீதிக்கட்சியின் வளர்ச்சியில் பிரித்தானியப் பங்குகுறித்து பலதரப்பட்ட கருத்துகள் நிலவினாலும், அது சிறிதளவேனும் இருந்திருக்க வேண்டுமென்று பெரும்பாலான வரலாற்றாளர்கள் ஏற்றுக் கொள்கிறார்கள். 1916 இல் பிராமணரல்லாத தலைவர்கள் வெளியிட்ட கொள்கை அறிக்கையில் இடம்பெற்றிருந்த புள்ளி விவரங்கள் பிரித்தானிய ஆட்சிப்பணி அதிகாரிகள் பொதுப்பணிக் குழுவுக்காகத் தயாரித்தவையே. 20ம் நூற்றாண்டின் ஆரம்பத்தில் வலுப்பெற்ற மயிலாப்பூர் பிராமணர் குழுவின் ஆதிக்கத்தை மட்டுப்படுத்த அரசு அதிகாரிகள் பிராமணரல்லாதோர் பலரை அரசு பணிகளில் நியமிக்கத் தொடங்கினர். 1903ம் ஆண்டு சென்னை ஆளுனர் அம்ட்ஹில் பிரபு சி. சங்கரன் நாயரை சென்னை உயர் நீதிமன்ற நீதிபதியாக நியமித்தது இதற்கு நல்ல எடுத்துக்காட்டு (பாஷ்யம் அய்யங்கார் ஓய்வு பெற்றதால் அக்காலியிடம் உருவாகியிருந்தது). 1912 இல் சர் அலெக்சாந்தர் கார்டியூவின் முயற்சியால் சென்னை அரசுச் செயலகம், அரசுப் பணி நியமனங்களில் பிராமணரல்லாதோர் என்றொரு தனிப்பிரிவை உருவாக்கியது. 1918 இல் இரு பிரிவினருக்கும் தனித்தனியே பட்டியல்கள் உருவாக்கப்பட்டு நியமனங்களில் பிராமணரல்லாதோருக்கு முன்னுரிமை அளிக்கப்படலாயிற்று.

**ஆரம்பகால பிராமணரல்லாதோர் அமைப்புகள்:** பிரித்தானிய இந்தியாவில் மொழிக்குழுக்கள் அடையாள அரசியலில் ஈடுபடுவது பரவலாக இருந்தது. இந்தியாவின் ஒவ்வொரு பகுதியிலும் காங்கிரசு ஆட்சிக்குட்பட்ட விடுதலை இந்தியாவை விடப் பிரித்தானிய ஆட்சியே மேலெனக் கருதிய குழுக்கள் இருந்தன. 1909 இல் பி. சுப்ரமணியம், எம். புருசோத்தம் நாயுடு எனும் இரு வழக்கறிஞர்கள் “சென்னை பிராமணரல்லாதோர் சங்கம்” என்ற அமைப்பை உருவாக்கி அக்டோபர் 1909 க்கு முன்னர் ஆயிரம் பிராமணரல்லாத உறுப்பினர்களைச்

சேர்க்கப்போவதாக அறிவித்தனர். ஆனால் பிராமணரல்லாத மக்களிடையே இதனால் எவ்விதத் தாக்கமும் ஏற்படவில்லை இந்த அமைப்பும் நீர்த்துப் போனது. 1912 இல் சரவணப் பிள்ளை, ஜி. வீராசாமி நாயுடு, துரைசாமி நாயுடு, எஸ். நாராயணசாமி நாயுடு போன்ற பிராமணரல்லாதோர் தலைவர்கள் "சென்னை ஐக்கிய சங்கம்" என்ற அமைப்பை உருவாக்கினர். நடேச முதலியார் இதன் செயலாளராக இருந்தார். இவ்வமைப்பு அரசியலைத் தவிர்த்துச் சமூகப் பணிகளில் மட்டும் ஈடுபட்டது. அக்டோபர் 1, 1912 இல் இவ்வமைப்பு புனரமைக்கப்பட்டு சென்னை திராவிடர் சங்கம் என்று பெயரிடப்பட்டது. சென்னை நகரத்தில் பல கிளைகளைத் தொடங்கிய இச்சங்கத்தின் முக்கிய சாதனை பிராமணரல்லாத மாணவர்களுக்காக ஒரு விடுதியை நிறுவியது. மேலும் இது ஆண்டுதோறும் பிராமணரல்லாத பட்டதாரிகளுக்காக விழாக்களை நடத்தியதுடன், அவர்களது கோரிக்கைகளை முன்வைக்கும் நூல்களையும் வெளியிட்டது.

### 12.4.1 நீதிக்கட்சியின் தோற்றம்

1920களில் எடுக்கப்பட்ட படம் : தியாகராய செட்டி நடுவில் அமர்ந்துள்ளார் (சிறுமிக்கு வலப்புறம் இருப்பவர்). அவருக்கு வலப்புறம் இருப்பவர் ஆற்காடு ராமசாமி முதலியார். பனகல் அரசர், சிங்கம்பட்டி ஜமீன்தார் மற்றும் வெங்கடகிரி அரசர் ஆகியோர் உடனிருக்கின்றனர்.
இந்திய சட்டமன்றத்துக்கான 1916 தேர்தலில் பிராமணரல்லாத வேட்பாளர்களான டி. எம். நாயர் (தெற்கு மாவட்டங்கள் தொகுதி) மற்றும் பனகல் அரசர் (ஜமீன்தார்கள் தொகுதி), பிராமண வேட்பாளர்கள் வி. எஸ். ஸ்ரீனிவாச சாஸ்திரி மற்றும் கே. வி. ரங்கசாமி ஐயங்கார் ஆகியோரால் தோற்கடிக்கப்பட்டனர். அதே ஆண்டு உள்ளாட்சி அமைப்புகள் தேர்தலில் தியாகராய செட்டியும், கூர்ம வெங்கட ரெட்டி நாயுடுவும் ஹோம் ரூல் இயக்க ஆதரவு பிராமண வேட்பாளர்களால் தோற்கடிக்கப்பட்டனர். இந்தத் தோல்விகள் இரு குழுவினருக்கிடையேயான பகையுணர்வை அதிகரித்து, பிராமணரல்லாதோருக்காகத் தனியே ஒரு அரசியல் அமைப்பு உருவாக உடனடிக் காரணமாக அமைந்தன.

நவம்பர் 20,1916 அன்று சென்னை வேப்பேரியில் இருக்கும் வழக்கறிஞர் டி.எத்திராஜுலு முதலியார் இல்லத்தில் பிராமணர் அல்லாத தலைவர்கள் மற்றும் பிரமுகர்களின் அமைப்புக் கூட்டம் ஒன்று கூடியது. திவான் பகதூர் பிட்டி. தியாகராய செட்டியார், டாக்டர் டி. எம். நாயர், திவான் பகதூர் பி. ராஜரத்தின முதலியார், டாக்டர் சி. நடேச முதலியார், திவான் பஹதூர் பி. எம். சிவஞான முதலியார், திவான் பகதூர் பி. ராமராய நிங்கார், திவான் பகதூர் எம். ஜி. ஆரோக்கியசாமிப் பிள்ளை, திவான் பகதூர் ஜி. நாராயணசாமி ரெட்டி, ராவ் பகதூர் ஓ. தணிகாசலம் செட்டியார், ராவ் பகதூர் எம். சி. ராஜா, டாக்டர் முகமது உஸ்மான் சாகிப், ஜே. எம். நல்லுசாமிப்பிள்ளை, ராவ் பகதூர் கே. வேங்கட்டரெட்டி நாயுடு (கே. வி. ரெட்டி நாயுடு), ராவ் பகதூர் ஏ. பி.

பாத்ரோ, டி. எத்திராஜுலு முதலியார், ஓ. கந்தசாமி செட்டியார், ஜே. என். ராமநாதன், கான் பகதூர் ஏ. கே. ஜி. அகமது தம்பி மரைக்காயர், அலர்மேலு மங்கைத் தாயாரம்மாள், ஏ. ராமசாமி முதலியார், திவான் பகதூர் கருணாகர மேனன், டி. வரதராஜுலு நாயுடு, எல். கே. துளசிராம், கே. அப்பாராவ் நாயுடுகாரு, எஸ். முத்தையா முதலியார், மூப்பில் நாயர் உள்ளிட்ட தலைவர்கள் அந்தக் கூட்டத்தில் கலந்து கொண்டவர்களில் முக்கியமானவர்கள்.

அக்கூட்டத்தில் தென்னிந்திய நல உரிமைச் சங்கம் (சிபா) உருவானது. பிராமணரல்லாதோரின் குற்றச்சாட்டுகளை முன் வைக்க ஆங்கிலம், தெலுங்கு மற்றும் தமிழ் மொழிகளில் செய்தித்தாள்களை நடத்துவது இவ்வமைப்பின் குறிக்கோள். தியாகராயரும் டாக்டர் நாயரும் சென்னை நகரசபை அரசியலில் எதிரணியில் இருந்தவர்கள் ஆனால் நடேச முதலியாரின் முயற்சியால் ஓரணியில் ஒன்றிணைந்தனர். இந்தக் கூட்டத்தில் தென்னிந்திய நல உரிமைச் சங்கம் என்ற அரசியல் இயக்கமும் உருவாக்கப்பட்டது. இந்த இயக்கத்தின் கூட்டு நிறுவனர்களாக டி. எம். நாயரும் பிட்டி தியாகராய செட்டியாரும் இருந்தனர். தலைவராக ராஜரத்ன முதலியார், துணைத் தலைவர்களாக ராம்ராய நிங்கார், பிட்டி. தியாகராய செட்டியார், கே. ஜி. அகமது தம்பி மரைக்காயர், எம். ஜி. ஆரோக்கியசாமிப் பிள்ளை ஆகியோர் தேர்வு செய்யப்பட்டனர். பி. எம். சிவஞான முதலியார், பி. நாராயணசாமி முதலியார், முகமது உஸ்மான், எம். கோவிந்தராஜுலு நாயுடு ஆகியோர் செயலாளர்களாகவும் ஜி. நாராயணசாமி செட்டியார் பொருளாளராகவும் செயல்பட்டனர். செயற்குழு உறுப்பினர்களுள் ஒருவராக டி. எம். நாயர் தேர்ந்தெடுக்கப்பட்டார். இந்த இயக்கம் பின்னாளில் நீதிக்கட்சி (ஜஸ்டிஸ் கட்சி) என்று பரவலாக அழைக்கப்படலாயிற்று. ஜஸ்டிஸ் என்ற ஆங்கில இதழை அது வெளியிட்டதால் இப்பெயர் ஏற்பட்டது. டிசம்பர் 1916 இல் இவ்வமைப்பு “பிராமணரல்லாதோர் கொள்கை அறிக்கை” ஒன்றை வெளியிட்டது. அதில் பிரித்தானிய அரசின் மீது தங்கள் விசுவாசத்தை அறிவித்த அதேவேளை நிருவாகத்தில் பிராமண ஆதிக்கத்தைக் கடுமையாகத் தாக்கியது. இந்த அறிக்கையைத் தேசியவாத நாளிதழான தி இந்து பின்வருமாறு கடுமையாக விமர்சித்தது (20 டிசம்பர் 1916):

இந்த அறிக்கை எமக்கு மிகுந்த வியப்பினையும் வேதனையையும் அளிக்கிறது. இவ்வறிக்கை அது பேசும் பொருளைப் பற்றித் தவறான, வெகுவாகத் திரிக்கப்பட்ட கண்ணோட்டதை முன் வைக்கிறது. பெரும் பாரத சமூகத்தினிடையே பகையுணர்வை வளர்ப்பது மட்டுமே இதன் நோக்கமாகக் கொள்ள முடியும். இந்து நேசன் இதழ் ”இப்போது இந்தப் புதிய அமைப்பை உருவாக்க வேண்டியதன் அவசியமென்ன?” என்று வினவியது. ஹோம் ரூல் இயக்கத்தின் நியூ ஏஜ் இதழ், இப்புதிய அமைப்பை நிராகரித்ததுடன் அது விரைவில் அழிந்து விடும் என்றும் யூகித்தது. பெப்ரவரி 1917ல் சிபா கூட்டுப்பங்கு நிறுவனம் தலா 100 ரூபாய் மதிப்புள்ள 640 பங்குகளை விற்று முதலீடு திரட்டியது.

இப்பணத்தைக் கொண்டு ஒரு அச்சுக் கூடத்தை வாங்கி , ஜஸ்டிஸ் இதழை வெளியிட முயன்றது. முதலில் சி. கருணாகர மேனன் இதழாசிரியராகத் தேர்வு செய்யப்பட்டார். ஆனால் அவருடனான பேச்சுவார்த்தைகள் முறிந்து நாயரே அவ்விதழின் கௌரவ ஆசிரியரானார். பி. என். ராமன் பிள்ளையும், மு. சி. பூரணலிங்கம் பிள்ளையும் துணை ஆசிரியர்களாகப் பணியாற்றினர். இதன் முதல் பதிப்பு பெப்ரவரி 26, 1917 இல் வெளியானது. ஜூன் 1917 இல் பக்தவத்சலம் பிள்ளையை ஆசிரியராகக் கொண்ட திராவிடன் என்ற தமிழ் இதழையும் வெளியிடத் தொடங்கியது. பின்னர் ஏ. சி. பார்த்தசாரதி நாயுடு ஆசிரியராக இருந்த ஆந்திர பிரகாசிக்கா என்ற நாளிதழையும் நீதிக்கட்சி வாங்கியது. ஆனால் 1919 ம் ஆண்டு நிதிப்பற்றாக்குறையினால் இவ்விரு நாளிதழ்களும் வார இதழ்களாக மாற்றப்பட்டன.

ஆகஸ்ட் 19, 1917 இல் கோயம்புத்தூரில் பனகல் அரசர் தலைமையில் முதல் பிராமணரல்லாதோர் மாநாடு நடைபெற்றது. அடுத்த சில மாதங்களில் இதுபோலப் பல மாநாடுகள் கூட்டப்பட்டன. அக்டோபர் 18 இல் டி. எம். நாயரால் எழுதப்பட்ட கட்சிக் குறிக்கோள்கள் தி இந்து நாளிதழில் வெளியாகின:

- தென்னிந்தியாவில் பிராமணரல்லாத அனைத்து சாதியினர்களையும் கல்வி, சமூகம், பொருளாதாரம், அரசியல், பொருள் மற்றும் அற ரீதியாக முன்னேற்றுவது.
- ஜபிராமணரல்லாத அனைத்து சமூகத்தினரின் நலனைப் பாதுகாக்கஸ தென்னிந்திய மக்களின் கோரிக்கைகளையும் கருத்துகளையும் தக்க வகையில் உரிய காலத்தில் அரசின் முன் வைப்பது பொதுக் கேள்விகளை விவாதிப்பது.
- பொதுக் கருத்து தொடர்புடைய தாராண்மிய கொள்கைகளைக் கருத்தரங்குகள், அறிக்கைகள், ஆவணங்கள் மற்றும் பிற வழிகள் மூலமாகப் பரப்புவது.

ஆகஸ்ட்-டிசம்பர் 1917 காலகட்டத்தில் சென்னை மாகாணம் முழுவதும் மாநாடுகள் நடத்தப்பட்டன. பெசவாடா, சேலம், திருநல்வேலி, கோவை, புலிவெந்தலா, பிக்கவோல் ஆகியவை மாநாடுகள் நடத்தப்பட்ட ஊர்களுள் சில. இந்த மாநாடுகளும் பிற கூட்டங்களும் அரசியல் களத்தில் நீதிக்கட்சியின் நுழைவைப் பறைசாற்றின. 1916–20 காலகட்டத்தில் நீதிக்கட்சி காங்கிரசின் எழும்பூர் மற்றும் மயிலாப்பூர் குழுக்களுடன் அரசியல் களத்தில் மோதியது. பிராமணரல்லாதோருக்கு அரசு அதிகாரத்தில் இட ஒதுக்கீடு தேவையெனப் பிரித்தானிய அரசிடமும் பொது மக்களிடமும் பிரச்சாரத்தில் ஈடுபட்டது. காங்கிரசின் மூன்றாவது குழுவான ராஜாஜி அணி பிரித்தானிய அரசுடன் ஒத்துழையாமைக் கொள்கை கொண்டிருந்தது.

குறிப்பு

**ஹோம் ரூல் இயக்கத்துடன் மோதல்:** 1916ம் ஆண்டு பிரம்ம ஞான (தியோசோபிகல்) சங்கத்தின் தலைவியான அன்னி பெசண்ட், ஹோம் ரூல் லீகினை உருவாக்கி இந்திய விடுதலை இயக்கத்தில் ஈடுபடலானார். அவரது செயல்பாடுகள் சென்னையை மையமாகக் கொண்டிருந்தன. அவருடைய் அரசியல் ஆதரவாளர்களில் பலர் பிராமணர்கள். அவர் இந்தியாவை ஒரே மாதிரியான சமய, மெய்யியல், பண்பாட்டுக் கூறுகளையும் ஒரு சாதி அமைப்பினையும் கொண்டிருக்கும் ஒன்றுபட்ட அமைப்பாகக் கருதினார். இந்தியப் பண்பாடுகுறித்து அவரது கருத்துகளுக்குப் புராணங்களும், மனுதர்மமும் வேதங்களும் அடிப்படையாக இருந்தன. இவற்றைக் கல்வி கற்ற பிராமணரல்லாதோர் கேள்விக்குட்படுத்தத் தொடங்கியிருந்தமையால் சென்னை மாகாணத்தில் ஹோம் ரூல் இயக்கத்துக்கும் பிராமணரல்லாதோர் இயக்கத்துக்கும் மோதல் உருவானது.

ஹோம் ரூல் இயக்கம் துவக்கப்படும் முன்னரே டி. எம். நாயருக்கும் அன்னி பெசண்ட்டுக்குமிடையே உரசல் ஏற்பட்டிருந்தது. நாயர் தனது மருத்துவ ஆய்விதழ் ஆண்டிசெப்ட்டிக் இல் பிரம்மஞானத் தலைவர் சார்லஸ் லெட்பெட்டரின் பாலுறவுப் பழக்கங்களைத் தாக்கி ஒரு கட்டுரை எழுதியிருந்தார். அதனைக் கண்டித்து நாயருக்கு எதிராகப் பெசண்ட் தொடர்ந்த மான நஷ்ட வழக்கு தோல்வியடைந்திருந்தது. பெசண்ட் பிராமணர்களுடன் கொண்டிருந்த நட்புறவும், அவரது இந்தியா குறித்த பார்வை பார்ப்பனிய கருத்துகளின் அடிப்படையில் அமைந்திருந்ததும் அவருக்கும் நீதிக்கட்சிக்குமிடையே மோதலை உருவாக்கியது. டிசம்பர் 1916 இல் வெளியான நீதிக்கட்சி கொள்கை அறிக்கையில் ஹோம் ரூல் இயக்கத்திற்கு எதிரான கருத்துகள் இடம் பெற்றிருந்தன. பெசண்டின் நியூ இந்தியா இதழ் அந்த அறிக்கையை விமர்சித்தது. ஹோம் ரூல் இயக்கத்தை எதிர்த்த நீதிக்கட்சி, தனது இதழ்களில் பெசண்ட்டை "ஐயர்லாந்து பாப்பாத்தி" என்று வருணித்தது. தினமும் பெசண்ட்டையும் அவரது இயக்கத்தையும் தாக்கி நீதிக்கட்சி இதழ்கள் செய்திகள் வெளியிட்டன. திராவிடன் இதழில் "ஹோம் ரூல் என்பது பிராமணர்களின் ஆட்சி" என்ற தலைப்பில் செய்தி வெளியானது. இச்செய்திகளும் கட்டுரைகளும் பின்பு தொகுக்கப்பட்டு "அன்னி பெசண்ட்டின் படிவளர்ச்சி" என்ற தலைப்பில் நூலாக வெளிவந்தன. ஹோம் ரூல் இயக்கமானது அரசின் கெடுபிடிகளின் பாதிப்பில்லாத வெள்ளைப் பெண்மணியால் நடத்தப்படும் அரசியல் இயக்கம் என்றும் அதன் விளைவுகள் பிராமணர்களுக்கே சாதகமாக அமையும் என்றும் நாயர் விமர்சித்தார்.

**வகுப்புவாரி பிரதிநிதித்துவக் கோரிக்கை** ஆகஸ்ட் 20, 1917 இல் பிரித்தானிய அரசின் இந்தியச் செயலர் எட்வின் மொண்டேகு இந்தியாவின் நிருவாகத்தில் இந்தியரின் பங்கை அதிகரிக்கவும் உள்ளாட்சி அமைப்புகளை வளர்க்கவும் சில அரசியல் சீர்திருத்தங்களை

**குறிப்பு**

அறிவித்தார். இவ்வறிவிப்பு சென்னை மாகாணத்தின் பிராமணரல்லாத தலைவர்களிடையே பிளவை ஏற்படுத்தியது. ஆகஸ்ட் இறுதியில் நீதிக்கட்சி தனது கோரிக்கைகளை முன்வைத்துப் பல மாநாடுகளை நடத்தியது. 1909 இல் முசுலிம்களுக்கு வழங்கப்பட்டது போலவே பிராமணரல்லாதோருக்கும் மாகாண சட்டமன்றங்களில் வகுப்புவாரி பிரதிநிதித்துவம் வழங்கும்படி தியாகராய செட்டி மொண்டேகுவுக்கு தந்தி அனுப்பினார். காங்கிரசின் பிராமணரல்லாத தலைவர்கள் நீதிக்கட்சிக்குப் போட்டியாகச் சென்னை மாகாண சங்கம் ஒன்றை உருவாக்கினர். பெரியார் ஈ. வே. ராமசாமி, கல்யாணசுந்தரம் முதலியார், பெ. வரதராஜுலு நாயுடு, கூட்டி கேசவ பிள்ளை ஆகியோர் இச்சங்கத்தின் தலைவர்கள். இச்சங்கத்துக்கு காங்கிரசின் பிராமணர்கள் மற்றும் தி இந்து இதழின் ஆதரவு இருந்தது. தங்கள் கோரிக்கையினை பலவீனப்படுத்த பிராமணர்களின் கைக்கூலியாக இச்சங்கம் செயல்படுவதாக நீதிக்கட்சி குற்றம் சாட்டியது.

டிசம்பர் 14, 1917 இல் மொண்டேகு அரசியல் சீர்திருத்தங்கள்குறித்து பலதரப்பினரின் கருத்தறிய சென்னை வந்தார். ஓ. கந்தசாமி செட்டி தலைமையில் நீதிக்கட்சி தூதுக்குழுவும், கேசவ பிள்ளை தலைமையில் சென்னை மாநில சங்க தூதுக்குழுவும் வேறு இரு பிராமணரல்லாதோர் தூதுக்குழுக்களும் அவரைச் சந்தித்து தங்கள் தரப்பினை முன் வைத்தன. இரு தரப்பினரும் பலிஜா நாயுடுகள், பிள்ளைகள், முதலியார்கள், செட்டிகள், பஞ்சமர்கள் ஆகியோருக்கு இடஒதுக்கீடு வழங்குமாறு வேண்டின. கேசவ பிள்ளை இந்நிலைப்பாட்டுக்கு காங்கிரசின் சென்னை மாகாணக் குழுவின் ஆதரவினையும் பெற்றார். போர்ட்லாந்து பிரபு போன்ற பிரித்தானிய ஆட்சியாளர்களும், மெட்ராஸ் மெயில் போன்ற அரசு ஆதரவு இதழ்களும் இந்நிலைப்பாட்டை ஆதரித்தன. ஆனால் மொண்டேகு இந்து சாதிகளுக்கு இட ஒதுக்கீடு வழங்குவதை விரும்பவில்லை. ஜூலை 2, 1918 இல் வெளியான அவரது அதிகாரப்பூர்வ அறிக்கை அதைப் பரிந்துரைக்க மறுத்துவிட்டது.

தஞ்சாவூரில் நடைபெற்ற ஒரு கூட்டத்தில் டி. எம். நாயரை லண்டனுக்கு அனுப்பி இடஒதுக்கீடு கோர நீதிக்கட்சி முடிவெடுத்தது. ஜூன் 1918 இல் லண்டனை அடைந்த நாயர் டிசம்பர் மாதம் வரை இதற்கான பரப்புரை முயற்சிகளில் ஈடுபட்டார். அறிக்கைகள், கட்டுரைகள் எழுதியும் நாடாளுமன்ற உறுப்பினர்களிடம் உரையாற்றியும் நீதிக்கட்சியின் நிலைபாட்டினை வெளிப்படுத்தினார். ஆனால் சீர்திருத்தங்களை நடைமுறைப்படுத்த அமைக்கப்பட்ட சவுத்பரோ குழுவுடன் ஒத்துழைக்க நீதிக்கட்சி மறுத்து விட்டது. இந்திய ஆட்சிப்பணியின் இரு பிராமண உறுப்பினர்கள் (வி. எஸ். ஸ்ரீநிவாச சாஸ்திரி மற்றும் சுரேந்திரநாத் பான்ர்ஜீ) இதில் இடம்பெற்றிருந்ததே இதற்குக் காரணம். ஆனால் சவுத்பரோ குழுவின் இந்தியரல்லா உறுப்பினர்களின் ஆதரவை நீதிக்கட்சி பெற்றிருந்தது.

1919–20 காலகட்டத்தில் இந்திய அரசுச் சட்டம், 1919 க்கு இறுதி வடிவம் கொடுக்கப் பிரித்தானிய நாடாளுமன்ற குழு, முறையீடு கூட்டங்களைக் கூட்டியது. ஆற்காடு ராமசாமி முதலியார், வெங்கட ரெட்டி நாயுடு, எல். கே. துளசிராம், கோக்க அப்பராவ் நாயுடு ஆகியோர் அடங்கிய நீதிக்கட்சி தூதுக்குழு ஐக்கிய இராச்சியத்தில் நடைபெற்ற இக்கூட்டங்களில் கலந்து கொண்டது. பனகல் அரசர் ராமராயநிங்கார் அனைத்திந்திய நிலச்சுவான்தார்கள் சங்கம் மற்றும் சென்னை சமீந்தார் சங்கங்களின் பிரதிநிதியாகக் கலந்து கொண்டார். ரெட்டி நாயுடு, ராமசாமி முதலியார் மற்றும் ராமராயநிங்கார் ஆகியோர் பெரிய நகரங்களில் சுற்றுப்பயணம் மேற்கொண்டு, பொதுக்கூட்டங்களில் பேசி, உள்ளூர் இதழ்களில் பத்திகள் எழுதித் தங்கள் நிலைப்பாட்டிற்கு ஆதரவு திரட்டினர். டி. எம். நாயர் ஜூலை 17, 1919 இல் மரணமடைந்ததால், அவர் இக்கூட்டங்களில் பங்கேற்கவில்லை. நாயரின் மரணத்துக்குப் பின்னர் ரெட்டி நாயுடு நீதிக்கட்சியின் செய்தித் தொடர்பாளரானார். ஆகஸ்ட் 22 இல் நாடாளுமன்றக்குழு முன் தோன்றி நீதிக்கட்சியின் கருத்தினை முன்வைத்தார். நீதிக்கட்சியின் தரப்புக்கு குழுவில் இடம்பெற்ற தாராண்மியக் கட்சி மற்றும் தொழில் கட்சி உறுப்பினர்களின் ஆதரவு கிட்டியது. நவம்பர் 17, 1919 இல் வெளியான நாடாளுமன்ற கூட்டுக்குழு அறிக்கை பிராமணரல்லாதோருக்கு வகுப்புவாரி பிரதிநிதித்துவம் வழங்கப் பரிந்துரைத்தது. எத்தனை இடங்கள் ஒதுக்கவேண்டுமென்பதை அந்தந்தப் பகுதியின் அரசும் அரசியல் கட்சிகளும் தீர்மானித்துக் கொள்ள வேண்டுமென்றும் கூறியது. நீதிக்கட்சி, சென்னை மாகாண சங்கம், மற்றும் பிரித்தானிய அரசுக்கிடையே ஒரு நீண்ட பேச்சுவார்த்தை நடைபெற்று இறுதியில் மார்ச் 1920 இல் இடங்கள்குறித்த ஒப்பந்தம் ஏற்பட்டது. மெஸ்டன் உடன்படிக்கை என்றழைக்கப்பட்ட இதன் மூலம் சென்னை சட்டமன்றத்தின் 63 பொது இடங்களில் 28 (3 நகர்ப்புற மற்றும் 25 ஊர்ப்புற இடங்கள்) பிராமணரல்லாதோருக்காக ஒதுக்கப்பட்டன.

**ஒத்துழையாமை இயக்கத்துக்கு எதிர்ப்பு** மொண்டேகு-கெம்ஸ்ஃபோர்ட் சீருதிருத்தங்கள் வழங்கிய அரசியல் அதிகாரங்கள் போதாதெனக் கருதிய மகாத்மா காந்தி, மார்ச் 1919 இல் இயற்றப்பட்ட ரவ்லட் சட்டங்களின் மீது கொண்ட அதிருப்தியின் வெளிப்பாடாக ஒத்துழையாமை இயக்கத்தைத் துவங்கினார். கல்வி நிறுவனங்கள், சட்டமன்றங்கள், நீதிமன்றங்கள் மற்றும் பொது நிகழ்வுகளைப் புறக்கணிக்கும்படி தன் ஆதரவாளர்களைக் கேட்டுக் கொண்டார். நீதிக்கட்சி ஒத்துழையாமை இயக்கத்தை ஏற்கவில்லை. புதிய அரசியல் சூழலில் பங்கேற்று பிரித்தானிய அரசின் மூலம் தன் கோரிக்கைகளை நிறைவேற்றிக் கொள்ளவே அது விரும்பியது. காந்தியை சமூக அமைப்பினை சீர்குலைக்க விழைந்துள்ள ஒரு அரசின்மைவாதியெனக் கருதியது. தொழில்மயமாக்கலுக்கு எதிரான காந்தியின் கொள்கைகளைக் கண்டித்து நீதிக்கட்சி உறுப்பினர் மரியதாஸ் ரத்னசாமி 1920 இல்

"மகாத்மா காந்தியின் அரசியல் தத்துவம்" என்ற அறிக்கையை வெளியிட்டார். வெங்கட ரெட்டி நாயுடுவும் ஒத்துழையாமை இயக்கத்தை எதிர்த்துப் பிரச்சாரம் மேற்கொண்டார்.

குறிப்பு

ஒத்துழையாமைக் கொள்கையைப் பெரும்பாலான அரசியல் மற்றும் சமூக அமைப்புகள் ஆதரித்ததால் நீதிக்கட்சி தனிமைப்படுத்தப்பட்டது. காந்தி பிராமணரல்ல என்றாலும் அவர் பிராமணர்களோடு மட்டுமே நட்புறவு கொண்டவர் என்று நீதிக்கட்சி கருதியது. மேலும் காந்தி எதிர்த்த தொழில்மயமாக்கக் கொள்கையை ஆதரித்தது. ஏப்ரல் 1921 இல் காந்தி சென்னை வந்தபோது பார்ப்பனியத்தின் நற்கூறுகளைப் பற்றியும் இந்தியப் பண்பாட்டுக்குப் பிராமணர்களின் பங்களிப்பு குறித்தும் அவர் உரையாற்றியது நீதிக்கட்சியின் காந்தி எதிர்ப்பை வலுப்படுத்தியது. காந்தியின் பேச்சுக்கு ஜஸ்டிஸ் இதழ் பின்காணும் எதிர்வினையாற்றியது: காந்தியின் ஆதரவாளர்களான உள்ளூர் பிராமண அரசியல்வாதிகள் அக்கூட்டத்தில் கலந்து கொண்டனர். திரு. காந்தி இருபால்களைச் சேர்ந்த பிராமணர்களால் சூழப்பட்டிருந்தார். ஒரு பிராமண கோஷ்டி பஜனை பாடிக் கொண்டே கூட்டத்துக்கு வந்து சேர்ந்தது. அவர்கள் காந்தியின் முன் கற்பூரம் சுற்றி தேங்காய் உடைத்து அவருக்கு ஒரு வெள்ளிப் பாத்திரத்தில் புனித நீரை அளித்தனர். இதுபோலக் கடவுளாக்கத்தின் வேறுசில வெளிப்பாடுகளும் நடந்தன. எதிர்பார்த்தது போலவே அம்மனிதரின் அளப்பரிய தற்பெருமைக்கு இது தீனியாக அமைந்தது. பிராமணர்கள் மற்றும் பார்ப்பனீயத்தின் அருமை பெருமைகளைப் பற்றி அவர் நீளமாகப் பேசினார். திராவிடப் பண்பாடு, மெய்யியல், இலக்கியம், மொழிகள் வரலாறுபற்றி ஒன்றுமே அறியாத இந்தக் குஜராத்தி மேன்மகன் பிராமணர்களை வானளாவப் புகழ்ந்தார். பிராமணரல்லாதோர் குறித்து வாய் திறக்கவில்லை. கண்டிப்பாகக் கூட்டத்துக்கு வந்த பிராமணர்களுக்கு உச்சி குளிர்ந்திருக்கும்.

காந்தி நடத்திய யங் இந்தியா இதழுக்கொரு கடிதம் எழுதிய கந்தசாமி செட்டி, பிராமணர்-பிராமணரல்லாதோர் விசயங்களில் தலையிடாமல் இருக்கும்படி காந்திக்கு அறிவுரை கூறினார். அதற்குக் காந்தி அளித்த பதிலில் மீண்டும் இந்து சமயத்துக்குப் பிராமணர்களின் பங்களிப்பைப் பாராட்டிய காந்தி "வாசகர்கள் தென் திராவிடத்தை, வட ஆரியத்திலிருந்து பிரித்துப் பார்க்க வேண்டாமென எச்சரிக்கிறேன். இன்றைய இந்தியா இந்த இரண்டிற்கும் அப்பாற்பட்ட பல பண்பாடுகளின் கலவையாகும்" என்று கூறியிருந்தார். நீதிக்கட்சி மற்றும் மெட்ராஸ் மெயில் இதழ் காந்திக்கெதிராக மேற்கொண்ட தொடர் பிரச்சாரங்கள் தென்னிந்தியாவில், குறிப்பாகத் தமிழ் பேசும் மாவட்டங்களில் காந்தியின் புகழைக் குன்றச் செய்தன. சவுரி சாவ்ரா நிகழ்வின் காரணமாகக் காந்தி ஒத்துழையாமை இயக்கத்தை விலக்கிக் கொண்ட பிறகும் நீதிக்கட்சி அவரைச் சந்தேகக் கண்ணுடன்தான் பார்த்தது. அவர் கைது செய்யப்பட்ட பிறகே தனது கடுமையான நிலைப்பாட்டைத் தணித்துக் கொண்டது.

குறிப்பு

**ஆளும் கட்சியாக:** மாண்டேகு-கெம்ஸ்.ஃ.போர்ட் சீருதிருத்தங்கள், இந்திய அரசுச் சட்டம் 1919 இன் மூலம் நடைமுறைப்படுத்தப்பட்டன. 1920 முதல் 37 வரை சென்னை மாகாணத்தில் இரட்டை ஆட்சி முறை அமலில் இருந்தது. இந்தப் பதினேழு ஆண்டுகளில் 13 இல் (1926–30 தவிர) நீதிக்கட்சியே சென்னை மாகாணத்தை ஆண்டது. 1920–26 ஒத்துழையாமை இயக்கத்தில் ஈடுபட்ட இந்திய தேசிய காங்கிரசு 1920 தேர்தலைப் புறக்கணித்து விட்டது. பெரிய எதிர்ப்பின்றி போட்டியிட்ட நீதிக்கட்சி 98 இடங்களில் 63 இல் வென்றது. அக்கட்சியின் ஏ. சுப்பராயுலு ரெட்டியார் சென்னையின் முதல் முதலமைச்சரானார். ஆனால் விரைவில் உடல்நிலைக் குறைவினால் அவர் பதவி விலகிப் பனகர் அரசர் முதல்வரானார். இரட்டை ஆட்சி முறை நீதிக்கட்சிக்கு முழுமையாக ஏற்புடையதாக இல்லை. 1924 இல் மட்டிமான் குழுவின் முன் தோன்றிய வெங்கட ரெட்டி நாயுடு நீதிக்கட்சியின் நிலையினை பின்வருமாறு விளக்கினார். நான் வளர்ச்சித்துறை அமைச்சராக இருந்தேன். ஆனால் வனத்துறை என் கட்டுப்பாட்டில் இல்லை. அதே போல வேளாண்மை என் கையில் இருந்தது ஆனால் நீர்ப்பாசனத்துறை இல்லை. சென்னை மாகாணத்தின் வேளாண்துறை அமைச்சராக நானிருந்தாலும் சென்னை விவசாயிகள் கடன் சட்டமோ, சென்னை நிலவிருத்தி சட்டமோ என்னைக் கேட்டு இயற்றப்படவில்லை. நீர்ப்பாசனம், வேளாண் கடன்கள், நிலவிருத்தி கடன்கள், பஞ்ச நிவாரணம் ஆகிய எதுவும் தன் கட்டுப்பாட்டில் இல்லாத ஒரு வேளாண்துறை அமைச்சர் எப்படி செயல்பட்டிருப்பார் என்பதை சொல்லி விளக்க வேண்டியதில்லை. நீங்களே கற்பனை செய்து பார்த்துக் கொள்ளுங்கள். இதே போலத் தான் தொழிற்சாலைகள், கொதிகலன்கள், மின்சாரம், நீர் ஆற்றல், சுரங்கம், தொழிலாளர் துறைகள் எதுவும் தன் கட்டுப்பாட்டில் இல்லாத தொழிற்துறை அமைச்சராகவும் இருந்தேன்.

தியாகராய செட்டியின் அதிகாரப்போக்காலும் தமிழ் உறுப்பினர்களைக் கண்டுகொள்ளாமல் தெலுங்கு உறுப்பினர்களுக்கு அமைச்சர் பதவி அளித்ததாலும் நீதிக்கட்சியில் பிளவு ஏற்பட்டது. 1923 இல் சி. ஆர். ரெட்டி விலகித் தனிக்கட்சி தொடங்கினார். அவரது கட்சி அப்போது எதிர்க்கட்சியாக இருந்த சுயாட்சிக் கட்சியுடன் இணைந்து செயல்பட்டது. 1923 இல் நடந்த இரண்டாவது தேர்தலில் நீதிக்கட்சி மீண்டும் வெற்றி பெற்றாலும் அதன் பெரும்பான்மை குறைந்து போனது. இரண்டாவது சட்டமன்றத்தின் முதல் நாளன்றே எதிர்க்கட்சிகள் பனகல் அரசர் அரசுக்கெதிராக நம்பிக்கையில்லாத் தீர்மானம் கொண்டுவந்தன. 65-44 என்ற வாக்கு கணக்கில் அத்தீர்மானம் தோற்கடிக்கப்பட்டது. பனகல் அரசர் நவம்பர் 1926 வரை முதல்வராக நீடித்தார்.1926 தேர்தலில் நீதிக்கட்சி சுயாட்சிக் கட்சியிடம் தோல்வியடைந்தது. ஆனால் வெற்றி பெற்ற சுயாட்சி கட்சியினர் ஆட்சியமைக்க மறுத்து விட்டதால் ப. சுப்பராயன் தலைமையில் சுயேட்சைகளைக் கொண்டு சென்னை ஆளுனர் ஒரு அரசினை உருவாக்கினார்.

பெரியார் ஈ. வே. ராமசாமி, நடேச முதலியார், பொபிலி அரசர் மற்றும் எஸ். குமாரசாமி ரெட்டியார் நான்கு ஆண்டுகள் எதிர்க்கட்சியாகச் செயல்பட்ட பின்னர் 1930 தேர்தலில் மீண்டும் வெற்றி பெற்று ஆட்சியைக் கைப்பற்றியது நீதிக்கட்சி. முனுசாமி நாயுடு முதல்வரானார். ஆனால் அவரது பதவிக்காலத்தில் கட்சியில் உட்பூசலும் சர்ச்சைகளும் மலிந்தன. பெரும் பொருளியல் வீழ்ச்சியின் தாக்கம் அப்போது உச்சத்தில் இருந்ததால் சென்னை மாகாணத்தின் பொருளாதாரம் சரிந்து கொண்டிருந்தது. தென் மாவட்டங்களில் வெள்ளத்தின் பாதிப்பு அதிகமாக இருந்தது. வருவாய் குறைபாட்டை ஈடுகட்ட அரசு நிலவரியை அதிகரித்தது. இதனாலும் பொபிலி அரசர் மற்றும் வெங்கடகிரி குமாரராஜா இருவருக்கும் அமைச்சர் பதவி கொடுக்கவில்லை என்பதாலும் நீதிக்கட்சியின் ஜமீன்தார் குழு அதிருப்தியடைந்தது. 1930 இல் பி. டி. ராஜன் மற்றும் முனுசாமி நாயுடு ஆகியோரிடையே கட்சி தலைவராவதில் போட்டியேற்பட்டது. தனது பதவியைத் தக்க வைத்துக் கொள்வதற்காக நாயுடு மூன்றாண்டுகளாகக் கட்சியின் வருடாந்திர மாநாட்டை நடத்தாமல் தவிர்த்தார். நவம்பர் 1930 இல் எம். ஏ. முத்தையா செட்டியார் தலைமையில் ஜமீன்தார்கள் ”ஜிஞ்சர்” குழு என்ற போட்டிக்குழுவை உருவாக்கினர். அக்டோபர் 10-11, 1932 இல் நடைபெற்ற கட்சியின் 12வது வருடாந்திர மாநாட்டில் ஜமீன்தார் குழு நாயுடுவைக் கட்சித் தலைவர் பதவியிலிருந்து இறக்கி பொபிலி அரசரை அவருக்குப் பதில் தலைவராக்கியது. சொந்தக் கட்சியினரே தனக்கு எதிராகச் சட்டமன்றத்தில் நம்பிக்கையில்லாத் தீர்மானம் கொண்டு வந்து விடுவார்கள் என்றஞ்சிய நாயுடு நவம்பர் 1932 இல் பதவி விலகினார் பொபிலி அரசர் முதல்வரானார். நாயுடுவின் ஆதரவாளர்கள் ஜனநாயக நீதிக்கட்சி என்ற பெயரில் தனிக்கட்சி தொடங்கினர். 1935 இல் நாயுடுவின் இறப்புக்குக் பின்னர் மீண்டும் நீதிக்கட்சியில் இணைந்தனர்.ஜ28ஸ இக்காலகட்டத்தில் நீதிக்கட்சியின் எல். சிறீராமுலு நாயுடு சென்னை நகரின் மேயராகப் பணியாற்றினார்.

மாகாண மக்களிடையே வேகமாகப் பரவி வந்த தேசியவாத உணர்வும், பொபிலி அரசரின் ஊழல் மலிந்த திறமையற்ற நிருவாகமும் நீதிக்கட்சியின் நற்பெயரை அறவே அழித்து விட்டன. உட்கட்சிப் பூசல்கள் 1930களின் முற்பகுதியில் கட்சியை வெகுவாக வலுவிழக்கச் செய்தன. பொபிலி அரசர் கட்சிக்காரர்களைக் கலந்தாலோசிக்காமல் செயல்பட்டதுடன் கட்சியின் முதுகெலும்பாக இருந்த உள்ளாட்சி அமைப்புத் தலைவர்களை ஓரம் கட்ட முயற்சித்தார். பிரித்தானிய அரசின் கடுமையான நடவடிக்கைகளைப் பொபிலி அரசர் ஆதரித்ததால், அவரை மக்கள் பிரித்தானியர்களின் கைக்கூலியாகக் கருதினர். நீதிக்கட்சி அரசின் பொருளாதாரக் கொள்கைகளும் மக்களின் கோபத்தை சம்பாதித்தன. ஜமீன்தார்களின் கட்டுப்பாட்டில் இல்லாத நிலங்களில் நில வரியை 12.5மூ குறைக்க பொபிலி அரசர் மறுத்தது, இதனை எதிர்த்துக் காங்கிரசு தலைமையில் விவசாயிகள் நடத்திய

போராட்டத்தை ஜமீன்தாராகிய அவர் கடுமையாக ஒடுக்கியது போன்ற நிகழ்வுகள் நீதிக்கட்சியின் செல்வாக்கு மேலும் சரியக் காரணமாக அமைந்தது. 1934 சட்டமன்றத் தேர்தலில் நீதிக்கட்சி தோல்வியுற்றாலும் வெற்றி பெற்ற சுயாட்சிக் கட்சி (காங்கிரசின் தேர்தல் பிரிவு) அரசமைக்க மறுத்து விட்டதால், நீதிக்கட்சி சிறுபான்மை அரசமைத்தது.

நீதிக்கட்சி ஆட்சியில் இருந்த இறுதி ஆண்டுகளிலும் மக்களிடையே அதன் ஆதரவு தொடர்ந்து சரிந்து கொண்டே இருந்தது. அக்கட்சி அமைச்சர்கள் மாதச் சம்பளமாகப் பெருந்தொகை பெற்று வந்தனர் (அவர்களது மாத சம்பளம் ரூ. 4,333.60 இதோடு ஒப்பிடுகையில் அருகிலிருந்த மத்திய மாகாணங்களின் அமைச்சர்கள் பெற்ற ஊதியம் ரூ. 2,250). இது சென்னை மாகாண பத்திரிக்கைகளால் கடுமையாக விமர்சிக்கப்பட்டது. பொதுவாக நீதிக்கட்சிக்கு ஆதரவு அளித்துக் கொண்டிருந்த மெட்ராஸ் மெயில் இதழ் கூடப் பொபிலி அரசின் ஊழலையும் கையாலாகாத்தனத்தையும் சாடியது. நீதிக்கட்சி அரசுமீது மக்கள் கொண்டிருந்த அதிருப்தியை ஜமீன் ரயாட் இதழில் வெளியான பின்வரும் கட்டுரையின் மூலம் அறியலாம்:

இந்த மாகாணத்தின் மக்களைப் பீடித்த பிளேக் நோய்போல் நீதிக்கட்சி செயல்படுகிறது அதன் பால் மக்களின் நெஞ்சங்களில் நிரந்தர வெறுப்பு உருவாகிவிட்டது. சர்வாதிகார நீதிக்கட்சி அரசு எப்போது ஒழியும் காங்கிரசு அரசு எப்போது உருவாகுமென அனைவரும் ஆவலுடன் காத்திருக்கின்றனர். கிராமங்களில் வாழும் கிழவிகள் கூடப் பொபிலி அரசரின் ஆட்சி எப்போது முடியும் என்று கேட்கிறார்கள். சென்னையின் ஆளுனர் எர்ஸ்கைன் பிரபு, இந்தியாவுக்கான செயலர் செட்லாந்து பிரபுவுக்கு பெப்ரவரி 1937 இல் எழுதிய கடிதத்தில் “கடந்த பதினைந்தாண்டுகளில் நடந்துள்ள அனைத்து தவறுகளுக்கும் மக்கள் பொபிலி அரசே காரணம் என்று கருதுகின்றனர்” எனக் குறிப்பிட்டுள்ளார். 1937 தேர்தலில் புது வேகத்துடன் களமிறங்கிய காங்கிரசிடம் நீதிக்கட்சி படுதோல்வி அடைந்தது. 1937க்குப் பின் சென்னை மாகாண அரசியல் களத்தில் அதன் ஆதிக்கம் அற்றுப்போனது.

நீதிக்கட்சியின் இறுதி வீழ்ச்சிக்கு ஆய்வாளர்களால் பல்வேறு காரணங்கள் முன்வைக்கப்படுகின்றன. அவையாவன: கட்சி பிரித்தானிய அரசின் ஆதரவாளராகச் செயல்பட்டது, கட்சி உறுப்பினர்களின் மேட்டிமைத்தனம், பட்டியல் பிரிவினர் மற்றும் முஸ்லிம் சமூகங்களின் ஆதரவை இழந்தது மற்றும் சமூக சீருத்திருத்தவாதிகள் கட்சியை விட்டு விலகிச் சுய மரியாதை இயக்கத்தில் சேர்ந்தது.ஜ33ஸஜ34ஸஜ35ஸ வரலாற்றாளர் பி. ராஜாராமன் “உட்கட்சிப் பூசல்கள், திறமையற்ற ஒருங்கமைப்பு, மக்கள் ஆதரவு பெற்ற தலைவர்கள் இன்மை மற்றும் செயலிழந்த நிலையே” கட்சி அழியக் காரணங்களெனக் குறிப்பிடுகிறார்.

**எதிர்க்கட்சியாக:** நீதிக்கட்சி, 1926–30 காலகட்டத்திலும், 1937 முதல் 1944 இல் திராவிடர் கழகமாக மாறும் வரை எதிர்க்கட்சியாகச் செயல்பட்டது. (1926–30) 1926 சட்டமன்றத் தேர்தலில் சுயாட்சிக் கட்சியே தனிப்பெரும் கட்சியாக வெற்றி பெற்றது. ஆனால் இரட்டை ஆட்சி முறையை அது எதிர்த்ததால் ஆட்சியமைக்க மறுத்துவிட்டது. சென்னை ஆளுனர் ஜார்ஜ் கோஷன் நீதிக்கட்சியை ஆட்சியமைக்க அழைத்தார். ஆனால் சிறுபான்மை அரசமைக்க விருப்பமில்லாததாலும் ஆளுனருடன் கருத்து வேறுபாடு நிலவியதாலும் பனகல் அரசர் ஆட்சியமைக்க மறுத்து விட்டார். இதனால் கோஷன் தேசியவாத சுயேட்சை உறுப்பினர்களைக் கொண்டு ப.சுப்பராயன் தலைமையில் ஒரு சுயேட்சை அரசினை உருவாக்கினார். இவ்வரசுக்கு ஆதரவளிக்க 34 உறுப்பினர்களைச் சட்டமன்றத்துக்கு நியமித்தார். இவ்வரசை ஆளுனரின் கைப்பாவையரசு என்று வருணித்த நீதிக்கட்சி அதற்கு ஆதரவளிக்க மறுத்து விட்டது. சுயாட்சிக் கட்சியும் நீதிக்கட்சியும் எதிர்க்கட்சிகளாகச் செயல்பட்டன. 1927 இல் இவை இணைந்து சுப்பராயனுக்கு எதிராகக் கொண்டு வந்த நம்பிக்கையில்லாத் தீர்மானம் நியமிக்கப்பட்ட உறுப்பினர்களின் துணையால் தோற்கடிக்கப்பட்டது. ஆனால் சுப்பராயன் அரசு பாதிப் பதவிக்காலத்தைத் தாண்டும் முன்னர் சுப்பாராயன் அரசுக்கு நீதிக்கட்சியின் எதிர்ப்பு ஆதரவாக மாறி விட்டது. சைமன் குழு சென்னைக்கு வருகை தந்தபோது அதனை எதிர்ப்பது குறித்து எழுந்த அரசியல் மாற்றங்களால் நீதிக்கட்சியின் அரசு எதிர்ப்பு, ஆதரவாக மாறியது. பனகல் அரசர் டிசம்பர் 1928 இல் மரணமடைந்த பின்னர் நீதிக்கட்சி இரு குழுக்களாகப் பிரிந்தது. அவர்களில் என். ஜி. ரங்கா தலைமையிலான அமைச்சர் ஆதரவாளர்கள், (ஆைைளவநசயைடளைவள) பிராமணர்கள் கட்சி உறுப்பினர்களாவதற்கு இருந்த தடையினை நீக்கக் கோரினர். கட்சியின் பதினோராவது வருடாந்திர மாநாட்டில் இரு குழுக்களிடையே உடன்படிக்கை ஏற்பட்டு முனுசாமி நாயுடு கட்சித் தலைவராகத் தேர்ந்தெடுக்கப்பட்டார்.

1937 தேர்தலில் ஏற்பட்ட படுதோல்விக்குப் பின்னால் நீதிக்கட்சி தன் அரசியல் செல்வாக்கை முற்றிலும் இழந்து விட்டது. அரசியலிலிருந்து தற்காலிகமாக விலகிய பொபிலி அரசர் ஐரோப்பிய நாடுகளுக்குச் சுற்றுப்பயணம் சென்று விட்டார். சி. ராஜகோபாலாச்சாரியின் தலைமையில் அமைந்த புதிய காங்கிரசு அரசு பள்ளிகளில் கட்டாய இந்திக் கல்வியை அறிமுகப்படுத்தியது. சர் ஏ. டி. பன்னீர்செல்வம் தலைமையில் நீதிக்கட்சி, பெரியார் ஈ. வே. ராமசாமியின் சுயமரியாதை இயக்கத்துடன் இணைந்து இம்முயற்சியை எதிர்த்தது. பன்னீர்செல்வம் 1937 தேர்தலில் வெற்றிபெற்ற வெகுசில நீதிக்கட்சித் தலைவர்களுள் ஒருவர். இந்த இந்தி எதிர்ப்புப் போராட்டத்தின் விளைவாக நீதிக்கட்சி ஈ.வே.ராமசாமியின் கட்டுப்பாட்டில் வந்தது. பொபிலி அரசரின் பதவிக்காலம் முடிவடைந்தவுடன் ஈ.வே.ராமசாமி

டிசம்பர் 29, 1938 இல் நீதிக்கட்சியின் தலைவராகத் தேர்ந்தெடுக்கப்பட்டார்.

குறிப்பு

ஒரு காலத்தில் காங்கிரசு உறுப்பினராக இருந்த பெரியார் பல ஆண்டுகளாக நீதிக்கட்சியுடன் இணைந்து செயல்பட்டு வந்தார். 1925 இல் காங்கிரசு பார்ப்பனீயத்தைப் பரப்புவதாகக் குற்றம் சாட்டி அதிலிருந்து வெளியேறிச் சுயமரியாதை இயக்கத்தைத் தொடங்கினார். அவ்வியக்கம் பெரும்பாலும் காங்கிரசையும் சுயாட்சிக் கட்சியினையும் எதிர்த்து நீதிக்கட்சிக்கு ஆதரவாகப் செயல்பட்டது. 1926 மற்றும் 30 தேர்தல்களில் நீதிக்கட்சி வேட்பாளர்களுக்காகப் பெரியார் பிரச்சாரம் மேற்கொண்டார். 1930களின் ஆரம்பத்தில் சில ஆண்டுகளுக்கு இந்தியப் பொதுவுடமைக் கட்சியின் ஆதரவாளராக இருந்தார். ஜூலை 1934 இல் பொதுவுடமைக் கட்சி தடை செய்யப்பட்டது இதன் பின்னால் மீண்டும் நீதிக்கட்சி ஆதரவாளரானார். சரிந்திருந்த நீதிக்கட்சியின் செல்வாக்கு இந்தி எதிர்ப்புப் போராட்டத்தால் மீண்டது. அக்டோபர் 29, 1939 அன்று ராஜகோபாலச்சாரியின் காங்கிரசு அரசு பதவி விலகியது. இந்திய மாநில அரசுகளைக் கலந்தாலோசிக்காமல் பிரிட்டன் இந்தியாவை இரண்டாம் உலகப் போரில் ஈடுபடுத்தியதே இந்தப் பதவி விலகலுக்குக் காரணம். சென்னை மாகாணம் ஆளுனரின் நேரடி ஆட்சியின் கீழ் வந்தது. பெப்ரவரி 21, 1940 இல் ஆளுனர் எர்ஸ்கைன் கட்டாய இந்திக் கல்வி ஆணையைத் திரும்பப்பெற்றார்.

ஈ.வே. ராமசாமியின் தலைமையின் கீழ் நீதிக்கட்சி திராவிட நாடு கோரும் பிரிவினைக் கொள்கையினை முன் வைத்தது. கட்சியின் 14வது வருடாந்திர மாநாட்டில் பிரித்தானிய அரசின் இந்தியச் செயலரின் நேரடி மேற்பார்வையின் கீழ் தமிழருக்கெனத் தனி நாடு உருவாக்கப்பட வேண்டுமென்று தீர்மானம் நிறைவேற்றப்பட்டது. 1939 இல் பெரியார் “தனி இறையாண்மையுடைய கூட்டாட்சிக் குடியரசாக” திராவிட நாடு உருவாக வேண்டுமென்று திராவிட நாடு மாநாடொன்றைக் கூட்டினார். 1938 முதல் “தமிழருக்கெனத் தனித் தமிழ்நாடு” கோரி வந்த அவர், டிசம்பர் 17, 1939 இல் “திராவிடருக்கெனத் தனி திராவிட நாடு” என்ற முழக்கத்தை முன்வைத்தார். ஆகஸ்ட் 1940 இல் நடைபெற்ற கட்சியின் 15வது வருடாந்திர மாநாட்டிலும் தனி திராவிட நாடுக் கொள்கை முன்வைக்கப்பட்டது. பிரித்தானிய அரசின் போர் முயற்சிகளுக்கு ஆதரவளிக்கும் வண்ணம் ஆகஸ்ட் 10, 1941 இல் ஈ. வே. ராமசாமி திராவிடநாடு போராட்டத்தைக் கைவிட்டார். கிரிப்சின் தூதுக்குழு இந்தியா வந்தபோது, ராமசாமி, டபிள்யூ. பி. ஏ. சௌந்திரபாண்டியன் நாடார், என். ஆர். சாமியப்ப முதலியார், முத்தையா செட்டியார் ஆகியோர் அடங்கிய நீதிக்கட்சி தூதுக்குழு மார்ச் 30, 1942 இல் கிரிப்சை சந்தித்து திராவிட நாடு கோரியது. ஆனால் கிரிப்சு ஒரு சட்டமன்றத் தீர்மானம் அல்லது பொது வாக்கெடுப்பின் மூலமாக மட்டுமே பிரிவினை சாத்தியம் என்று கூறி விட்டார். இக்காலகட்டத்தில் இரு முறை (1940 மற்றும் 42 இல்) ஈ. வே. ராமசாமி தலைமையில் காங்கிரசு ஆதரவுடன் நீதிக்கட்சி அரசு

அமைய வாய்ப்பு உருவானது. ஆனால் இரு முறையும் ராமசாமி அரசமைக்க மறுத்துவிட்டார்.



**திராவிடர் கழகமாக மாற்றம்:** பெரியார் ஈ. வே. ராமசாமி நீதிக்கட்சியினைத் தேர்தல் அரசியலிலிருந்து விலக்கிக் கொண்டார். அவரது தலைமையில் அது சமூக சீர்திருத்த அமைப்பாக மட்டும் செயல்பட்டது. "சமூக சுயமரியாதையை அடைந்து விட்டால், அரசியல் சுய மரியாதைத் தானாகக் கிட்டி விடும்" என்பது அவரது வாதமாக இருந்தது. பெரியாரின் ஆதிக்கத்தால் நீதிக்கட்சி பிராமண எதிர்ப்பு, இந்து சமய எதிர்ப்பு மற்றும் இறைமறுப்பு கொள்கைகளைப் பின்பற்றத் தொடங்கியது. 1942–44 காலகட்டத்தில் இந்து சமய நூல்களான பெரியபுராணம் மற்றும் கம்பராமாயணம் இரண்டையும் நீதிக்கட்சியினர் கடுமையாகச் சாடினர். இதனால் இந்தி எதிர்ப்புக்காக நீதிக்கட்சியுடன் கைகோர்த்திருந்த சைவத் தமிழறிஞர்கள் தங்கள் ஆதரவை விலக்கிக் கொண்டனர். அதுவரை மாணவர்களிடையே பெரிதாகச் செல்வாக்கு பெற்றிராத நீதிக்கட்சி கா. ந. அண்ணாதுரையின் முயற்சிகளால் மாணவர் ஆதரவைப் பெறலாயிற்று.

ஆனால் ஈ. வே. ராமசாமியின் தலைமையில் ஏற்பட்ட பெரும் மாற்றங்களை ஏற்றுக் கொள்ளாத சில தலைவர்கள் கட்சியில் ஒரு போட்டிக் குழுவை உருவாக்கி அவரைத் தலைவர் பதவியிலிருந்து இறக்க முயன்றனர். இந்தக் குழுவில் இடம் பெற்றிருந்தோர் - பி. பாலசுப்பிரமணியன் (சண்டே அப்சேர்வர் இதழின் ஆசிரியர்), ஆர். கே. சண்முகம் செட்டியார், பி. டி. ராஜன், ஏ. பி. பாட்ரோ, சி. எல். நரசிம்ம முதலியார், தாமோதரன் நாயுடு மற்றும் கே. சி. சுப்ரமணிய செட்டியார். பெரியார் ஆதரவு மற்றும் எதிர்ப்புக் குழுக்களிடையே பலப்பரீட்சை மூண்டது. டிசம்பர் 27, 1943 இல் கட்சியின் செயற்குழுவைக் கூட்டிய பெரியார் எதிர்ப்பு குழு 1940 க்குப் பின் அவர் கட்சி மாநாட்டை நடத்துவதில்லையென்று குற்றம் சாட்டியது. அவர்களது விமர்சனத்தை எதிர்கொள்ள ஈ. வே. ராமசாமி கட்சியின் வருடாந்திர மாநாட்டைக் கூட்டினார். ஆகஸ்ட் 27, 1944 அன்று சேலத்தில் நடைபெற்ற நீதிக்கட்சியின் பதினாறாவது வருடாந்திர மாநாட்டில் பெரியார் ஆதரவு கோஷ்டி வெற்றி பெற்றது. இதற்கு ஒரு வாரம் முன்னர் (ஆகஸ்ட் 20 இல்) பெரியார் எதிர்ப்பு கோஷ்டியினர் ஒரு கூட்டத்தைக் கூட்டி சேலம் மாநாட்டில் நிறைவேற்றப்படும் தீர்மானங்கள் செல்லாதவை என்றும் தங்களைக் கட்டுப்படுத்தாது என்றும் அறிவித்தனர். இதற்கு அவர்கள் கூறிய காரணம் ஈ. வே. ராமசாமி கட்சியின் விதிமுறைப்படி தலைவராகத் தேர்ந்தெடுக்கப்பட்டவரல்ல் அதனால் அவருக்குத் தீர்மானங்களை நிறைவேற்ற அதிகாரமில்லை என்பதே. ஆனால் சேலம் மாநாட்டில் பெரியார் ஆதரவு கோஷ்டியினருக்கு வெகுவான ஆதரவு கிட்டி அவர்கள் வெற்றி பெற்றனர். அம்மாநாட்டில் பின்வரும் முக்கிய தீர்மானங்கள் நிறைவேற்றப்பட்டன:

- கட்சி உறுப்பினர்கள் பிரித்தானிய அரசு அளித்த விருதுகளையும், பதவிகளையும் ராவ் பகதூர், திவான் பகதூர் போன்ற பட்டங்கள் அனைத்தையும் துறக்க வேண்டும்
- அவர்கள் தங்களது அரசு பதவிகளிலிருந்து விலக வேண்டும்
- அவர்கள் தங்கள் பெயர்களில் உள்ள சாதிப்பின்னொட்டுகளைக் களைய வேண்டும்
- நீதிக்கட்சி திராவிடர் கழகம் என்று அழைக்கப்படும்.

இத்தீர்மானங்கள் நிறைவேற முக்கியக் காரணமாக இருந்த அண்ணாதுரை திராவிடர் கழகத்தின் பொதுச் செயலாளரானார். நீதிக்கட்சியின் உறுப்பினர்களில் மிகப்பெரும்பாலானோர் திராவிடர் கழகத்தில் இணைந்து விட்டனர். பி. டி. ராஜன், மணப்பாறை திருமலைசாமி, பி. பாலசுப்பிரமணியன் போன்றோர் இம்மாற்றத்தை ஏற்றுக்கொள்ளவில்லை. இவர்கள் முதலில் பி. ராமச்சந்திர ரெட்டி தலைமையிலும் பின் பி. டி. ராஜன் தலைமையிலும் செயல்பட்டனர். உண்மையான "நீதிக்கட்சி" தாங்கள் தான் என்றும் அறிவித்தனர்.1952 சட்டமன்றத் தேர்தலில் ஒன்பது இடங்களில் அக்கட்சி போட்டியிட்டது. அதன் வேட்பாளர்களில் பி. டி. இராஜன் மட்டும் வெற்றி பெற்றார். இந்தக் கட்சி அதன் பின்னால் எந்தத் தேர்தல்களிலும் அதிகாரப்பூர்வமாகப் போட்டியிடவில்லை. 1968 இல் தனது பொன்விழா ஆண்டைச் சென்னையில் கொண்டாடிய இக்கட்சி பி. டி. ராஜனின் மரணத்துக்குப் பின்னர் முற்றிலும் செயலற்றுப் போனது.

**கட்சி அமைப்பு:** நீதிக்கட்சி தொடங்கப்பட்டு பல ஆண்டுகளுக்கு முறையான சட்ட அமைப்பின்றி செயல்பட்டது. அக்டோபர் 18, 1917 இல் தி இந்து நாளிதழில் வெளியான அதன் கொள்கை அறிக்கையே கட்சியின் சட்டதிட்டங்களைப் பட்டியலிட்ட ஒரே ஆவணம். அக்டோபர் 1917 இல் கட்சியின் நிருவாகிகள் முதன்முதலாகத் தேர்ந்தெடுக்கப்பட்டனர். ஆற்காடு ராமசாமி முதலியார் கட்சியின் முதல் பொதுச்செயலராகப் பணியாற்றினார். 1920 இல் கட்சியின் சட்ட அமைப்பை உருவாக்கும் பணி தொடங்கியது. டிசம்பர் 19, 1925 இல் கட்சியின் 9வது வருடாந்திர மாநாட்டின்போது அதிகாரப்பூர்வமாக அதன் சட்ட அமைப்பு ஏற்றுக்கொள்ளப்பட்டது.

சென்னை நகரம் நீதிக்கட்சியின் செயல்பாடுகளின் மையமாக இருந்தது. மவுண்ட் சாலையில் அமைந்திருந்த கட்சியின் தலைமையகத்தில் கட்சிக் கூட்டங்கள் நடைபெற்றன. இவ்வலுவலகத்தைத் தவிர சென்னையில் வேறுபல கிளை அலுவலகங்களும் திறக்கப்பட்டன. 1917 இல் அனைத்து மாவட்டத் தலைநகரங்களிலும் அலுவலகங்கள் திறக்கப்பட்டன. சென்னையைத் தளமாகக் கொண்ட தலைவர்கள் அவற்றுக்கு அவ்வப்போது போய் வந்தனர். நீதிக்கட்சிக்கு ஒரு தலைவர், நான்கு துணைத் தலைவர்கள், ஒரு பொதுச் செயலாளர், ஒரு பொருளாளர் மற்றும் 25 செயற்குழு உறுப்பினர்கள் இருந்தனர். 1920 தேர்தலுக்குப்

குறிப்பு

பின்னர் ஐரோப்பிய அரசியல் கட்சிகளைப் போன்று செயல்பட முயற்சிகள் மேற்கொள்ளப்பட்டன. ஒரு தலைமைக் குறடா நியமிக்கப்பட்டு சட்டமன்ற உறுப்பினர்களைக் கொண்டு குழுக்கள் அமைக்கப்பட்டன. கட்சி சட்ட அமைப்பின் 6வது பிரிவின் படி கட்சித் தலைவரே அனைத்து பிராமணரல்லாதோர் அமைப்புகள் மற்றும் கட்சி சட்டமன்ற உறுப்பினர்களின் தன்னிகரற்ற தலைவராக இருந்தார். பிரிவு 14, உறுப்பினர்கள் மற்றும் செயற்குழுவின் பொறுப்புகளை வரையறுத்ததோடு செயற்குழு முடிவுகளைச் செயலாக்கும் பொறுப்பைப் பொதுச் செயலாளருக்கு அளித்தது. 21வது பிரிவு ஒவ்வொரு ஆண்டும் ஒரு மாநில மாநாடு கூட்டப்பட வேண்டுமென்றது. ஆனால் கட்சி செயல்பட்ட 27 ஆண்டுகளில் 16 வருடாந்திர மாநாடுகளே கூட்டப்பட்டன.

**கட்சித் தலைவர்களின் பட்டியல்:**

- தியாகராய செட்டி 1917 ஜூன் 23, 1925
- பனகல் அரசர் 1925 டிசம்பர் 16, 1928
- பி. முனுசாமி நாயுடு ஆகஸ்ட் 6, 1929 ,அக்டோபர் 11, 1932
- பொபிலி அரசர் அக்டோபர் 11, 1932, டிசம்பர் 29, 1938
- ஈ. வே. ருாமசாமி டிசம்பர் 29, 1938 27 ஆகஸ்ட் 1944
- பி. ராமசந்திர ரெட்டி 1944 1945
- பி. டி. ராஜன் 1945

### 12.4.2 நீதிக்கட்சியின் சாதனைகள்

மார்ச் 19, 1923 இல் வெளியான ஒரு கேலிப்படம். முதல் நீதிக்கட்சி அரசின் செயல்பாடுகளை மதிப்பிடுகிறது. மதுவிலக்கு, ஆந்திரப் பல்கலைக்கழகம், நீர்ப்பாசனத் திட்டங்கள், தொழில் துறை வளர்ச்சி, உள்ளாட்சி அமைப்புகளின் அதிகாரங்களை அதிகரித்தல் ஆகியவை மக்களின் நிறைவேறாத எதிர்பார்ப்புகள் என்று குறிப்பிடுகிறது. நீதிக்கட்சி ஆட்சியிலிருந்தபோது நிறைவேற்றிய பல சட்டங்கள் நீடித்த தாக்கம் கொண்டிருந்தன. அவற்றுள் சில தற்காலம் வரை நடைமுறையில் உள்ளன. செப்டம்பர் 16, 1921 இல் நீதிக்கட்சி அரசு முதல் வகுப்புவாரி பிரதிநிதித்துவ அரசாணையை (சூ 613) வெளியிட்டதன் மூலம் இந்திய சட்டமன்ற வரலாற்றில் முதன்முதலில் இட ஒதுக்கீடு முறையை அறிமுகப்படுத்தியது. இதன் பின்னர் சாதிவாரியான இட ஒதுக்கீடு பொதுவான ஒன்றாகிவிட்டது.

டிசம்பர் 18, 1922 இல் முதலில் அறிமுகப்படுத்தப்பட்டு 1925 இல் நிறைவேற்றப்பட்ட சென்னை இந்து சமய அறநிலையத்துறை சட்டம் பல இந்துக் கோவில்களை மாகாண அரசின் கட்டுப்பாட்டில் கொண்டு வந்தது. இச்சட்டமே சென்னை மாநிலத்திலும் தமிழ்நாட்டிலும் இயற்றப்பட்டுள்ள பல இந்து அறநிலைய மற்றும் அறக்கட்டளை

சட்டங்களுக்கு முன்னோடியாகும். தற்கால தமிழ்நாடு அரசு கொள்கையும் இதைப் பின்பற்றியே அமைந்துள்ளது. 1919 இந்திய அரசுச் சட்டம், பெண்கள் சட்டமன்ற உறுப்பினர்களாவதைத் தடை செய்திருந்தது. முதல் நீதிக்கட்சி அரசு ஏப்ரல் 1, 1921 இல் இத்தடையை விலக்கியது. தேர்தலில் வாக்களிக்கவும், சட்டமன்ற உறுப்பினராகவும் பாலின அடிப்படையில் அமைந்த தகுதிகள் நீக்கப்பட்டன. இதன் மூலம் மருத்துவர் முத்துலட்சுமி ரெட்டி 1926 இல் சென்னை சட்டமன்றத்துக்கு நியமனம் செய்யப்படுவதற்கு வழி வகுத்தது. இந்திய சட்டமன்றங்களில் ஒரு பெண் உறுப்பினராவது இதுவே முதல் முறை. இவை தவிர 1922 இல் சட்டமன்றத்தில் பட்டியல் பிரிவினரைக் குறிக்க "பஞ்சமர்" மற்றும் "பறையர்" போன்ற சொற்களைப் பயன்படுத்தக் கூடாதென்றும் "ஆதி திராவிடர்" என்ற பெயரையே அதிகாரப்பூர்வமாகப் பயன்படுத்த வேண்டுமென்றும் நீதிக்கட்சி தீர்மானம் நிறைவேற்றியது.

நீதிக்கட்சி கொண்டு வந்த சென்னை தொடக்கக் கல்வி சட்டம், 1920 ஆண் மற்றும் பெண் குழந்தைகளுக்குக் கட்டாயக் கல்வியை அறிமுகப்படுத்தியது் தொடக்கக் கல்விக்கு நிதி ஒதுக்கீட்டையும் அதிகரித்தது. குழந்தைகளைப் பள்ளிகளிலிருந்து விலக்கிக் கொள்ளும் பெற்றோரைத் தண்டிக்கவும் வழிவகுத்தது. 1934 மற்றும் 1935 ஆம் ஆண்டுகளில் இச்சட்டம் திருத்தப்பட்டது. சென்னைப் பலகலைக்கழகச் சட்டம், 1923 சென்னைப் பல்கலைக்கழகத்தின் நிருவாகக் குழுவை விரிவு படுத்தியதுடன் அதில் பல்வேறு தரப்பினர் இடம்பெறவும் வழிவகுத்தது. 1920 இல் நீதிக்கட்சி அரசு ஆதரவுடன் சென்னை மாநகராட்சியில் மதிய உணவுத் திட்டம் கொண்டுவரப்பட்டது. முதலில் ஆயிரம் விளக்குப் பகுதியில் இருந்த ஒரு மாநகராட்சிப் பள்ளியில் காலை உணவுத் திட்டமாக அறிமுகப்படுத்தப்பட்டது. பின் மேலும் நான்கு பள்ளிகளுக்கு விரிவு படுத்தப்பட்டது. இத்திட்டமே 1960 களில் காமராசரால் அறிமுகப்படுத்தப்பட்டு எம். ஜி. ராமச்சந்திரனால் 1980 களில் விரிவுபடுத்தப்பட்ட சத்துணவுத் திட்டத்தின் முன்னோடியாகும். 1922 இல் இயற்றப்பட்டு 1935 இல் திருத்தப்பட்ட, தொழிற்சாலைகளுக்கு அரசு உதவிச் சட்டம், தொழிற்சாலைகளைத் தொடங்க கடனுதவி வழங்கியது. மலபார் குத்தகைச் சட்டம், 1931 குத்தகைக்காரர்களின் உரிமைகளை வலுப்படுத்தியது.

**பல்கலைக்கழகங்கள்**: நீதிக்கட்சியின் தமிழ் மற்றும் தெலுங்கு உறுப்பினர்களிடையே நிலவிய போட்டி இரு பல்கலைக்கழகங்கள் உருவாகக் காரணமாக அமைந்தது. கட்சி துவக்கப்பட்ட நாட்களிலிருந்து நிலவிய இப்போட்டி முதல் நீதிக்கட்சி அரசில் தெலுங்கு உறுப்பினர்கள் மட்டும் அமைச்சர்களானதால் மேலும் அதிகமானது. ஆந்திரப் பல்கலைக்கழகம் அமைக்க நீண்ட நாட்களாகத் தெலுங்கு தலைவர்கள் கொண்டா வெங்கடபய்யா மற்றும் பட்டாபி சீதாராமையா ஆகியோர் வேண்டி வந்தனர். 1921 இல் நீதிக்கட்சி அரசு இக்கோரிக்கையை நிறைவேற்ற ஒரு முன்மொழிவைத் தயார் செய்தது. சி. நடேச முதலியார்

இதனை எதிர்த்தார். ஆந்திரம் / ஆந்திரப் பலகலைக்கழகம் ஆகியவற்றை வரையறுப்பது கடினமெனத் தமிழ் உறுப்பினர் வாதிட்டனர். அதிருப்தி கொண்டிருந்த ஜே. என். ராமநாதன், ராமநாதபுர அரசர் ராஜேசுவர சேதுபதி ஆகியோரை திருப்திப்படுத்த தியாகராய செட்டி தமிழரான டி. என். சிவஞானம் பிள்ளையை அமைச்சராக்கினார். இதற்குப் பிரதிபலனாக ஆந்திரப் பல்கலைக்கழக சட்டம் தமிழ் உறுப்பினர்களின் ஆதரவுடன் நவம்பர் 6, 1925 இல் நிறைவேற்றப்பட்டது. 1926 இல் ஆந்திரப் பல்கலைக்கழகம் உருவாக்கப்பட்டு சி. ஆர். ரெட்டி அதன் முதல் துணை வேந்தரானார். இதனால் தமிழர்களுக்காகத் தனியாக ஒரு பல்கலைக்கழகம் வேண்டுமென்று கோரிக்கைகள் எழுந்தன. சென்னைப் பல்கலைக்கழகம் பிராமணர் ஆதிக்கத்தில் இருப்பதால் பிராமணரல்லாதோருக்கு அங்கு வாய்ப்புகள் இல்லை என்று சொல்லப்பட்டது. புதிய பல்கலைக்கழகத்துக்கான சாத்தியக்கூறுகளை ஆராய மார்ச் 22, 1926 இல் சிவஞானம் பிள்ளையின் தலைமையில் தமிழ் பல்கலைக்கழகக் குழு ஒன்று அமைக்கப்பட்டது. இதன் பலனாக 1929 இல் அண்ணாமலைப் பல்கலைக்கழகம் துவங்கப்பட்டது. புதிய பல்கலைக்கழகத்துக்குப் பெரிய தொகை ஒன்றை உதவித்தொகையாக வழங்கிய அண்ணாமலை செட்டியாரின் பெயர் இடப்பட்டது.

நீதிக்கட்சியின் இரண்டாவது முதல்வர் பனகல் அரசரின் ஆட்சி காலத்தில் சென்னை நகரின் கட்டமைப்பு வசதிகள் அதிகரிக்கப்பட்டன. குறிப்பாகத் தற்போதைய தியாகராய நகர் பகுதி உருவாக்கப்பட்டது. பனகல் அரசரின் அரசு நகரின் அதிகரித்து வரும் மக்கள் தொகைக்குப் போதிய குடியிருப்பு வசதிகள் செய்து தரச் செப்டம்பர் 7, 1920 அன்று சென்னை நகரத் திட்டச் சட்டத்தை நிறைவேற்றியது. 5 கிமீ நீளமும் 2 கிமீ அகலமும் உடைய நெடுங்குளம் என்ற நீர்நிலை அக்காலத்தில் நகரத்தின் மேற்கு எல்லையில் நுங்கம்பாக்கம் முதல் சைதாப்பேட்டை வரை நீண்டிருந்தது. 1923 இல் இந்நீர்நிலை நீரகற்றப்பட்டு மேடாக்கப்பட்டது.1911 இல் நெடுங்குளத்துக்கு மேற்கே பிரித்தானிய அரசு மாம்பலம் கிராமத்தில் ஒரு தொடருந்து நிலையத்தைக் கட்டியிருந்தது. பனகல் அரசர் 1923 இல் அதன் அருகே ஒரு குடியிருப்புப் பகுதியை உருவாக்கினார். அதற்குத் தியாகராய செட்டியின் நினைவாக “தியாகராய நகர்” (அல்லது தி. நகர்) என்று பெயரிட்டார். பனகல் பூங்கா என்ற பூங்காவைச் சுற்றி தி.நகர் அமைக்கப்பட்டது. இப்புதிய பகுதியின் சாலைகளுக்கும் பிற பகுதிகளுக்கும் நீதிக்கட்சி பிரமுகர்களின் பெயர்கள் இடப்பட்டன. (கான் பகதூர் முஹம்மது உஸ்மான், முகமது ஹபிபுல்லா, ஓ. தணிகாசலம் செட்டியார், நடேச முதலியார், டபிள்யூ. பி. ஏ. சௌந்திரபாண்டியன் நாடார் ஆகியோர் இதில் அடக்கம்). நீதிக்கட்சி அரசுகள் பல குடிசை மாற்றுத் திட்டங்களைச் செயல்படுத்தி மக்கள் தொகை நெருக்கம் மிகுந்த பகுதிகளில் குடியிருப்புப் பகுதிகளையும். பொதுக் குளியலிடங்களையும் கட்டின. 1924 இல் ஆயுர்வேதம், சித்த, யுனானி மருத்தவ முறைகளை ஆராய்ந்து பரப்ப இந்திய மருத்தவப் பள்ளியை நீதிக்கட்சி அரசு நிறுவியது.

**அரசியல் தாக்கம்:** நீதிக்கட்சி சென்னை மாகாணத்தின் முன்னணி பிராமணரல்லாதோர் அரசியல் அமைப்பாகச் செயல்பட்டது. 19 ஆம் நூற்றாண்டின் இறுதி முதலே பிராமணரல்லாதோர் இயக்கங்கள் செயல்பட்டு வந்தாலும் நீதிக்கட்சியே முதல் பிராமணரல்லாதோர் அரசியல் இயக்கமாகும். இரட்டை ஆட்சி முறையின்போது அது நிருவாகத்தில் பங்கேற்றமை சென்னை மாகாணத்தின் படித்த மேட்டுக்குடி மக்களுக்கு அரசுடன் ஒத்துழைப்பதின் முக்கியத்துவத்தை உணர்த்தியது. நீதிக்கட்சியும் திராவிடர் கழகமும் 1967 முதல் தொடர்ச்சியாகத் தமிழ் நாட்டை ஆட்சி புரிந்து வரும் திராவிட முன்னேற்றக் கழகம், அண்ணா திராவிட முன்னேற்றக் கழகம் போன்ற தற்கால திராவிட கட்சிகளின் அரசியல் முன்னோடிகளாகக் கருதப்படுகின்றன.

**சர்ச்சைகள்:** பிராமணரல்லாதோருக்கான அரசியல் அமைப்பாகவே நீதிக்கட்சி தொடங்கப்பட்டது. இதனால் ஆரம்பத்தில் அது பிராமணர்கள் உறுப்பினர்களாவதைத் தடை செய்திருந்தது. ஆனால் ஐரோப்பியர் போன்ற பிற வகுப்பினர்களைப் போலவே பிராமணர்களும் பார்வையாளர்களாகக் கட்சிக் கூட்டங்களில் கலந்துகொள்ள அனுமதிக்கப்பட்டிருந்தனர்.1926 தேர்தல் தோல்விக்குப் பின்னர் இக்கொள்கையைக் கைவிட்டு அனைத்து தரப்பினரையும் கட்சி அனுமதிக்க வேண்டும் என்றும் தேசியவாத நிலையை எடுக்க வேண்டுமென்றும் குரல்கள் எழுந்தன. ஆனால் இக்கோரிக்கைக்கு கடுமையான எதிர்ப்பு (குறிப்பாக ஈ. வே. ராமசாமியின் ஆதரவாளர்களிடமிருந்து) இருந்தது. 1929 இல் நடைபெற்ற ஒரு மும்முனைக் கூட்டத்தில் (நீதிக்கட்சி மற்றுமிரு காங்கிரசல்லாத குழுக்கள்) பிராமணர்கள் கட்சி உறுப்பினர்களாவதற்கு இருந்த தடையை நீக்க ஒரு தீர்மானம் இயற்றப்பட்டது. அக்டோபர் 1929 இல் நெல்லூரில் நடைபெற்ற கட்சியின் பதினோராவது வருடாந்திர மாநாட்டில் கட்சி செயற்குழு இதற்காக ஒரு தீர்மானத்தை முன்வைத்தது. அதனை ஆதரித்து முனுசாமி நாயுடு பின்வருமாறு பேசினார்:

ஒரு குறிப்பிட்ட சாதியினரை நாம் தடை செய்யும் வரை, மாகாணத்தின் அனைத்து தரப்பு மக்களின் பிரதிநிதிகளாக நாம் நம்மைக் கருத முடியாது. நாம் எதிர்பார்ப்பது போல அரசியல் சீர்திருத்தங்கள் ஏற்பட்டு மாகாணங்களுக்குத் தன்னாட்சி வழங்கப்பட்டால், நாம் அனைத்து சாதிகளுக்காகப் பேசும் அமைப்பாக மாறும் நிலையில் இருக்க வேண்டும். நமது அமைப்பின் கொள்கைகளையும் குறிக்கோள்களையும் ஏற்றுக்கொள்ளத் தயாராக இருக்கும் பிராமணரகளை உறுப்பினர்களாக ஏற்றுக் கொள்ள என்ன தயக்கம்?. ஒரு வேளை நாம் தடையை நீக்கினாலும் கூடப் பிராமணர்கள் நம் அமைப்பில் சேராது போகலாம். ஆனால் அதற்குபின் நாம் அவர்களைச் சேர விடாது செய்கிறோம் என்ற குற்றச்சாட்டு இராது. முன்னாள் கல்வி

குறிப்பு

அமைச்சர் ஏ. பி. பாட்ரோ நாயுடுவின் கருத்தை ஆதரித்தார். ஆனால் இத்தீர்மானம் ஈ. வே. ராமசாமியாலும் ஆர். கே. சண்முகம் செட்டியாராலும் கடுமையாக எதிர்க்கப்பட்டதால் தோல்வியடைந்தது. பிராமணர்களை உறுப்பினர்களாக அனுமதிப்பதை எதிர்த்துப் பேசிய ராமசாமி: பிராமணர்களது செயல்பாட்டால் கோபம் கொண்ட பிராமணரல்லாதோர் அதிக அளவில் மெல்ல நீதிக்கட்சியின் பக்கம் திரும்பி வருகிறார்கள். இந்நிலையில் பிராமணர்களைக் கட்சி உறுப்பினர்களாக அனுமதிப்பது முட்டாள்தனம் என்றார். அக்டோபர் 1934 வரை நீதிக்கட்சியில் பிராமணர் உறுப்பினராக இருந்த தடை நீடித்தது. நீதிக்கட்சியுடன் போட்டியிட வேண்டிய தேவையால் காங்கிரசு கட்சி தனது அதிகாரக் கட்டமைப்பில் பல பிராமணரல்லாதோருக்கு இடமளிக்க வேண்டியதாயிற்று. நீதிக்கட்சியின் செயல்பாடுகள் நடப்பில் இருந்த சமூக அடுக்கமைப்பைக் குலைத்ததுடன் பிராமணர் - பிராமணரல்லாதோர் இடையே நிலவிய வெறுப்பினை அதிகரித்தது.

**தேசியவாதம்:** நீதிக்கட்சி பிரித்தானியப் பேரரசுக்கு விசுவாசமாக இருந்தது. தனது ஆரம்ப நாட்களில் ஹோம் ரூல் இயக்கத்தை எதிர்த்தது. இந்தியாவின் நடுவண் நாடாளுமன்றத்துக்கும் உறுப்பினர்களை அனுப்பவில்லை. 1916–20 காலகட்டத்தில் வகுப்புவாரி இட ஒதுக்கீடு பெற்று அரசியல் முறையில் பங்கேற்பதில் தனது கவனத்தை செலுத்தியது. ஒத்துழையாமை இயக்கத்தின்போது மெட்ராஸ் மெயில் போன்ற ஐரோப்பிய ஆதரவு இதழ்களுடன் இணைந்து காந்தியையும் தேசியவாதிகளையும் எதிர்த்தும் சாடியும் வந்தது. ஆனால் 1920 களின் நடுப்பகுதியில் தேசியவாதக் கொள்கைகளைத் தனதாக்கத் தொடங்கியது. காதி மற்றும் சுதேசி இயக்கங்களுக்கு முன் காட்டிய எதிர்ப்பைக் கைவிட்டு ஆதரவளிக்கத் தொடங்கியது. 1925 இல் கட்சி வருடாந்திர மாநாட்டில் உள்ளூர் தொழிற் நிறுவனங்களுக்கு ஆதரவாக ஒரு தீர்மானம் இயற்றியது. இந்த மாற்றம் சென்னை மாகாணத்தில் அதிகரித்து வந்த சுயாட்சி மற்றும் காங்கிரசு கட்சிகளின் செல்வாக்குடன் போட்டி போட நீதிக்கட்சிக்கு உதவியது. ”சுயாட்சி” என்ற சொல் நீதிக்கட்சியின் சட்ட அமைப்பிலும் சேர்க்கப்பட்டது. கட்சியின் சென்னைப் பிரிவு சி. ஆர். ரெட்டியால் இம்மாற்றம் ஏற்பட்டது. நீதிக்கட்சியைப் பொறுத்தவரை சுயாட்சி என்பது முழு விடுதலை அல்ல் பிரித்தானிய மேற்பார்வையின் கீழ் பகுதி தன்னாட்சி உரிமை பெறுவதே. அதன் சட்ட அமைப்பில் “ அமைதியான சட்டத்துக்கு உட்பட்ட முறையில் முயன்று விரைவில் பிரித்தானியப் பேரரசின் ஒரு அங்கமாக இந்தியாவுக்கு தன்னாட்சி பெற முயல வேண்டும் என்று குறிப்பிடப்பட்டிருந்தது.

ஜாலியன்வாலாபாக் படுகொலையை நீதிக்கட்சி கண்டித்ததா என்பது பற்றித் தெளிவான வரலாற்றுப் பதிவுகள் இல்லை. வரலாற்றாளர்களிடையே இதுகுறித்து மாறுபட்ட கருத்துகள் நிலவுகின்றன. தேசியவாதக் கொள்கையை நோக்கி 1920 களில் தொடங்கிய கட்சியின் பயணம் 1930 களில் முனுசாமி நாயுடு மற்றும்

குறிப்பு

பொபிலி அரசரின் தலைமையில் தடைபட்டது. சட்டமறுப்பு இயக்கத்தின்போது பிரித்தானிய அரசின் கடுமையான நடவடிக்கைகளை நீதிக்கட்சி அரசுகள் கண்டிக்கவில்லை. ஆனால் நாடெங்கும் தேசியவாத உணர்ச்சிகள் மிகுந்ததால் காங்கிரசு உள்ளாட்சித் தேர்தல்களில் வெற்றி பெறுவதைக் கண்டபின்னால் 1934 இல் மீண்டும் நீதிக்கட்சி தேசியவாதக் கொள்கைகளைக் கையில் எடுத்தது. காங்கிரசின் செல்வாக்கை எதிர்கொள்ள ஈ. வே. ராமசாமி மற்றும் அவரது சுயமரியாதை இயக்கத்தின் உதவியை நாடியது. 1930களில் நீதிக்கட்சியிலிருந்து தூரச் சென்ற ராமசாமி, அக்கட்சி தனது சோசலிசக் கருத்துகள் நிறைந்த ஈரோட்டு செயல்திட்டத்தை ஏற்றுக் கொண்டவுடன் மீண்டும் அதனுடன் இணைந்து செயல்படத் தொடங்கினார். இப்புதிய திட்டத்தில் மதுவிலக்கு போன்ற காங்கிரசின் கொள்கைகளும் இடம் பெற்றிருந்தன.

1920 இல் ஆட்சிக்கு வந்த நீதிக்கட்சி பிராமணரல்லாத அனைத்து பிரிவினரின் நலனிற்காகச் செயல்படுவதாகக் கூறினாலும் மெல்ல பல சமூகத்தினரின் ஆதரவை இழந்தது. தியாகராய செட்டி மற்றும் பனகல் அரசரின் தலைமையின் கீழ் பிராமணரல்லாத சில உயர் சாதியினரின் கட்சியாக மாறியது பட்டியல் பிரிவினர் மற்றும் முசுலிம்கள் கட்சியை விட்டு விலகினர். முதல் நீதிக்கட்சி அரசினை முசுலிம் சட்டமன்ற உறுப்பினர்கள் முதலில் ஆதரித்தனர் ஆனால் பதவி வழங்கல்களில் ஏற்பட்ட கருத்து வேறுபாட்டால் பின் தங்கள் ஆதரவை விலக்கிக் கொண்டனர். முசுலிம்களின் அதிருப்தி முசுலிம் சட்டமன்ற உறுப்பினர் அப்பாஸ் அலி கானின் பின்வரும் கூற்றால் (1923) விளங்கும்: எனது அனுபவத்தில் பதவி வழங்கும் தருணங்களில் எல்லாம் அவர்கள் நீதிக்கட்சியினர் ஒரு முதலியார், நாயுடு, செட்டியார் அல்லது பிள்ளை சமூகத்தினரையே தெரிவு செய்கிறார்கள். ஒரு இசுலாமியரைத் தேர்வு செய்வதில்லை. இழந்த முசுலிம் ஆதரவை நீதிக்கட்சியால் பின் எப்போதும் திரும்பப் பெற இயலவில்லை. வகுப்புவாரி இட ஒதுக்கீட்டால் கிட்டிய இடங்களில் பெரும்பான்மையை உயர் சாதி இந்துக்களே பிடித்துக் கொண்டதே இதற்குக் காரணம்.

பட்டியல் மக்களுடனான பிரிவும் இக்காலகட்டத்தில் தான் நடந்தது. டி. எம். நாயரின் மரணத்துக்குக் பின் பட்டியல் பிரிவினர் நீதிக்கட்சியில் ஓரங்கட்டப்பட்டனர். புளியந்தோப்பு கலவரங்கள் (பிஅன்சி தொழிற்சாலை வேலை நிறுத்தம்) பிராமணரல்லாத சாதிகளான வெள்ளாளர்கள், பெரி செட்டியார்கள், பலிஜா நாயுடுகள் கம்மா மற்றும் காப்புகள் ஆகியோருக்கும் ஆதி திராவிடர்களுக்கும் இடையேயான உறவு கசக்கக் காரணமாக அமைந்தன. மே 11, 1921 இல் கர்னாடிக் நெசவு ஆலையில் வேலை செய்து வந்த ஆதி திராவிடர்களும் சாதி இந்துகளும் வேலை நிறுத்ததைத் தொடங்கினர். ஜுன் 20 ம் தேதி பங்கிங்காம் ஆலை தொழிலாளர்கள் அவர்களுடன் சேர்ந்து கொண்டனர். ஆனால் நிருவாகம் ஆதி திராவிட தொழிலாளர்களை விரைவில் சமாதானப் படுத்தியதால் அவர்கள் வேலைக்குத் திரும்பினர்.சாதி

குறிப்பு

இந்துக்கள் வேலை நிறுத்தத்தைத் தொடங்கினர். இதனால் இரு பிரிவினர் இடையே பகை ஏற்பட்டது. இதைத் தொடர்ந்து சாதி இந்துக்களுக்கும் காவல்துறைக்கும் ஏற்பட்ட மோதலில் பலர் கொல்லப்பட்டனர். நீதிக்கட்சித் தலைவர்கள் பிரித்தானிய அரசு ஆதி திராவிடர்களுக்கு ஆதரவளிப்பதாகக் குற்றம் சாட்டினர்.ஜ19ஸ ஜஸ்டிஸ் இதழ் பின்வருமாறு எழுதியது: இவ்வளவு மோசமான நிலை உருவாகக் காரணம் தொழில் துறை அரசு அலுவலர்கள் ஆதி திராவிடர்களுக்கு அளவுக்கு அதிகமாகச் செல்லம் கொடுத்ததும் சில காவல்துறை அதிகாரிகள் தங்களை அறியாமலே ஆதி திராவிடர்களை ஊக்குவிப்பதும் தான் எனப் பொது மக்கள் கருதுகின்றனர்.

அக்டோபர் 12 இல் ஓ. தணிகாசல செட்டி இந்தப் பிரச்சனையைச் சென்னை சட்டமன்றத்தில் எழுப்பினார். இதனைத் தொடர்ந்து நீதிக்கட்சி உறுப்பினர்களுக்கும் சென்னை ஆளுனரின் நிருவாகக் குழுவின் சட்டத் துறை உறுப்பினரான எஸ். ஸ்ரீனிவாச ஐயங்கார் என்ற பிராமணர் மற்றும் உள்துறை உறுப்பினரான லயனல் டேவிட்சன் என்ற ஆங்கிலேயருக்கும் இடையே ஒரு காரசாரமான விவாதம் நடந்தது. டேவிட்சன் இவ்விவகாரத்துக்கான மொத்த பொறுப்பும் தொழில் துறை அமைச்சகத்தையே சாரும் என்று குற்றம் சாட்டினார். “இது வேலை நிறுத்தம் செய்பவர்களுக்கும் செய்யாதவர்களுக்குமிடையே நடக்கும் ஒரு தொழிற் பிரச்சனை மட்டுமல்ல. இரு கோஷ்டிகளுக்கிடையே சாதிக் காழ்ப்புணர்வால் நடந்த மோதல்” என்று டேவிட்சன் கூறினார். சட்டமன்றத்தில் ஆதி திராவிடர்களின் பிரதிநிதியான எம். சி. ராஜா டேவிட்சனின் கூற்றை ஆமோதித்தார். மெட்ராஸ் மெயில் இதழில் ஒரு ஆதி திராவிட வாசகர் முன்பு டி. எம். நாயர் பிராமணர்களைக் கண்டித்த அதே பாணியில் நீதிக்கட்சியைக் கண்டித்தார். புளியந்தோப்பு சம்பவங்கள் நடந்து சில காலத்தில் ராஜாவும் ஆதி திராவிடர்களும் நீதிக்கட்சியை விட்டுவிலகினர்.

## 12.5 திராவிட இயக்கம்

திராவிட இயக்கம் என்பது கி.பி 19 ஆம் நூற்றாண்டின் இறுதி மற்றும் 20-ஆம் நூற்றாண்டுகளில் தமிழ்ச் சமுதாயத்தில் உருவாகிய ஒரு வரலாற்று முக்கியத்துவம் வாய்ந்த சமூக மற்றும் அரசியல் இயக்கமாகும். இக் காலகட்டத்தில் சாதாரண மக்களுக்குக் கிடைத்த கல்வி வாய்ப்புக்கள் அவர்களிடையே சமூக உணர்வுகளைத் தட்டி எழுப்பியிருந்தன. இவ்வாறானவர்களிற் சிலர் சாதாரண மக்களில் உரிமைகளுக்காக வாதிட்டதுடன், அக்காலத்தில் இருந்த பிராமண ஆதிக்கத்தையும் எதிர்த்து வந்தனர். நாட்டுக்கு விடுதலை வரும்போது அது பிராமண ஆதிக்கத்தின் கீழ் வருமே ஒழிய அதன் பயன்கள் மக்களுக்குக் கிட்டாது என அவர்கள் நம்பினர். இவ்வாறான கருத்துக்களை முன்வைத்துப் போராடியோரில் அயோத்தி தாசர், இரட்டைமலை சீனிவாசன் போன்றோர் பத்தொன்பதாம் நூற்றாண்டில்

முன்னணியில் இருந்தனர். இருபதாம் நூற்றாண்டில் டி. எம். நாயர், தியாகராசச் செட்டியார், கேசவப் பிள்ளை, நடேச முதலியார் போன்றோர் முன்னணியில் இருந்தனர்.

திராவிட மகாஜன சபை என்பது திராவிட இயக்கத்தை தோற்றுவித்தவரான அயோத்தி தாசர் என்பவரால் கி.பி. 1891 தொடங்கப்பட்டது. அயோத்தி தாசர் 1885 ஆண்டிலேயே திராவிட பாண்டியன் என்னும் இதழைத் தொடங்கினார். அவர் கி.பி. 1886ஆம் ஆண்டில் இந்துக்களில் தீண்டத்தகாதவர்கள் எனப்பட்டவர்கள் இந்துக்கள் அல்லாதவர்கள் என்றார். அவர்கள் யாரும் சாதியற்ற திராவிடர்கள் என்னும் கருத்தையும் முன்வைத்தார். இதனால் இவர் திராவிட கருத்தியலின் முன்னோடி என அறியப்பட்டார். திராவிட மகாஜன சபையை நிறுவி திராவிட அரசியலைத் தொடங்கி வைத்ததால் திராவிட அரசியலின் முன்னோடி எனவும் கூறப்படுகிறார். 1912 ஆம் ஆண்டில் திராவிடர் நலனை முன்வத்து இயக்கம் ஒன்று சென்னையில் தொடங்கப்பட்டது. 1916 ஆம் ஆண்டில் இதன் பெயர் தென்னிந்திய நல உரிமைக் கழகம் என மாற்றப்பட்டது. பொதுவாகவே வைதீக எதிர்ப்பாளர்கள், தமிழர் மத்தியில் நிலவிய சாதிக் கொடுமை முதலியவற்றுக்கு, வைதீகத்தையும், பிராமணரையுமே குற்றஞ்சாட்டினர். வைதீகத்துக்கு முந்திய பண்டைத் தமிழகம் சாதிப் பாகுபாடற்ற சமூகமாக இருந்ததை எடுத்துக்காட்டிய அவர்கள், இனம், மொழி, பண்பாடு ஆகியவற்றை முன்னிலைப்படுத்தி மக்களை அணிதிரட்டினர்

### 12.5.1 திராவிட கொள்கையும், திராவிடர் இயக்கமும்

இராஜாஜி அரசின் மொழிக் கொள்கையின் காரணமாகத் திராவிட இயக்கத்தினர் திராவிட நாடு கோரும் நிலைக்கு வந்தனர். 1940 களின் முதல் பாதியில் உருவான இக் கொள்கை 1944 ஆம் ஆண்டில் இறுதி வடிவம் பெற்றது. பெரியார் தலைமையிலான இயக்கம் திராவிடர் கழகம் எனப் பெயர் மாற்றம் பெற்றதும் இவ்வாண்டிலேயே. இவ்வாண்டில் சேலத்தில் நடைபெற்ற கழக மாநாட்டில் வேறு பல தீர்மானங்களுடன் திராவிட நாடு கோரிக்கையும் முன்வைக்கப்பட்டு நிறைவேற்றப்பட்டது. முழுத் தன்னாட்சி கொண்ட திராவிட நாடு, மத்தியில் கூட்டாட்சி என்பதே இக் கொள்கையின் முக்கிய அம்சமாக இருந்தது. பல துடிப்புள்ள இளைஞர்களையும் இணைத்துக்கொண்டு திராவிடர் கழகம் வளர்ந்து வந்தது. திராவிடர் கழகத்தின் முக்கிய தலைவர்களில் ஒருவராக சி. என். அண்ணாதுரை திகழ்ந்தார். திராவிடர் கழகத்தின் செயற்பாடுகள் சமுதாய மட்டத்திலேயே முனைப்புப் பெற்றிருந்தது. சாதி ஒழிப்பு, மூடநம்பிக்கை ஒழிப்பு, பிராமண ஆதிக்க எதிர்ப்பு, பெண்களின் உரிமைகள் ஆகியவை தொடர்பான விடயங்களில் இவர்கள் தீவிர கவனம் செலுத்தினர். 1949 ஆம் ஆண்டில், பெரியாரின் செயல்பாடுகள் சிலவற்றில் ஏற்பட்ட கருத்து வேறுபாடுகள் காரணமாகத் திராவிடர் கழகம் பிளவுபட்டது. அண்ணாதுரையின் தலைமையில் பெருமளவினர்

**குறிப்பு**

திராவிடர் கழகத்திலிருந்து விலகிப் புதிய இயக்கமொன்றைத் தொடங்கினர். திராவிட முன்னேற்றக் கழகம் (திமுக) என்று பெயரிடப்பட்ட இந்த இயக்கத்துக்கு அண்ணாதுரை தலைமை தாங்கினார் திராவிடக் கட்சிகள் தமிழகத்தின் முக்கிய கட்சிகளின் அரசியல் குடும்பமாக கருதப்படுகின்றது. இக்கட்சிகள் பெரும்பாலும் பெரியாரின் திராவிட சுயமரியாதை இயக்கத்தின் வழியில் பிறந்தவை. சாதி வேற்றுமையை கலைப்பதற்காக அமைக்கப்பட்ட இக்கழகங்களும் கட்சிகளும் பின்னர் ஆரிய ஆதிக்கத்தை எதிர்த்து போராடும் கட்சிகளாக வளர்ந்தன.

### 12.5.2 திராவிடர் இயக்கத்தின் தமிழ் வளர்ச்சி

சங்க காலத்தில் அகம், புறப் பாடல்களில் தங்களது உணர்வுகளை வெளிப்படுத்திய கவிஞர்களும், பாடைப்பாளர்களும் பிற்காலத்திலும், காப்பியக் காலம் மற்றும் இடைக் காலத்திலும் தங்களின் பாதைகளை மாற்றிக் கொண்டனர். தொடர்ந்து தற்காலத்தில் தான் இலக்கியத்தை மக்களின் ஊடகமாக மாற்றினர். இந்நிலையில் மக்களின் வாழ்வியலின் எதார்த்தங்களை இலக்கியங்களில் வெளிக் கொணரும் போக்கும் வெளிப்பட்டது. இத்தகைய மறுமலர்ச்சிக்கான மாற்றித்திற்கு அடிப்படைக் காரணம் திராவிட இயக்கம் என்றால் அது மிகையாகாது. இருபதாம் நூற்றாண்டில் திராவிட இயக்கம் தமிழகத்தில் மாபெறும் சிந்தனை மாற்றத்திற்கு அடித்தளமிட்டது என்பது வரலாறு. சமூகநீதி, தன்மான வாழ்வு, பெண் சமத்துவம், வகுப்புவாரி உரிமை, ஜனநாயக உணர்வு, கல்வியின் இன்றியமையாமை ஆகியவை தழைக்க வழிகண்ட முதல் இயக்கம் திராவிட இயக்கம் என்பதை தமிழர்கள் மறந்துவிடக் கூடாது. இந்த இயக்கத்தின் தமிழ்ப் பணியானது தமிழருடைய சமுதாயச் சிந்தனையை அறிவதற்கு சமுதாய, இன, வரலாற்று வழியாக நமக்குப் பெரிதும் உதவுகிறது. தமிழ் இலக்கிய வளர்ச்சியில் இந்த நூற்றாண்டில் உண்டான விழிப்புணர்வுக்கு திராவிட இயக்கம் தான் முழு முதற்காரணமாகும்.

திராவிட இயக்க எழுத்தாளர்களால் தமிழ் இலக்கியம், மொழி ஆகிய துறைகளில் புதுமை மிகு எழுச்சி உண்டாயிற்று. எளிமையும், கருத்துப் புலப்பாட்டுத் தன்மையும் காணப்பட்டன. சமுதாயம், பண்பாடு, கலை ஆகிய துறைகளிலும் பகுத்தறிவை அளவுக் கோலாகக் கொண்டு காணுகின்ற வழக்கத்தை திராவிட இயக்கத்திகனர் ஏற்படுத்தினர். தமிழர்கள் தங்களுடைய கடந்த கால வரலாற்றை அறிய வேண்டும் என்ற ஆவலின் மேலிடலால் தமிழும் புத்துயிர் பெற்றது. சாதிகளை, மூடப்பழக்கங்களை, சமய இலக்கியங்களின குறைபாடுகளை, பெண்ணிய ஏற்றத் தாழ்வுகள், பகுத்தறிவின் துணை கொண்டு மரபுகளைக் கட்டுடைத்தல் என்ற தூய்மைப் பணி இலக்கியம் மற்றும் மொழி வழியே திறம்பட நடைபெற்றது. இன்றைய தமிழகத்தில் உள்ள அனைத்து மக்களிடையேயும், பிரிவுகளிடையேயும் பிற அமைப்புகளிலும் பெரியாரின் பகுத்தறிவுக் கொள்கைகள் நேரிடையாகவோ, மறைமுகமாகவோ

ஊடுருவி இருப்பதை மறுக்க முடியாது. ஆகவே பெரியாரின் கருத்துகள் புகாத இடமேயில்லை என்று தான் கூறவேண்டும். கலைத்துறை, இலக்கியத்துறை போன்ற பல்வேறு துறைகளிலும் இவரது கருத்துக்களின் செல்வாக்கை உணராலம்.

தமிழக மக்களுக்குத் தமிழ் உணர்ச்சி வளர வழிகோலியவை சுயமரியாதை இயக்கமும் திராவிட இயக்கமும் ஆகும். தமிழ் முதன் முதலாக மக்கள் மயமானது இவர்களின் முயற்சியால் என்ற டாக்டர் பொற்கோ அவர்களின் கருத்து உணரத்தக்கது. இலக்கியங்களையும், பாடு பொருள்களையும் மொழி என்று கருதிய நிலை மாறி, பாடு பொருள்களுக்கே மொழிதான் இன்றியமையாதது என்ற தெளிவான நிலை கால்டுவெல் அவர்களின் காலத்திற்குப் பின்பு தான் வேரூன்றியது. ஆனால் இலக்கியங்களில் இருந்த பாடுபொருளில் மிகப் பெரிய மாற்றத்தையும் திருப்பத்தையும் உண்டாக்கியது திராவிட இயக்கம்.

திராவிடர்களின் வேதம் திருக்குறள் என்றதோடு திருக்குறளுக்காக 1948 ஆம் ஆண்டு மாநாடு கூட்டினார். அதன் மூலம் திருக்குறளின் பெருமையை மக்கள் உணரும்படி செய்தார். இதனால் தமிழர்களிடையே இன உணர்வும் பண்பாட்டு உணர்வும் மேலோங்கியது. புனிதமானது என்பதற்காக எதையும் ஆய்ந்தறியாமல் ஏற்றுக் கொள்ள வேண்டாம். நன்மையானது, அனைவருக்கும் தேவையானது. காலத்திற்கு ஏற்றது என்று அளந்து பார்த்து ஏற்றுக் கொள்ளுங்கள் என்று அறிவுறுத்தினார். எத்தனை முறை இறைத்தாலும் மீண்டும் நச்சு நீரே கிணற்றில் சுரக்கும் என்றால் அத்தகைய கிணற்றை தூர்த்து மூடி விடுவதே அறிவுடைமை. அதே போல் ஏழ்மைக்கும் கீழ்தைக்கும் ஊற்றாக உள்ள மதக் கிணற்றை தூர்த்து மூடிவிட வேண்டும் என்று பெரியார் தெளிவுபடுத்தினார்.

இந்து சாத்திரங்களும், புராணங்களும், சடங்குகளும் மக்கள் இனத்தின் சுய சிந்தனையை, துணிச்சிந்தனையை, துணிச்சான முயற்சியை, தன்னம்பிக்கையே, தோழமை உணர்வை சமத்துவப் போக்கை முளையிலேயே நசுக்கி வருவதைப் பகுத்தறிவு இயக்கத்தைப் போல வேறு எந்த இயக்கமும் வெளிப்படுத்தவில்லை என்றே கூறலாம். தமிழரின் பண்பாட்டை, நாகரிகத்தை இன ஒற்றுமையை அழித்துக் கொண்டிருக்கும் பக்தி இலக்கியங்களை நாம் தள்ளி வைக்க வேண்டுமென்றும் மனைவி இருக்க வேண்டிய இடத்தில் மட்டமான வேறொருத்தியை வைத்து வணங்கி வருகிறோம். நமது இலக்கியப் பாதை இப்படியே இருந்தால் நாளைய உலகம் நம்மைப் பார்த்துக் கைகொட்டிச் சிரிக்கும். நம் கவிஞர்கள் படைப்பாளர்கள் தெரியாமல் செய்து விட்ட மூட இலக்கியப் பாதையை மூடி புதிய பகுத்தறிவுப் பாதைக்கு உறுதுணையாக இருப்போம் என்றார்.

அறிவியல் வளர்ச்சியை உள்ளடக்கிய இலக்கியங்களைப் படைப்போம். பகுத்தறிவையும் அறவியலையும் கலந்து

குறிப்பு

இலக்கியங்களைப் படைக்க வேண்டுமென்று பெரியார் அறிவுறுத்தினார். பெரியார் அய்ம்பது ஆண்டுகளுக்கு மேலாக தம் இடையறாத சுற்றுப் பயணத்தின் மூலம் தமிழகத்தின் அனைத்து இடங்களிலும் தமது பகுத்தறிவு கருத்துகளை முழங்கினார். அதிலும் மக்கள் விரும்பாததும், வெறுக்கக் கூடியதுமான கருத்துகளையும், அவர்கள் உயிரினும் மேலாக நம்பித் தலைமுறை தலைமுறையாகப் பின்பற்றி வரும் புராண வரும் புராண, இதிகாசங்களையும், பழக்க வழக்கங்களையும் அவர்கள் விரும்பும் வண்ணம் எடுத்துரைத்தார். எந்த மொழி அரசியல் மொழியாக விளங்குமோ அந்த மொழிதான் மக்கள் மொழியாக விளங்கும் என்பார். மு.வ. இந்தக் கருத்துக்கு ஏற்ப திராவிட இயக்கம் தாய் மொழியாகிய தமிழின் வாயிலாக எண்ணற்ற இலக்கியங்களைத் தமிழ் சமுதாயத்திற்கு படைத்தளிக்க உதவியது.

கலையும் இலக்கியமும் மக்களின் உணர்வுகளோடு ஒன்றி வாழ்வில் இன்பத்தையும் மறுமலர்ச்சியையும் தரும் அற்புதப் பெட்டகமாகும். அதனால் தான் திராவிட இயக்கம் மேற்கண்ட இரண்டையும் முதன்மைக் கருவியாகக் கொண்டு தனது கொள்கைகளை மக்களிடம் எடுத்துச் சென்றது. அதற்கென்று திராவிட இயக்கத்தினரால் கொள்கைகளைப் பரப்புவதற்கென்று ஏராளமான நாளேடுகளும், திங்களிதழ்களும், கிழமை இதழ்களும் அவ்வப்போது வெளிவந்தன. இவ்வாறு தமிழகத்தில் புதிய சிந்தனைகளுக்கு இலக்கியங்கள் வழியாக வடிவம் தந்தனர். மக்களின் நலன்களைப் பாதுகாக்கும் பொருட்டு பகுத்தறிவு சார்ந்த இலக்கியக் கருத்துருக்கள் படைத்தனர். அவைகளில் மக்கள் அனைவரும் சமம், அனைவருக்கும் பொது என்ற உயரிய சிந்தனைகளை மலரச் செய்தனர்.

**உங்கள் முன்னேற்றத்தைச் சரிபார்க்கவும்**

1. திராவிட மகாஜன சபையைத் தோற்றுவித்தவர் யார்?
2. திராவிட சங்க விடுதி எந்த ஆண்டுத் தோற்றுவிக்கப்பட்டது?

## 12.6 உங்கள் முன்னேற்றத்தைச் சரிபார்க்கும் வினாக்களுக்கான விடைகள்

1. திராவிட மகாஜன சபை என்பது திராவிட இயக்கத்தை தோற்றுவித்தவரான அயோத்தி தாசர் என்பவரால் கி.பி. 1891 தொடங்கப்பட்டது
2. திராவிட சங்க விடுதி 1916ம் ஆண்டுத் தோற்றுவிக்கப்பட்டது

குறிப்பு

## 12.7 சுருக்கவுரை

- திராவிட முன்னேற்றக் கழகம் (திமுக) என்று பெயரிடப்பட்ட இந்த இயக்கத்துக்கு அண்ணாதுரை தலைமை தாங்கினார் திராவிடக் கட்சிகள் தமிழகத்தின் முக்கிய கட்சிகளின் அரசியல் குடும்பமாக கருதப்படுகின்றது.
- இக்கட்சிகள் பெரும்பாலும் பெரியாரின் திராவிட சுயமரியாதை இயக்கத்தின் வழியில் பிறந்தவை. சாதி வேற்றுமையை கலைப்பதற்காக அமைக்கப்பட்ட இக்கழகங்களும் கட்சிகளும் பின்னர் ஆரிய ஆதிக்கத்தை எதிர்த்து போராடும் கட்சிகளாக வளர்ந்தன.
- 1912-ல் டாக்டர் சி.நடேசனாரின் முயற்சியால் தோற்றுவிக்கப்பட்டது மெட்ராஸ் யுனைடெட் லீக் அதுவே 1913 முதல் பிராமணர் அல்லாதாரைக் குறிக்க திராவிடர் சங்கம் என்று புதுப் பெயர் பெற்றது.
- 1916-ல் டி.எம்.நாயர், தியாகராயர் உள்ளிட்டோர் முன்னின்று தொடங்கிய தென்னிந்திய நலவுரிமைச் சங்கம், நீதிக் கட்சியாக அழைக்கப்பெற்றது. நீதிக் கட்சி திராவிடர் கழகம் ஆனது. திராவிடர் கழகத்திலிருந்து திமுகவும் அதிலிருந்து அதிமுகவும் உருவாயின. ஒட்டுமொத்தமாக இவற்றை ‘திராவிடர் இயக்கம்’ என்று குறிக்கப்படுகின்றுத
- தென்னிந்திய சுதந்திர கூட்டமைப்பு 1927 சென்னையில் நடைபெற்ற காங்கிரஸ் கூட்டத்தில் தான் முதன் முறையாகப் பூரண சுதந்திரமே இந்தியாவின் குறிக்கோள் என அறிவிக்கப்பட்டது.
- அடுத்த ஆண்டு கல்கத்தாவில் நடைபெற்ற காங்கிரஸ் கூட்டத்தில் மக்கள் பூரண சுதந்திரப் பிரச்சாரத்தில் ஈடுபட வேண்டுமென்றும், 1929 இறுதிக்குள் இந்தியாவுக்கு டொமினியன் அந்தஸ்து வழங்கப்படாவிடில் காங்கிரஸ் பூரண சுதந்திரம் கோரிப் போராடலாமென்று தீர்மானம் நிறைவேற்றப்பட்டது.
- தமிழ்நாட்டில் ராஜகோபாலாச்சாரி மீண்டும் அரசியலில் தீவிரமாக ஈடுபடலானார். தொடக்கப்படவிருந்த போராட்டத்துக்கு மக்களைத் தயார்படுத்த தமிழ்நாடு முழுவதும் சுற்றுப்பயணம் செய்தார்.
- அவர். 1930 ஜனவரி 26ஆம் தேதி தேசமெங்கும் பூரண சுதந்திர நாள் கொண்டாடப்பட்ட போது தமிழ்நாட்டில் ஒவ்வொரு குடும்பத்திலும் ஊர்தோறும் அந்நாள் கொண்டாடப்பட வேண்டும்

என்று ராஜகோபாலாச்சாரி பத்திரிகைகளில் வேண்டுகோள் விடுத்தார்.



- நீதிக்கட்சி இந்திய விடுதலைப் போராட்டத்தில் பங்கேற்காமல் பிராமணர் அல்லாதார் நலன் காக்கும் இயக்கத்தில் தன்னை ஈடுபடுத்திக் கொண்டது. அதற்குக் காரணம் இந்தியாவுக்கு சுதந்திரம் கிடைத்தால் ஆட்சி ஆங்கிலேயரிடமிருந்த பிராமணர்களுக்கு மாறுமேயன்றி முழு மக்களாட்சியாகாது என்று அக்கட்சி கருதியதேயாகும்.
- மாண்டேகு-செம்ஸ்போர் சீர்திருத்தம் கொண்டு வந்த இரட்டை ஆட்சி முறையை காங்கிரஸ் நிராகரித்தது. ஆனால் நீதிக்கட்சி அதை வரவேற்று பிரிட்டிஷ் ஆட்சிக்கு ஆதரவு அளித்தது.

.

## 12.8 முக்கிய கருத்துப்படிமங்கள்

- பிராமணர் அல்லாதோர் சங்கம்
- நீதிக் கட்சி
- திராவிட இயக்கம்

## 12.9 சுயமதிப்பீட்டு பயிற்சி வினாக்கள்

**குறுகிய வினாக்களுக்கு விடையளிக்கவும்**

1. சென்னை மாகாண சங்கத்தைப் பற்றி சிறுகுறிப்பு வரைக?
2. பிராமணர் அல்லாதோர் சங்கம் விவரிக்கவும்?

**விரிவான வினாக்களுக்கு விடையளிக்கவும்**

1. திராவிட இயக்கத்தின் தமிழ் வளர்ச்சியைப் பற்றி கட்டுரை வரைக?
2. நீதிக்கட்சியின் கட்டமைப்புகளைப் பற்றி மதிப்படுக?

## 12.10 மேலும் படிக்க

- ஐயங்கார்,சீனிவாச்ஃ. வு (2001), *தமிழர்களின் வரலாறு: ஆரம்ப காலத்திலிருந்து 600 கி.பி வரை.* டெல்லி
- கிருஸ்ணசுவாமி.அ, (1977) விஜயநகரபப் பேரரசின் வரலாறு (கிபி1525 வரை) தமிழ்நாட்டுப் பாடநூல் நிறுவனம், அண்ணாமலைநகர்.
- சர்மா,சு.ளு. (2006). *பண்டைய இந்தியாவின் முந்தைய காலம்.* ஆக்ஸ்ஃபோர்ட் யுனிவர்சிட்டி பிரஸ்.

- சாஸ்திரி, ராமசாமி. (2002) *தமிழர்கள்: மக்கள், அவர்களின் வரலாறு மற்றும் கலாச்சாரம்.* புதுடெல்லி, காஸ்மோ பப்ளிகேஷன்ஸ்
- சிராஜீத்தின, (2010), *தமிழ்நாட்டு வரலாறு (கி.பி. 1987 வரை),* பாவை பப்ளிகேசன், சென்னை
- தேவநேயப்பாவணர். (1992) *பண்டைத் தமிழர் நாகரிகமும் பண்பாடும்*, கழக வெளியீடு சென்னை
- மாதவன்,சித்ரா, (2005), *தமிழ்நாட்டின் வரலாறு மற்றும் கலாச்சாரம்: தொகுதி-1 (கி.பி.1310 வரை).* டெல்லி


குறிப்பு

குறிப்பு

# அலகு XIII

## டி எம் நாயர் - சி நடேசமுதலியார் - பி. தியாகராயச்செட்டியார் - ஈ.வெரா பெரியார் - ஏ.டி பன்னீர் செல்வம்



## 13.0 முன்னுரை

நீதிக் கட்சியைத் தோற்றுவித்தவர்களில் டாக்டர் நடேசனார், சர். பிட்டி தியாகராயருக்குப் பின் மூன்றாவது பெரிய தலைவர் தாரவார்ட் மாதவன் நாயர் ஆவார். கேரளாவின் பாலக்காடு அருகே உள்ள திருருக்குப் பக்கம் உள்ள தாரவார்ட்டில் சங்கரன் நாயரின் மகனாகப் பிறந்தார். எல்லாப் பாடங்களிலும், எல்லாத் தேர்வுகளிலும் முதலிடத்தில் தேறிய நாயர், சென்னை மருத்துவக் கல்லூரியிலும், பின்பு இங்கிலாந்திலும் மருத்துவம் பயின்று விறிசிவி என்ற உயர்ந்த பட்டம் பெற்றார்.

நீதிக் கட்சி உருவாவதற்குக் காரணமான முதல் மூவருள் முதல்வர் சி.நடேசனார். 1875-ல் பிறந்த இவருடைய பிறந்த நாளும் மாதமும் இன்னதென்று தெரியவில்லை. நடேசனார் தனது சிறு பருவத்தில் திண்ணைப் பள்ளிக்கூடத்தில் சேர்க்கப்பட்டார். அக்காலத்தில்

சென்னையில் தெலுங்கைப் பயிற்சி மொழியாகக் கொண்ட பள்ளிகளே அதிகமாக இருந்தன என்பதால், நடேசனாரும் தெலுங்கு மொழி மூலமாகவே கல்வி கற்றார். அம்மொழியிலேயே சென்னைப் பல்கலைக்கழகத்தில் பட்டமும் பெற்றார். பிறகு, மருத்துவக் கல்லூரியில் சேர்ந்து படித்தார். அக்காலத்தில், எம்பிசிஎம் என்பதே மருத்துவப் பட்டத்தில் முதல்தரப் பட்டம். இப்பட்டம் பெற நடேசனார் பல முறை முயன்றும் முடியவில்லை. எல்எம்எஸ் என்ற மருத்துவப் பட்டத்தைப் பெற்றே அவரால் மருத்துவராக முடிந்தது என்றாலும் வைத்திய நிபுணர் என்றும், கைராசிக்காரர் என்றும் மக்களிடம் அவர் நன்மதிப்பைப் பெற்றார்.

வெள்ளுடை வேந்தர் சர் பி. தியாகராய செட்டி என்னும் பிட்டி தியாகராயர் (ஏப்ரல் 27, 1852 - ஜூன் 23, 1925) நீதிக்கட்சியின் நிறுவனர்களுள் ஒருவராவார். திராவிட இயக்கத்தில் மூத்த தலைவர்களில் ஒருவராகப் போற்றப்படுபவர். இருபதாம் நூற்றாண்டின் முதல் காற்பகுதியில் சென்னை மாகாணத்தின் முக்கிய அரசியல் தலைவராக விளங்கிய இவர் தொழிலதிபராகவும் பெயர்பெற்றிருந்தார். 1916 இல் பிராமணரல்லாத சாதியனரின் நலனுக்காக குரல் கொடுக்க டாக்டர் டி. எம். நாயருடன் சேர்ந்து நீதிக்கட்சியைத் தொடங்கினார். சென்னை சட்டமன்றத்துக்கு முதன் முதலாக 1920இல் நடைபெற்ற தேர்தலில் நீதிக்கட்சி வெற்றிபெற்று, முதலமைச்சராகும் வாய்ப்பு இவருக்குக் கிடைத்தது.

திருவாரூர் அருகேயுள்ள பெரும்பண்ணையூரில் செல்வபுரத்தில் தாமரைச்செல்வன் – ரத்தினம்மாள் தம்பதியரின் மூன்றாவது மகனாக பிறந்தவர் பன்னீர்செல்வம். தந்தையின் உடல்நலக்குறைவால் படிப்பைத் தொடர முடியாமல் ரயில்வேயில் அலுவலக கிளர்க்காக பணியில் சேர்ந்தார். பின்னாளில் அந்த வேலையை விட்டு விவசாயம் செய்தார். பள்ளிப் படிப்பை முடித்ததும் பொன்னுபாப்பம்மாள் என்பவரை திருமணம் செய்துக்கொண்டார். அதன்பின், மீண்டும் கல்லூரியில் சேர்ந்து படிப்பை தொடர்ந்தவர் இங்கிலாந்தின் கேம்பிரிட்ஜ் பல்கலைக்கழகத்தில் சட்டம் பயின்றார். 1912 சனவரி மாதம் பட்டம் பெற்றுக்கொண்டு வழக்கறிஞராக சென்னை மாகாணத்துக்கு வந்தவர், சென்னை மாகாண உயர்நீதிமன்றத்தில் வழக்கறிஞராக தன்னை பதிவு செய்துக்கொண்டார். தஞ்சையில் வழக்கறிஞராகத் தொடர்ந்து தொழில் நடத்தினார்.

## 13.1 நோக்கம்

- டி.எம் நாயரின் மருத்துவத் தொழில் செய்வதை ஒழுங்குபடுத்துவதற்கான செயல்பாடுகளைப் பற்றி அறிந்துக் கொள்ள முடிகின்றது

குறிப்பு

- சி.நடேசமுதலியார் வைத்திய நிபுணர் என்றும், கைராசிக்காரர் என்றும் மக்களிடம் அவர் நன்மதிப்பைப் பெற்றதைப் .பற்றி அறிந்துக் கொள்ள முடிகின்றது
- பி.தியாகராயச்செட்டியார் திராவிட இயக்கத்தில் மூத்த தலைவர்களில் ஒருவராகப் போற்றப்படுபவர் என்பதைப் பற்றி அறிந்துக் கொள்ள முடிகின்றது
- ஈ.வெரா பெரியரின் பிராமணல்லாதோர் இயக்கம் பற்றி அறிந்துக் கொள்ள முடிகின்றது
- ஏ.டி பன்னீர் செல்வம் சென்னை மாகாண உயர்நீதிமன்றத்தில் வழக்கறிஞராக தன்னை பதிவு செய்துக்கொண்டார் என்பதைப் பற்றி அறிந்துக் கொள்ள முடிகின்றது

## 13.2 டி எம் நாயர்

நீதிக் கட்சியைத் தோற்றுவித்தவர்களில் டாக்டர் நடேசனார், சர். பிட்டி தியாகராயருக்குப் பின் மூன்றாவது பெரிய தலைவர் தாரவார்ட் மாதவன் நாயர் ஆவார். கேரளாவின் பாலக்காடு அருகே உள்ள திரூருக்குப் பக்கம் உள்ள தாரவார்ட்டில் சங்கரன் நாயரின் மகனாகப் பிறந்தார். எல்லாப் பாடங்களிலும், எல்லாத் தேர்வுகளிலும் முதலிடத்தில் தேறிய நாயர், சென்னை மருத்துவக் கல்லூரியிலும், பின்பு இங்கிலாந்திலும் மருத்துவம் பயின்று விறிசிவி என்ற உயர்ந்த பட்டம் பெற்றார். பின்பு பிரான்சிலும் பயின்று நுவே மருத்துவத்தில் பட்டமும், எடின்பரோ பல்கலையில் வி.ஞி.யும் படித்து மருத்துவத்தில் சாதனை படைத்தார். சென்னை திரும்பி "யுவெை ளுநிவழை" என்ற சென்னை ராஜதானியின் முதல் மருத்துவ இதழை நடத்தினார். பொது வாழ்வில் தீவிர ஈடுபாடு கொண்டு காங்கிரசில் பணியாற்றிய டாக்டர் நாயர் 1904 முதல் 1916 ஆவது ஆண்டு வரை மாநகராட்சி உறுப்பினராகப் பணியாற்றினார். அவர் காலத்தில் ஆயனசயள ஆநனஉையட சுநபளைவசயவழைெ யுஉவ எனும் சட்டத்தைக் கொண்டு வந்து மருத்துவத் தொழில் செய்வதை ஒழுங்குபடுத்த வகை செய்தார். ஆறரை அடி உயரமும், கம்பீரத் தோற்றமும் கொண்ட டாக்டர் நாயரின் பொது வாழ்வில் சந்தேகம் இல்லாமலும், சுயமரியாதையோடும் பணியாற்றினார். 1908ஆம் ஆண்டு சென்னை திருவல்லிக்கேணி பார்த்த சாரதிக் கோவில் குளத்திற்கு வரியில்லாமல் தண்ணீர் விட வேண்டுமென்ற அன்றைய மாநகரத் தந்தை தியாக ராயர் தீர்மானத்தை எதிர்த்த நாயர் அப்படி செய்தால் மிகுந்த வருமான இழப்பும், தவறான முன்னுதாரண மாகவும் ஆகிவிடும் என்றார். சிலர் இதற்காக அவரைக் கடுமையாக விமர்சித்தும், பதவி விலக வேண்டும் என்றும் எழுதியும், பேசியும் வந்ததை அறிந்த டாக்டர் நாயர் நேர்மையாகவும், நாணயமாகவும் பாடுபடுவர் களுக்கு சென்னை மாநகராட்சியில் இடமில்லை என்று கூறி பதவி விலகினார்.

காங்கிரசில் இருந்த டாக்டர் நாயர் 1915இல் டில்லி இம்பீரியல் சட்டமன்றத்திற்குத் தேர்ந்தெடுக்க நடந்த தேர்தலில் தோல்வியுற்றதே

அவரது பொது வாழ்வில் அவரை நீதிக் கட்சியின் பக்கம் திரும்ப வைத்தது. அப்போது டாக்டர் நடேசன், சர்.பிட்டி தியாகராயர் ஆகியோர் டாக்டர் நாயரைச் சந்தித்து பார்ப்பனரல்லாதார் இயக்கத்தில் சேரவற்புறுத்தி அவரை இயக்கத்தில் சேர்த்தனர். டாக்டர் அன்னிபெசன்ட் பற்றியும், அவரின் நோக்கம் பற்றியும், அவரின் சர்ச்சைக்குரிய நடவடிக்கை பற்றியும் "ஆயனயஅ டீநளயவெ" என்ற நூலை எழுதி ர்பைபபை டீழவாயஅள நிறுவனத்தால் வெளியிடச் செய்தார். இதனால் கோப முற்ற பெசன்ட் தாக்கல் செய்த வழக்கை எதிர்கொண்டு வெற்றி பெற்றார். 10-11-1917 அன்று மாண்டேகு - செம்ஸ் போர்டு சென்னை வந்து புதிய ஆட்சி அமைப்பது பற்றி பல்வேறு கட்சித் தலைவர்களைச் சந்திக்க வந்த போது டாக்டர் நாயர், நடேசனார், சர். பிட்டி தியாகராயர் ஆகியோரைச் சந்தித்து ழேஉ டீசயாஅைை சுநளநசஎயவழைெ பற்றிப் பேசினர். ஆனால் அவர்கள் அதைப் பற்றி பெரிதாக அக்கறை காட்டவில்லை. இதன் பின்னணியில் சர்.சி.பி.ராமசாமி அய்யரும்,பெசன்ட் அம்மையாரும்இருந்தார்கள்.

டாக்டர் நாயர் இது பற்றி வலியுறுத்த இங்கிலாந்து சென்றார். ஆனால் அவர் எந்தப் பொதுக் கூட்டத்திலும் லண்டனில் பேசக்கூடாது என்று காங்கிரசாரும், சுயராஜ்யக் கட்சியினரும் நெருக்கடி தந்ததை முறியடித்து வகுப்பு வாரிப் பிரதிநிதித்துவத்தின் அவசியம் பற்றி வலியுறுத்தினார். சுயராஜ்யம் பெறுவதே நம் லட்சியம் என்று காங்கிரஸ்காரர்கள் சொன்னபோது, ஒடுக்கப்பட்ட, பிற்படுத்தப்பட்ட, தாழ்த்தப்பட்ட மக்கள் சரிசமமாக ஆட்சியில் பங்கு பெற்று சரிசமாக வாழ்வதே உண்மை யான சுயராஜ்ஜியம் என்று தன் கம்பீரக் குரலால் கர்ஜனை புரிந்தவர் டாக்டர் நாயர். ஒடுக்கப்பட்ட, தாழ்த்தப்பட்ட மக்கள் பங்களிப் பில்லாமல் நீதிக்கட்சி வேரூன்ற முடியாது என்ற நாயர் 7-10-1917இல் சென்னை சேத்துப்பட்டில் நடைபெற்ற தாழ்த்தப்பட்டோர் மாநாட்டில் ஆற்றிய வீர உரையால் சென்னை வாழ் தாழ்த்தப்பட்ட இயக்க நிர்வாகிகள் பெருவாரியாக நீதிக் கட்சியை ஆதரிக்க முன் வந்தனர். 1910இல் அயோத்திதாசர் நாயரின் பணிகளைப் பாராட்டி எழுதியுள்ளார் எம்.சி. ராஜா குறை கூறாத ஒரே நீதிக் கட்சித் தலைவர் நம் நாயரே. நீதிக்கட்சி 1920இல் ஆட்சியைப் பிடிப்பதற்கு நாயரின் பணி அடித்தளமிட்டது. காங்கிரசிலிருந்து விலகி தீவிரமாக நீதிக் கட்சியை ஆதரித்து வந்ததற்காக டாக்டர் நாயரை திரு.வி.க. தன் தேசபக்தனில் திட்டித்தீர்த்தார். "தேசிய கவி" பாரதியும் நாயரை சகட்டுமேனிக்கு விமர்சித்து அவரை வகுப்பு வாதி என்றார். இதன் மூலம் நாயரின் இயக்கப்பற்று வெளிப்படும்.

1918இல் இங்கிலாந்து நாடாளுமன்றத்தில் தன்னந்தனியாக பார்ப்பனரல்லாதார் சமூக ரீதியிலும், அரசியல் ரீதியாகவும் எவ்வாறு ஒடுக்கப்படுகின்றனர் என்பது பற்றி விரிவாக விளக்கினார். 1919இல் மீண்டும் தன் நியாயமான வகுப்புரிமைக் கொள்கையை வலியுறுத்த லண்டன் நாடாளுமன்ற கூட்டுக் குழுவில் உரையாற்றச் சென்றார். 18-07-

குறிப்பு

1919 அன்று அவருக்கு பேச வாய்ப்பளிக்கப்பட்டு இருந்தது. ஆனால் அதற்கு முதல் நாள் (17-07-1919) டாக்டர் நாயர் முடிவெய்தினார். தான் வாழ்ந்த 51 ஆண்டுக் காலத்தில் திருமணம் என்ற எண்ணம்கூட எழாமல் படிப்பு, பொது வாழ்வு என்று திறந்த புத்தகமாய் வாழ்ந்தார் டாக்டர் நாயர். பல்வேறு இதழ்கள், சங்கங்கள், அய்ரோப்பிய தலைவர்கள் அவர் மறைவுக்கு இரங்கல் தெரிவித்தாலும் காங்கிரசின் எந்தப் பிரிவு தலைவர்களும் டாக்டர் நாயர் மறைவுக்கு இரங்கல் தெரிவிக்கவில்லை என்பதே அவரது கொள்கை உறுதியைப் பறைசாற்றும். டாக்டர் நாயரின் மறைவுக்குப் பின் அவர் எதிர்பார்த்த நீதிக்கட்சி ஆட்சி அமைந்து பல்வேறு சாதனைகளை சமூகத்திலும், அரசியலிலும் தங்களுக்கு அளிக்கப்பட்ட குறைந்த அதிகாரத்தில் செய்து சாதனை படைத்தது.

## 13.3 சி நடேசமுதலியார்

நீதிக் கட்சி உருவாவதற்குக் காரணமான முதல் மூவருள் முதல்வர் சி.நடேசனார். 1875-ல் பிறந்த இவருடைய பிறந்த நாளும் மாதமும் இன்னதென்று தெரியவில்லை. நடேசனார் தனது சிறு பருவத்தில் திண்ணைப் பள்ளிக்கூடத்தில் சேர்க்கப்பட்டார். அக்காலத்தில் சென்னையில் தெலுங்கைப் பயிற்சி மொழியாகக் கொண்ட பள்ளிகளே அதிகமாக இருந்தன என்பதால், நடேசனாரும் தெலுங்கு மொழி மூலமாகவே கல்வி கற்றார். அம்மொழியிலேயே சென்னைப் பல்கலைக்கழகத்தில் பட்டமும் பெற்றார். பிறகு, மருத்துவக் கல்லூரியில் சேர்ந்து படித்தார். அக்காலத்தில், எம்பிசிஎம் என்பதே மருத்துவப் பட்டத்தில் முதல்தரப் பட்டம். இப்பட்டம் பெற நடேசனார் பல முறை முயன்றும் முடியவில்லை. எல்எம்எஸ் என்ற மருத்துவப் பட்டத்தைப் பெற்றே அவரால் மருத்துவராக முடிந்தது என்றாலும் வைத்திய நிபுணர் என்றும், கைராசிக்காரர் என்றும் மக்களிடம் அவர் நன்மதிப்பைப் பெற்றார்.

சென்னை ராஜதானியின் அப்போதைய அரசியல் நிலைகளால் உயர் சாதியினரால் அரசுப் பணிகளிலுள்ள இதர வகுப்பார் பாதிக்கப்படுவதும், உயர் சாதியினர் வெள்ளையர்களோடு சேர்ந்துகொண்டு சலுகைகள் பெறுவதும் தவிர்க்க முடியாததாய்த் தொடர்ந்தன. இந்நிகழ்வுகள் நடேசனாரைப் பொதுவாழ்க்கையில் ஈடுபட வைத்தன. பாதிக்கப்படுகிற வகுப்பாருக்கு உதவ வேண்டும் என்கிற எண்ணத்தில், ஓர் அமைப்பை உருவாக்க எண்ணம் கொண்டு 1912-ல் ‘சென்னைத் திராவிடர் சங்கம்’ உருவாக்கினார். இவ்வமைப்பு சென்னையில் பொதுமக்களின் அமைப்பாக இயங்கிவந்தது என்பதற்கான சான்றுகள் உள்ளன. இச்சங்கம் தொடங்கப்பட்டதன் விளைவாகத்தான் நடேசனாரின் நட்பு திரு.வி.க.வுக்குக் கிடைத்ததாக அவரது வாழ்க்கைக் குறிப்பு கூறுகிறது. அரசு அலுவலகங்களில் பணியாற்றிவந்த பிராமணரல்லாதார், மாலை நேரங்களில் திராவிடர் சங்கத்தில் கூடி,

தமக்கு இழைக்கப்படும் அநீதிகள் குறித்துப் பேசித் தீர்வு கண்டனர். இது மட்டுமன்றி சிந்தனையாளர் சிங்காரவேலர், பேராசிரியர் லட்சுமி நரசு, எல்.டி.சாமிக்கண்ணு, திரு.வி.க. போன்ற அறிஞர்களின் சொற்பொழிவுகள் திராவிடர் சங்கத்தில் அடிக்கடி நடைபெறும்.

**திராவிடர் இல்லம்:** இப்படித் தொடங்கிய திராவிடர் சங்கத்தின் பணிகள ்தான் பின்னர் நீதிக் கட்சி தோன்றுவதற்கு அடிப்படையாய் அமைந்தன. 1919-ல் இங்கிலாந்து நாடாளுமன்றக் கூட்டு ஆய்வுக் குழுவினர் திராவிடர்களின் நிலையைப் பற்றி எடுத்துக் கூறுவதற்கென ஒரு பிரதிநிதியை அனுப்பிவைக்குமாறு இச்சங்கத்தினரைக் கேட்டுக்கொண்டதன் பேரில் சர் கே.வி.ரெட்டி நாயுடு அனுப்பிவைக்கப்பட்டார். திராவிடர் சங்கம் நடத்தியது போலவே 'திராவிடர் இல்லம்' என்கிற மாணவர்களுக்கான விடுதியையும் நடேசனார் நடத்தினார். திராவிட சமூக மாணவர்களின் பிற்போக்கான நிலையைக் கண்டு வருந்திய அவர் இவ்விடுதியைத் தொடங்கினார். அங்கே ஏழை மாணவர்கள் பணம் செலுத்தாமலேயே உணவருந்தினார்கள். சர்.ஆர்.கே.சண்முகம் செட்டியார் போன்ற பெருமக்களை நாட்டுக்கு அறிமுகம் செய்துவைத்த பெருமை திராவிடர் சங்கத்தைச் சார்ந்ததாகும்.

நடேசனார் காங்கிரஸ் கட்சியில் இருந்தது இல்லை. தான் தோற்றுவித்த அமைப்பின் மூலம் பிராமணரல்லாதாருக்கு உழைத்துவந்தார். இந்த நிலையில் பிராமணரல்லாதார் இயக்கத்துக்கு அரசியல் வடிவம் கொடுத்த பிட்டி தியாகராயரும், டாக்டர் டி.எம்.நாயர் போன்றவர்களும் காங்கிரஸில் பற்றுதலும் நம்பிக்கையும் கொண்டு உழைத்துவந்தனர். அவர்களது நம்பிக்கையை காங்கிரஸின் நடைமுறை தகர்த்தெறிந்தது. நடேசனார் இந்தச் சந்தர்ப்பத்தைப் பயன்படுத்திக்கொண்டு திராவிடர்களின் இழிநிலையைப் போக்க தியாகராயரையும் நாயரையும் கண்டு தம் கருத்தை வெளியிட்டார். அதன் தொடர்ச்சியாக, இருவரையும் கொண்டு ஓர் அரசியல் கட்சி உருவெடுக்கக் காரணமாக இருந்தார்.

நடேசனார் முயற்சி இல்லையானால், நீதிக் கட்சி என்ற பிராமணரல்லாதார் இயக்கம் ஏற்பட்டிருக்க முடியாது. நடேசனார் கூட்டிய மாநாடுகளும் கூட்டங்களும் எண்ணிலடங்காதவை. இவற்றுக்கு நடேசனார் தனது கைப்பொருளையே செலவழித்தார். டி.எம்.நாயர் லண்டன் பயணப்பட்டபோது, நீதிக் கட்சியின் பொறுப்பு இவரிடம் ஒப்படைக்கப்பட்டது. டி.எம்.நாயரும் தியாகராயரும் காலமான பிறகு, தனியாக இருந்து நீதிக் கட்சியை நடத்திய பெருமை மிக்கவர் நடேசனார். ஆர்க்காடு ராமசாமி முதலியார் நீதிக் கட்சியின் மூளையாக விளங்கினாலும், நடேசனார் அக்கட்சியின் இதயமாகச் செயல்பட்டார்.

**சட்டமன்றப் பணிகள்** 1920-ல் நடைபெற்ற சட்டமன்றத் தேர்தலில் பெருவாரியான வாக்குகளைப் பெற்றார் நடேசனார். 1920 முதல்,

குறிப்பு

இடையில் ஒரு தடவை மட்டும் தோல்வியடைந்தாலும் 1937 வரை நடேசனாரின் சட்டமன்றப் பணி தொடர்ந்தது. அதாவது, அவர் இறக்கும் வரையில் சட்டமன்ற உறுப்பினராகவே இருந்தார். சட்டமன்றத்தில் நீதிக் கட்சியின் சீரிய குறிக்கோள்களுக்கும் கொள்கைகளுக்கும் அவர் வாதாடினார். அரசுப் பணிகளில் இருப்போருக்கு வகுப்புரிமைக்காக அடிக்கடி கேள்விகள் கேட்டும் வகுப்புரிமை கையாளப்படாததைச் சுட்டிக்காட்டியும் பிராமணரல்லாதார் நலம் பெறப் பெரிதும் உழைத்தார். இவர் கொண்டுவந்து நிறைவேற்றிய தீர்மானங்களிலேயே மிகச் சிறந்தது 'பார்ப்பனர் அல்லாதார் யார்?' என்பதைப் பற்றிய வரைவுதான்!

நீதிக் கட்சியின் போராட்டத்தின் விளைவாக 1919-ல் மாண்டேகு செம்ஸ்ஃபோர்டு சீர்திருத்தத்தில், சட்டமன்றங்களில் பிராமணரல்லாதார் வகுப்புவாரி முறையில் இடம்பெற வகைசெய்யப்பட்டிருந்தது. இந்தச் சமூகப் பாதுகாப்புகளால் ஊக்கம் பெற்ற நீதிக் கட்சி, அரசு சார்ந்த பொது வாரியங்களிலும் நிர்வாகக் கழகங்களிலும் சென்னைப் பல்கலைக்கழக ஆட்சிக் குழு போன்ற அமைப்புகளிலும் வகுப்புவாரி பிரதிநிதித்துவ முறையை நடைமுறைக்குக் கொண்டுவர வேண்டும் என்று கோரியது. மேலும், 20-ம் நூற்றாண்டின் தொடக்கத்தில் சென்னைப் பல்கலைக்கழகம் தாய்மொழிப் படிப்பை அலட்சியப்படுத்திவந்தது. நடேசனார் கொண்டுவந்த தீர்மானம்தான் சென்னைப் பல்கலைக்கழகத்தில் தாய்மொழிப் படிப்பை அறிமுகப்படுத்துவதற்குக் காரணமாக இருந்தது.

**உட்கட்சி அரசியல்** முதல் சட்டமன்றத் தேர்தலிலேயே (1920) சென்னை மாநகரத்தில் அதிக வாக்குகள் பெற்று வெற்றி பெற்றும் நடேசனாரை நீதிக் கட்சி அமைச்சராக்கவில்லை. அவர் இறப்பதற்கு ஒரு ஆண்டுக்கு முன்புதான் சட்டசபையின் துணைத் தலைவர் ஆக்கப்பட்டார். இப்பதவியை அவர் பெறுவதற்குக்கூட 'சண்டே அப்சர்வர்' பி.பாலசுப்பிரமணியத்தின் பரிந்துரை தேவையாக இருந்தது. எந்த வகையில் அவர் தகுதி குறைவானவர் என்று நம்மால் புரிந்துகொள்ள முடியவில்லை. அவர் சட்டமன்றத்தில் நிகழ்த்திய உரைகள் எல்லாம் திராவிட இயக்கக் கொள்கைகளை எதிரொலிப்பனவாக இருந்தன. நடேசனாருக்கு நீதிக் கட்சி பெரும் பொறுப்பு எதையும் தந்து சிறப்பிக்கவில்லை. தொழிலில் முதல் தர டாக்டர் பட்டம் பெற முயன்றார், முடியவில்லை. ஒரே மகன் கல்லூரியில் படித்துவந்தபோது இறந்துபோனான். சென்னை மாநகராட்சியின் தலைவராக இரண்டு முறை போட்டியிட்டார் ஆக முடியவில்லை. சென்னை மாநகரின் முதல் மேயராக வர வேண்டும் என்று நினைத்தார் முடியவில்லை. இத்தனைக்கும் அவர் நீதிக் கட்சியை உருவாக்கிய மூவருள் ஒருவர்.

இரக்கமும் பிறருக்கு உதவ வேண்டும் என்ற எண்ணமும் இயல்பிலேயே உடையவர் நடேசனார். ஆனால், நீதிக் கட்சியின் உட்கட்சி அரசியலில் பிட்டி.தியாகராயர், சர்.ஏ.ராமசாமி முதலியார், முத்தையா செட்டியார் போன்றோர் இவர் மீது பகை கொண்டதற்கு

உரிய காரணங்கள் எதுவும் நமக்கு இதுவரை தெரியவில்லை. டாக்டர் நடேசனார் மரணம் அடைந்தபோது 'குடி அரசு' இதழில் பெரியார் எழுதிய இரங்கல் குறிப்பைப் படித்துப் பார்த்தால் நடேசனாரின் கபடமற்ற தன்மையைப் புரிந்துகொள்ளலாம்: "டாக்டர் நடேச முதலியார் நலிந்தார் எனும் சேதி கேட்டு நம் நாட்டில் வருந்திடாத பார்ப்பனர் அல்லாத தமிழ் மக்கள் எவரும் இருந்திட மாட்டார்கள்.

## 13.4 பி. தியாகராயச்செட்டியார்

வெள்ளுடை வேந்தர் சர் பி. தியாகராய செட்டி என்னும் பிட்டி தியாகராயர் (ஏப்ரல் 27, 1852 - ஜூன் 23, 1925) நீதிக்கட்சியின் நிறுவனர்களுள் ஒருவராவார். திராவிட இயக்கத்தில் மூத்த தலைவர்களில் ஒருவராகப் போற்றப்படுபவர். இருபதாம் நூற்றாண்டின் முதல் காற்பகுதியில் சென்னை மாகாணத்தின் முக்கிய அரசியல் தலைவராக விளங்கிய இவர் தொழிலதிபராகவும் பெயர்பெற்றிருந்தார். 1916 இல் பிராமணரல்லாத சாதியனரின் நலனுக்காக குரல் கொடுக்க டாக்டர் டி. எம். நாயருடன் சேர்ந்து நீதிக்கட்சியைத் தொடங்கினார். சென்னை சட்டமன்றத்துக்கு முதன் முதலாக 1920இல் நடைபெற்ற தேர்தலில் நீதிக்கட்சி வெற்றிபெற்று, முதலமைச்சராகும் வாய்ப்பு இவருக்குக் கிடைத்தது. ஆனால் அதனை ஏற்காமல் கட்சித்தலைவராகவே நீடித்தார். இவர் நீதிக்கட்சியின் தலைவராக இருந்த காலத்தில் அக்கட்சியின் சுப்பராயலு ரெட்டியார், பனகல் அரசர் ஆகியோர் சென்னை மாகாணத்தின் முதல்வராக இருந்தனர். 1925 இல் இவர் இறந்த போது இவரது நினைவாக சென்னை நகரில் புதிதாக உருவாக்கப்பட்ட தியாகராய நகருக்கு (டி. நகர்) இவரது பெயர் சூட்டப்பட்டது. பிட்டி தியாகராயர் அரங்கம் எனும் பெயரில் தி.நகரில் அரசு விழாக்கள் நடத்தப்படும் அரங்கம் ஒன்றும் உள்ளது.

**இளமைக் காலம்:** நெசவு மற்றும் தோல் பதனிடும் தொழிலில் ஈடுபட்டு வந்த பெரும் செல்வம் உடையவர்களாக, சென்னை கொருக்குப் பேட்டையில் வசித்து வந்த அய்யப்ப செட்டியார், வள்ளி அம்மாள் தம்பதியருக்கு 1852 ஆம் ஆண்டு ஏப்ரல் திங்கள் 27 ஆம் நாள் ஆண்டு மூன்றாவது மகனாகப் பிறந்தார். அவர், 1876 ஆம் ஆண்டு சென்னை மாநிலக் கல்லூரியில் படித்து பி.ஏ. பட்டம் பெற்றார். தியாகராயர் மனைவியின் பெயர் சின்னவள்ளி அம்மாள். அவருக்கு ஒரு புதல்வரும் ஏழு மகள்களும் பிறந்தனர்.

**தொழில்:** தியாகராயருக்கு நெசவுத் தொழிலைத் தவிர தோல் பதனிடுதல், உப்பளம், சுண்ணாம்புக் காளவாசல் போன்ற தொழில்களும் இருந்தன. அதில் ஏராளமானவர்கள் வேலை செய்தனர். இந்தத் தொழில்களுக்கு உதவியாக நூறு படகுகளைக் கொண்ட சொந்தப் போக்குவரத்துத் துறையையே வைத்திருந்தார். நெசவாளர்கள் மாநாடு,

மற்றும் கண்காட்சிகளை நடத்தி அதில் நடந்த போட்டிகளிலும் கலந்து கொண்டு பரிசுகள் பல பெற்றார். தமது வீட்டருகே பிட்டி நெசவு ஆலை என்ற பெயரில் சுமார் நூறு தறிகளைக் கொண்ட நெசவாலையை ஏற்படுத்தினார். தற்போது நம் கைத்தறி நெசவில் குஞ்சம் இழுத்து நெய்யும் முறையை அறிமுகப்படுத்தியவர் இவரே. அதற்கு முன் நாடாவை கைகளில் தள்ளி தான் நெய்தார்கள். இங்கு தயாரிக்கப்பட்ட பிட்டி மார்க் கைக்குட்டைகள் உலகப் புகழ் பெற்றவை.

**அரசியல்**: இந்திய தேசிய காங்கிரசின் இரண்டாவது மாநாடு சென்னையில் நடைபெற்றது. தியாகராயர் அம்மாநாட்டை முன்னின்று நடத்தினார். காந்தியடிகள் சென்னை வந்த போது அவருக்குச் சிறப்பானதொரு வரவேற்பைத் தந்தார். 1882 ஆம் ஆண்டு “சென்னை உள் நாட்டினர் சங்கம் என்ற பெயரில் ஒரு அமைப்பைத் தொடர்ந்து நடத்தினார். இந்தச் சங்கம் பிற்காலத்தில் “சென்னை மகாஜன சபை என்ற பெயரில் அழைக்கப்பட்டது. இச்சபை அவ்வப்போது சென்னையில் கூடி விவாதித்துக் கோரிக்கைகளை ஆங்கிலேயே அரசுக்குச் சமர்பித்து வந்தது. 1916 ஆம் ஆண்டு வரை அவர் ஒரு தீவிர காங்கிரஸ்காரராகவே செயல்பட்டார். தந்தை பெரியாருக்கும் முன்னரே சுயமரியாதை இயக்கத்தை ஆரம்பித்தவர் இவரே. தமிழகக் காங்கிரஸில் ஆதிக்க வெறி கண்டு மனம் வெதும்பிய இவர் அக்கட்சியிலிருந்து வெளியேறினார். அப்போது அவரைக் கடுமையாக விமர்சித்து அறிக்கை வெளியிட்ட பெரியார்,பின்னாளில் அதே காரணத்திற்காகக் காங்கிரஸை விட்டு விலகி, தீவிரமாக எதிர்க்க ஆரம்பித்தார். 1916 ஆம் ஆண்டு நடைபெற்ற சட்டமன்றத் தேர்தலில் காங்கிரசுக் கட்சியின் சார்பில் போட்டியிட்ட திராவிடத் தலைவர்கள் டாக்டர் டி.எம். நாயர், பனகல் அரசர், இராம நியங்கர், கே.வி. ரெட்டி நாயுடு மற்றும் சர். பி. தியாகராயர் ஆகியோர் காங்கிரசுக் கட்சியினரால் தோற்கடிக்கப்பட்டனர்.

பல கட்சிகளிலும் இருந்த தலைவர்கள் இவரிடம் கொள்கை ரீதியாக வேற்றுமை கொண்டிருந்தாலும் உளப்பூர்வமாக இவரிடம் பேரன்பு கொண்டிருந்தனர். ஒரு சமயம் இவரின் நிர்வாகத்தை எதிர்த்து தமிழ்த்தென்றல் திரு.வி.க. அவர்கள் சென்னை கடற்கரைப் பொதுக் கூட்டத்தில் மிக ஆவேசமாக உரையாற்றினார். அவரிடமும் தியாகராயர் நட்புணர்வு பாராட்டினார். சர்.சி.பி. ராமசாமி அய்யர் தேர்தலின் போது தியாகராயரை எதிர்த்துப் போட்டியிட்டார். துப்பாக்கியைக் காட்டி அவருக்கு எதிராக வாக்கு சேகரித்தார். ஆனால் மிகவும் அதிக வாக்குகள் பெற்று வெற்றி பெற்றார் தியாகராயர். அவர் மறைந்த போது அதே சி.பி.ராமசாமி அய்யர், ”ஒரு தன்னலமற்ற மனிதாபிமானியை இழந்தோமே” என்று சட்டமன்றத்தில் இரங்கல் தீர்மானத்தை முன்மொழிந்து பேசினார்.

**நீதிக்கட்சி**: 1916 ஆம் ஆண்டு நவம்பர் திங்கள் 20 ஆம் நாள் சென்னை, வேப்பேரியில் எத்திராசு முதலியார் இல்லத்தில் சர். பி.

தியாகராயர் சிறப்புக் கூட்டத்தைக் கூட்டினார். அந்தக் கூட்டத்தில் “தென் இந்தியர் நல உரிமைச் சங்கம்“ என்ற பெயரில் ஒரு அமைப்பைத் தொடர்ந்து நடத்துவதெனத் தீர்மானிக்கப்பட்டது. இந்த அமைப்பின் சார்பில் “நீதி (துரளவஉைந) என்ற பெயரில் ஒரு இதழையும் நடத்தினார். இந்த அமைப்பு நடத்தி வந்த ”நீதி“ என்ற இதழின் பெயரைக் கொண்டே, அந்த அமைப்பை நீதிக்கட்சி (துரளவஉைந ீயசவல) என்ற பரவலாக அழைக்கப்பட்டது. சர்.பி. தியாகராயர் நீதிக்கட்சியின் தலைவராக சிறப்பாக கட்சியை நடத்தி வந்தார். தியாகராயர் வெளியிட்ட கொள்கை விளக்க அறிக்கை, மக்களிடையே ஒரு விழிப்புணர்ச்சியை பெருமளவுக்குத் தட்டி எழுப்பியது. அவர்கள் நீதிகட்சியின் கொள்கைகளுக்கும், திட்டங்களுக்கும் பேராதரவு தந்தனர். நீதிக்கட்சி இந்தியாவுக்கு விடுதலை வேண்டும் என்று வலியுறுத்தியது. அதேநேரத்தில் பிற்படுத்தப்பட்டோர். தாழ்த்தப்பட்டோர் மற்றும் பழங்குடியினர் ஆகியோருக்கு முழு உரிமையும், பாதுகாப்பும் வேண்டும் என்று கோரியது.

சர்.பி. தியாகராயரின் அவர்களின் தன்னலமற்ற விடாமுயற்சிகள் நீதிக்கட்சி மக்களின் நம்பிக்கையைப் பெற்று இந்த அரும் பணிகளுக்கு இடையே 1921 ஆம் ஆண்டு நடைபெற்ற சென்னை மாநில சட்டமன்றத் தேர்தலில் நீதிக்கட்சி அறுதிப் பெரும்பான்மைப் பெற்று ஆட்சி அமைக்க முன் வந்தது. அப்போதைய ஆங்கிலேய ஆளுநர் வெலிங்டன் பிரபு அவர்கள்,நீதிக்கட்சியின் தலைவராக விளங்கிய தியாகராயரை ஆட்சி அமைக்க வருமாறு அழைப்பு விடுத்தார். ஆனால், முதலமைச்சர் பதவியை ஏற்க தான் விரும்பவில்லை என்று கூறி, கடலூர் வழக்கறிஞர் சுப்பராயலு ரெட்டியாரை முதலமைச்சராக பொறுப்பேற்கச் செய்தார்.

**காந்தியும் தியாகராயரும்:** தியாகராயர் தமிழ்நாடு காங்கிரஸ் கமிட்டியின் செயலாளராக இருந்த போதிலும் பார்ப்பனீய ஆதிக்கத்தைத் தீவிரமாக எதிர்த்தார். அதனால் அவர் மகாத்மா காந்தியிடமும், முரண்பட நேர்ந்தது. காந்திஜியின் கதர் கொள்கையையும் ஏற்றுக் கொள்ளவில்லை. பழைய முறையிலான கைத்தறி நெசவு நம் இந்திய முன்னேற்றத்திற்கு ஏற்றதல்ல.அதில் புதுமையைப் புகுத்தி தொழில் புரட்சி புரிய வேண்டும் என்பது தியாகராயரின் எண்ணம். அதில் தீவிரமும் காட்டினார். காந்தியடிகள் இவரிடம் முரண்பட்ட போதும், அவர் சென்னைக்கு வந்த போது பிட்டி நெசவாலைக்கு வருகை தந்து அதை பார்வையிட்டார். அதில் ஒரு தறியில் அமர்ந்து நெய்தும் பார்த்தார். அதில் கண்டிருந்த நவீன உத்திகளைக் கற்றுக் கொள்வதற்காகத் தன்னுடைய புதல்வர்களான மணிலால், மதன்லால் ஆகிய இருவரையும் ஆறு மாத கலைப் பயிற்சிக்காக அனுப்பி வைத்தார்.

**சமயப் பணிகள்:** தியாகராயரை எல்லோரும் நாத்திகர் என்றே நம்பியிருந்தனர். ஆனால் அவர் சுயமரியாதைக் கொள்கையில் ஈடுபாடு கொண்டிருந்தாலும் கடவுள் திருப்பணிகளிலும் நிகரற்று விளங்கினார்.

சென்னையிலுள்ள மயிலை கபாலீஸ்வரர் ஆலயத்தை ரூபாய் பத்தாயிரம் செலவு செய்து திருப்பணி செய்து குடமுழுக்கிற்கு ஏற்பாடு செய்தார். ஆனால் கோவிலைச் சேர்ந்தோர் இவரைக் கோபுரத்திலேறி கும்பநீரை ஊற்றஅனுமதிக்கவில்லை. பார்த்தசாரதி கோவிலுக்கும் திருப்பணி செய்வித்தார். சென்னை வண்ணாரப்பேட்டையில் உள்ள ஸ்ரீஇராமலிங்க சவுடேஸ்வரி கோயிலின் உற்சவ சிம்ம வாகனத்தில் கண்களில் பதிப்பதற்காக இரண்டு கண்ணாடிக் கண் விழிகளை லண்டனிலிருந்து தருவித்தார். இன்றும் அந்த வாகனத்தில் தான் அம்மன் வீதி உலா நடைபெறுகிறது.

**பதவியும் தொண்டும்:** 1920 ஆம் ஆண்டு மாண்டேடு செம்ஸ்போர்டு பரிந்துரையின்படி நகராண்மைத் தலைவரை தேர்ந்தெடுக்க நடைபெற்ற நேரடி தேர்தலில் வெற்றி பெற்ற முதல் தலைவர் (மேயர்) சர்.பிட்டி. தியாகராயர் ஆவார்.1905 ஆம் ஆண்டு இங்கிலாந்து இளவரசர் 5 ஆம் ஜார்ஜ் சென்னை வந்தபோது, நகராண்மை தலைவராக (மாநகராட்சி மேயர்) இருந்த சர். பிட்டி. தியாகராயர், இளவரசரை வெள்ளுடை அணிந்து வரவேற்க அப்போதைய கவர்னர் ஒப்புதல் அளித்தார்.1882 முதல் 1923 வரை சுமார் 41 ஆண்டுகள் சென்னை நகராண்மை கழகத்துடன் தொடர்புடையவராக திகழ்ந்த தியாகராயர், 1081 கூட்டங்களைத் தலைமை ஏற்று நடத்தியுள்ளார்.சென்னை மாநகராட்சி கூட்டத்தின் பின்புறம் உள்ள மக்கள் பூங்காவையும் , பெண்களுக்கென்று தனியாக ஒரு பூங்காவை பேரக் நெய்டன் என்னும் இடத்தில் நிறுவினார்1920 ஆம் ஆண்டு சென்னை ஆயிரம் விளக்கு பகுதியில் செயல்பட்டு வந்த நகராட்சிப் பள்ளியில் முதன் முதலாக மதிய உணவு திட்டத்தை தொடங்கி வைத்தார்.1919 முதல் 1923 வரை நகராண்மை தலைவராகப் பதவி வகித்தார். அந்நேரத்தில் சென்னை மாகாணத்தின் முதலமைச்சராக பதவி ஏற்க வருமாறு கவனர் கோரினார். அதனை ஏற்க மறுத்தார்.1909 – 12 ஆம் ஆண்டு சென்னை ஆளுநர் குழுவிற்கு நகராண்மை குழுவிலிருந்து அனுப்பப்படும் ஒரு நகரசபை உறுப்பினராக திகழ்ந்தார்.

**பார்ப்பன எதிர்ப்பும் உதவிகளும்:** பார்ப்பனீயத்தை எதிர்த்தாரே தவிர, பார்ப்பனர்களைத் தியாகராயர் வெறுத்ததில்லை. நம் வழக்குகளை நாமே பேசித் தீர்த்துக் கொள்ள வேண்டுமே தவிர பார்ப்பன வக்கீல்களைக் கொண்டு வழக்கு நடத்தக் கூடாது என்று வலியுறுத்தினார்.ஆனால், ஏழைப் பார்ப்பனர்களுக்கு உதவிகள் செய்தார். தியாகராயரின் நீண்ட தாழ்வாரத்தில் ஏராளமான பார்ப்பன சிறுவர்கள் அமர்ந்து வடமொழியும், மந்திரங்களும் கற்றுக் கொள்வார்கள். அவர்களுக்கு எல்லாவிதமான உதவிகளையும் அவர் செய்வார். சில நண்பர்கள் அவரைப் பார்த்து பார்ப்பனருக்கு எதிரான இயக்கம் நடத்துகிறீர்கள். ஆனால் உங்கள் இல்லத்திலேயே இத்தகைய உதவியைச் செய்கிறீர்களே என்று கேட்டதற்கு நான் பிராமணர்களை வெறுக்கவில்லை. பிராமணர்கள் தங்கள் குலத் தொழிலை செய்யட்டும்.

குறிப்பு

நாடாள்வது அரசப் பரம்பரையினரான நமதுப் பணி. அவர்களை அவர்களுடைய தொழிலை நாம் செய்ய வேண்டாம் என்று சொன்னால் அவர்கள் வேறு எங்கு போவார்கள் என்று கூறினார். யஞ்யராமன் என்ற பிராமணர் தாழ்த்தப்பட்டவர்களுக்காகத் தொண்டு செய்ய சேரிப் பகுதியில் போய் தங்கினார். அதனால், அவர் சாதி நீக்கம் செய்யப்பட்டு வேலையையும் இழந்தார். அப்போது தியாகராயர் தலையிட்டு அவரைப் பச்சையப்பன் கல்லூரியில் விரிவுரையாளராகப் பணி நியமனம் செய்தார்.

**கல்விப்பணி:** சர்.பிட்டி. தியாகராயர் தமது சொந்தப் பணத்தில் பல பள்ளிகளையும் கல்லூரிகளையும் நிறுவினார். சென்னையில் உள்ள தியாகராயர் கல்லூரி இவர் நிறுவியதே. சென்னை மற்றும் ஆந்திரா பல்கலைக் கழகங்களை நிறுவப் பெரும் தொண்டாற்றினார். சென்னைப் பல்கலைக் கழகத்தில் தமிழ் வளர்ச்சிக்காக வழி ஏதும் செய்யப்படாமையால் செட்டிநாடு அரசர் அண்ணாமலை செட்டியாருடன் இணைந்து அண்ணாமலை பல்கலைக் கழகத்தை உருவாக்கினார். பாடசாலைகளைப் போலவே தொழில் நுட்பப் பயிற்சி பள்ளிகளைத் தொடங்கினார். முஸ்லீம் கல்வி அறக்கட்டளையிலும் உறுப்பினராகவும்,தலைவராகவும் இருந்து ஏராளமான சீர்திருத்தங்களைச் செய்தார். பச்சையப்பர் கல்வி அறக்கட்டளையை சீரமைத்து அனைத்து தரப்பினரும் உறுப்பினராகும் வாய்ப்பை ஏற்படுத்தினார்.

**சிறப்புகள்:** தியாகராயரின் நினைவாக இன்றும் சென்னையிலுள்ள ஒரு கல்லூரிக்கும இவரது பெயர் உள்ளது. மேலும் சென்னை தியாகராயர் நகர் என்பது இவரைக் குறிப்பதுவே. பெங்களூரிலும் தியாகராயர் நகர் என்ற பகுதி உள்ளது. இந்திய அரசு அண்மையில் இவரினுருவம் பொறித்த அஞ்சல் தலையை வெளியிட்டுப் பெருமை சேர்த்தது. அஞ்சல் தலையின் பின்னணியில் தறி நெய்யும் நெசவாளியின் உருவம் காணப்படுகிறது.

## 13.5 ஈ.வெ ரா பெரியார்

பெரியார் தமிழகத்தை சார்ந்த ஒரு முக்கிய சமூக சீர்திருத்தவாதி, செயற்பாட்டாளர், சிந்தனையாளர் ஆவார். அவர் சமூக நீதி, சாதிய எதிர்ப்பு, மூடநம்பிக்கை எதிர்ப்பு, இறைமறுப்பு, பகுத்தறிவு, பெண்கள் முன்னேற்றம், கல்வி ஆகியவை சார்ந்து கொண்டிருந்ததே சிந்தனைகளே பெரியார் கொள்கைகள் அல்லது பெரியார் சிந்தனைகள் என்றழைக்கப்படுகின்றன. இவரின் சமுதாயப் பங்களிப்பைப் பாராட்டி யூனஸ்கோ நிறுவனம் புத்துலக தொலை நோக்காளர், தென்கிழக்காசியாவின் சாக்ரடிஸ், சமூக சீர்திருத்த இயக்கத்தின் தந்தை, அறியாமை மூடநம்பிக்கை, அர்த்தமற்ற சம்பிரதாயங்கள், மட்டமான பழக்கவழக்கங்கள் ஆகியவற்றின் கடும் எதிரி என்று பாராட்டுச் சான்றிதழ் வழங்கியுள்ளது.இவருடைய பகுத்தறிவு, சுயமரியாதைக் கொள்கைகள் தமிழ்நாட்டின் சமூகப் பரப்பிலும், தமிழக அரசியலிலும் பல தாக்கங்களை ஏற்படுத்தியவை.

குறிப்பு

**1879** : செப்டெம்பர் 17, ஈரோட்டில் பிறந்தார். பெற்றோர்: சின்னத்தாயம்மை-வெங்கட்ட நாயக்கர்

**1885** : திண்ணைப்பள்ளியில் சேர்ந்தார்.

**1891**: பள்ளிப்படிப்பை விட்டு நிறுத்தப்பட்டார்

**1892** : வாணிபத்தில் ஈடுபட்டார்

**1898** : நாகம்மையை (அகவை-13) மணந்தார்.

**1902** : கலப்புத் திருமணங்களை நடத்திவைத்தார். அனைத்து சமயத்தினர், சாதியினருடன் சேர்ந்து விருந்துண்டார்.

**1904** : ஒரு பெண் குழந்தைக்கு தந்தையானார்.

**1907** : பேராய இயக்கத்தில் நாட்டம் கொண்டார். ஈரோட்டில் கக்கல் கழிச்சல் நோய் பரவிய போது, யாரும் உதவிக்கு முன்வராத நிலையில் துணிந்து மீட்புப்பணியாற்றினார்.

**1909** : எதிர்ப்புக்கிடையில் தங்கையின் மகளுக்கு கைம்மைத் திருமணம் செய்துவைத்தார்.

**1911** : தந்தையார் மறைவு

பெரியார் என்று பரவலாக அறியப்படும் ஈ.வெ.இராமசாமி சமூக சீர்திருத்தத்திற்காகவும், சாதியை அகற்றுவதற்காகவும், மூடநம்பிக்கைகளை மக்களிடமிருந்து களைவதற்காகவும், பெண் விடுதலைக்காகவும் போராடியவர். தமிழகத்தின் மிக முக்கியமான இயக்கமாகக் கருதப்படும் திராவிடர் கழகத்தினைத் தோற்றுவித்தவர். இவருடைய சுயமரியாதை இயக்கமும், பகுத்தறிவுவாதமும் மிகவும் புகழ்பெற்றது. இவர் வசதியான, முற்பட்ட சாதியாகக் கருதப்பட்ட நாயக்கர் என்ற சமூகத்தில் பிறந்திருந்தும், சாதிக் கொடுமை, தீண்டாமை, மூடநம்பிக்கை, வர்ணாஸ்ரம தர்மம் கடைப்பிடிக்கும் பார்ப்பனியம், பெண்களைத் தாழ்வாகக் கருதும் மனநிலை போன்றவற்றை எதிர்த்து மக்களுக்காகக் குரல் கொடுத்தார். இம்மனநிலை வளரக் காரணமானவை மக்களிடையே இருக்கும் மூடநம்பிக்கையும், அந்த மூடநம்பிக்கைக்குக் காரணமாக இருக்கும் கடவுள் நம்பிக்கையும், கடவுள் பெயரால் உருவான சமயங்களும் தான் என்பதை கருத்தில் கொண்டு ஈ.வெ.ரா, தீவிர இறைமறுப்பாளராக இருந்தார். இந்திய ஆரியர்களால், தென்னிந்தியாவின் பழம்பெருமை வாய்ந்த திராவிடர்கள் பார்ப்பனரால்லாதார் என்ற ஒரு காரணத்தினால் புறக்கணிக்கப்படுவதையும், அவர்களால் திராவிடர்களின் வாழ்வுச் சுரண்டப்படுவதையும் இராமசாமி எதிர்த்தார். அவர் தமிழ்ச் சமூகத்திற்காகச் செய்த புரட்சிகரமான செயல்கள், மண்டிக்கிடந்த சாதிய வேறுபாடுகளைக் குறிப்பிடத்தக்க வகையில் அகற்றியது. தமிழ்

எழுத்துகளின் சீரமைவுக்கு இராமசாமி குறிப்பிடத்தக்கப் பங்காற்றியுள்ளார். இவருடைய பகுத்தறிவு, சுயமரியாதைக் கொள்கைகள் தமிழ்நாட்டின் சமூகப் பரப்பிலும், தமிழக அரசியலிலும் பல தாக்கங்களை ஏற்படுத்தியவை. இவர் ஈ.வெ.ரா, ஈ.வெ. இராமசாமி என்ற பெயர்களாலும் தந்தை பெரியார், வைக்கம் வீரர் என்ற பட்டங்களாலும் அறியப்படுகிறார்.

**இதழ்கள்**

ஈ.வெ.ராமசாமி தன்னுடைய கருத்துகளை பரப்புவதற்காக பின்வரும் இதழ்களை வெளியிட்டு வந்தார்:

- குடிஅரசு (வார இதழ்) 1925 மே 2ஆம் நாள் தொடங்கப்பட்டது.
- ரிவோல்ட் (சுநஎழடவ) (ஆங்கில வார இதழ்) 1928 நவம்பர் 07 ஆம் தொடங்கப்பட்டது. முதல் இதழை கோவை இரத்தினசபாபதியார் தலைமையில் பட்டிவீரன்பட்டி ஊ.பு.அ. சௌந்திரபாண்டியன் 6-11-1928ஆம் நாள் வெளியிட்டார். இதழுக்கு ஈ.வெ.இராவும் எசு. இராமநாதனும் ஆசிரியராக இருந்தனர் நாகம்மையார் வெளியிட்டாளர்.
- ஜஸ்டிசைடு (துரளவஉைவைந).
- புரட்சி (வார இதழ்) 1933 நவம்பர் 20 ஆம் நாள்தொடங்கப்பட்டது.17.6.1934ஆம் நாள் இறுதி இதழ் வெளிவந்தது.
- பகுத்தறிவு (நாளிதழ்).1934 ஏப்ரல் 15 ஆம் நாள் தொடங்கப்பட்டு 1934 மே 27ஆம் நாளோடு நிறுத்தப்பட்டது
- பகுத்தறிவு (வார இதழ்) 1934, ஆகத்து 26 ஆம் நாள் முதல் 1935 சனவரி 1ஆம் நாள் வரை 20 இதழ்கள் வெளிவந்தன.
- பகுத்தறிவு (மாத இதழ்) 1935, மே 1 ஆம் நாள் தொடங்கப்பட்டது 1939 ஜனவரி வரை வெளிவந்தது.
- விடுதலை (வாரம் இருமுறை) 1935, சூன் 01ஆம் நாள் தொடங்கப்பட்டது.
- விடுதலை (நாளிதழ்) 1937, சூன் 1 ஆம் நாள் தொடங்கப்பட்டது
- உண்மை (மாத இதழ்)
- தி மார்டர்ன் ரேசனலிஸ்ட் (வுாந ஆழனநசெ சுயவழையெடளைவ) (ஆங்கில மாத இதழ்) 1971 செப்டம்பர் 1 ஆம் நாள் தொடங்கப்பட்டது

## 13.6 ஏ.டி பன்னீர் செல்வம்

குறிப்பு

திருவாரூர் அருகேயுள்ள பெரும்பண்ணையூரில் செல்வபுரத்தில் தாமரைச்செல்வன் – ரத்தினம்மாள் தம்பதியரின் மூன்றாவது மகனாக பிறந்தவர் பன்னீர்செல்வம். தந்தையின் உடல்நலக்குறைவால் படிப்பைத் தொடர முடியாமல் ரயில்வேயில் அலுவலக கிளர்க்காக பணியில் சேர்ந்தார். பின்னாளில் அந்த வேலையை விட்டு விவசாயம் செய்தார். பள்ளிப் படிப்பை முடித்ததும் பொன்னுபாப்பம்மாள் என்பவரை திருமணம் செய்துக்கொண்டார். அதன்பின், மீண்டும் கல்லூரியில் சேர்ந்து படிப்பை தொடர்ந்தவர் இங்கிலாந்தின் கேம்பிரிட்ஜ் பல்கலைக்கழகத்தில் சட்டம் பயின்றார். 1912 சனவரி மாதம் பட்டம் பெற்றுக்கொண்டு வழக்கறிஞராக சென்னை மாகாணத்துக்கு வந்தவர், சென்னை மாகாண உயர்நீதிமன்றத்தில் வழக்கறிஞராக தன்னை பதிவு செய்துக்கொண்டார். தஞ்சையில் வழக்கறிஞராகத் தொடர்ந்து தொழில் நடத்தினார்.

1916ல் நீதிக்கட்சி தொடங்கப்பட்டபோது, அதில் இணைந்து செயல்படத் துவங்கினார் பன்னீர்செல்வம். தஞ்சை நகராட்சி தலைவர் தான் அவர் வகித்த முதல் பதவி. தஞ்சை ஜில்லா போர்டு தலைவர், அதன்பின் சென்னை மாகாண சட்டமன்ற உறுப்பினர், நிதி மற்றும் உள்துறை அமைச்சர், கவர்னரின் ஆலோசனைக்குழு உறுப்பினர், சட்டமன்ற எதிர்க்கட்சித் தலைவர் எனப் பல பதவிகளை வகித்தார். 1929 ஆம் ஆண்டில் செங்கற்பட்டில் நடைபெற்ற முதலாவது மாகாணச் சுயமரியாதை மாநாட்டில் இளைஞர் அரங்கத்திற்குப் பன்னீர்செல்வம் தலைமை தாங்கி உரையாற்றினார். 1930 இல் லண்டனில் நடைபெற்ற முதல் வட்ட மேஜை மாநாட்டில் நீதிக்கட்சியின் சார்பில் கலந்து கொண்டு வகுப்புவாரிப் பிரதிநிதித்துவம் மற்றும் தனித்தொகுதி கேட்டு உரையாற்றினார். 1931 இல் நடைபெற்ற இரண்டாவது வட்ட மேசை மாநாட்டிலும் கலந்து கொண்டு சிறப்பித்தார். 1937 இல் காங்கிரசுக் கட்சி ஆட்சியின் போது சட்டமன்ற எதிர் கட்சித் தலைவராகச் செயல்பட்டார்.

சர்.ஏ.டி.பன்னீர்செல்வம் தமிழ்வேள் உமா மகேசுவரனுடன் இணைந்து தஞ்சை மாவட்டத்தில் தமிழ்மொழி வளர்ச்சிக்காகப் பாடுபட்டார். இவர்கள் இருவரும் “தஞ்சை இரட்டையர்” என்ற பெயரில் நீதிக்கட்சிக்காகப் பாடுபட்டனர். 1938 இந்தி எதிர்ப்புப் போர் உச்சத்தை எட்டிய காலம். திருச்சியில் இருந்து மணவை ரெ. திருமலைசாமி தலைமையில் தமிழர் பெரும்படை என்ற பெயரில் சென்னைக்கு நடைப்பயணம் மேற்கொள்ளப்பட்டது. இந்தப் பயணத்தின் முடிவில் சென்னை மெரினா கடற்கரையில் நடைபெற்ற பிரம்மாண்ட பொதுக்கூட்டத்தில் தமிழ்நாடு தமிழருக்கே என்ற அரசியல் முழக்கத்தை தந்தை பெரியார் முன்வைத்தார். இந்த முழக்கமே திராவிட நாடாக உருவெடுத்தது. திராவிட நாடு கோரிக்கை உச்சகட்டமான நேரத்தில் 2-வது உலகப் போர் தொடங்குகிறது. அப்போது அமைக்கப்பட்ட போர்க்கால அமைச்சரவையில் இந்திய விவகாரங்களுக்கான

குறிப்பு

அமைச்சரின் செயலராக சர் ஏ.டி. பன்னீர்செல்வம் நியமிக்கப்பட்டிருந்தார். இந்தியர் ஒருவருக்கு இப்பதவி வழங்கப்பட்டதும் அதுதான் முதல் முறை. அவரது ஆற்றலைப் பார்த்துதான் அன்றைய இங்கிலாந்து அரசு பதவி கொடுத்தது. சர் ஏ.டி. பன்னீர்செல்வம் லண்டன் சென்று பேச்சுவார்த்தை நடத்தினால் திராவிட நாட்டை வாங்கிவிடலாம் என உற்சாகத்தில் இருந்தனர் நீதிக்கட்சி தலைவர்கள். சர் ஏ.டி. பன்னீர்செல்வம் புறப்படும் நாளும் வந்தது. அப்போது அவரை உற்சாகத்துடன் நீதிக்கட்சி தலைவர்கள் வழியனுப்பி வைத்தனர்.

பதவியேற்பு நிகழ்வுக்காக இங்கிலாந்துக்கு இராணுவ அதிகாரிகளுடன் இராணுவ விமானத்தில் புறப்பட்டுச் சென்றார். விமானக் கட்டணம், செலவுக்கு கூட பணம்மில்லாததால் 3 ஆயிரம் ரூபாய் கடன் வாங்கிச்சென்றார். 1.3.1940 அன்று ஹனிபல் விமான பயணத்தில் ஏமன் வளைகுடா பகுதியில் ஏற்பட்ட விபத்தில், விமானம் மர்மமான முறையில் விபத்துக்குள்ளாகி அகால மரணம் அடைகிறார் பன்னீர்செல்வம்.அப்போது அவரது வயது 52 தான். அன்று ஏ.டி. பன்னீர்செல்வம் மட்டும் லண்டன் சென்று பணியில் சேர்ந்திருந்தால் திராவிட நாடு கிடைத்திருக்கும்… ஏ.டி. பன்னீர்செல்வம் இறந்துவிட்டதாக இங்கிலாந்து அரசு அறிவித்தப் போது தந்தை பெரியார் துடிதுடித்துப் போனார்.

தஞ்சையை ஆண்ட அரசர் பரம்பரையினரால் அமைக்கப்பட்ட திருவையாறு கல்லூரியில் “சமற்கிருதம்’ மட்டுமே பயிற்றுவிக்கப்பட்டு வந்தது. அதனை மாற்றி அங்குத் தமிழும் பயிற்றுவிக்கப்படும் நிலையைப் பன்னீர்செல்வம் உருவாக்கினார். மேலும் “சமற்கிருதக் கல்லூரி’ என்று இருந்த பெயரை “அரசர் கல்லூரி’ என்றும் பெயர் மாற்றினார். 1937ஆம் ஆண்டு டிசம்பர் மாதத்தில் இந்த நிகழ்ச்சி நடைபெறும் இடத்திற்கு அருகிலுள்ள நீடாமங்கலத்தில் காங்கிரசு மாநாடு நடந்தது. மதிய உணவு வேளையில் 17 தாழ்த்தப்பட்ட சமுதாயத்தினர் பிற சாதியினருடன் அமர்ந்து உணவு அருந்தியது கண்டு உயர் சாதியினர் அவர்களை வெளியே இழுத்து வந்து, அடித்து, மொட்டை அடித்து, கழுதை மேலே ஏற்றி ஊர்வ லமாக நடத்தினர். அவர்கள் செய்தது பிறருடன் சேர்ந்து சமமாக உணவருந்தியதுதான். விடுதலை ஏட்டில் தந்தை பெரியார் அந்த நிகழ்ச்சியை வன்மையாகக் கண்டித்து எழுதினார். எழுதிய விடுதலை மீது அவதூறு வழக்கு போடப்பட்டது. அந்த சமயம் விடுதலையின் நிலை சார்பாக வாதாடி வெற்றி கண்டவர் சர்.ஏ.டி.பன்னீர் செல்வம் ஆவார். சாதியின் கொடுமை அந்நாளில் நிலவிய விவரம் அது. அத்தகைய சாதிக் கொடுமையைப் போக்க தந்தை பெரியாருக்குத் துணையாக இருந்த தளபதிகளில் முதன்மையானவர் சர்.ஏ.டி.பன்னீர்செல்வம்.

ஒரு முக்கிய கவிதையில் புரட்சிக் கவிஞர் பாரதிதாசன் அவர்கள், தலைவா என்று அழைத்து விட்டால் சிலரின் தலை துள்ளிப்போகும் இந் நாளில் தாழை மட்டை, முருங்கை மிளார், பேயத்

**குறிப்பு**

திக் கொம்பு இவையெல்லாம் தான் தலைவன், தன் தலைவன் என்று தலைதுள்ளிப் போகும் இந்நாளில் பன்னீர்செல்வம் அவன் தோளுக்கு இட்டமலர் மாலை தன்னை தன் தலைவன் (பெரியார்) தாளுக்கு இட்ட பெரியோன் என்று சிறப்புற எழுதிப் பாராட்டினார்! தஞ்சை ஆதி திராவிடர் மாணவர்களின் நலன்காக்க அவர்களுக்கு "உணவு விடுதி' ஒன்றை ஏற்படுத்தி அந்த வகுப்பு மாணவர்கள் கல்வி உயர்வுக்குப் பாடுபட்டார். தஞ்சை மாவட்ட கூட்டுறவு வங்கித் தலைவராகவும் அவர் சில காலம் பணியாற்றினார். சர்.ஏ.டி. பன்னீர்செல்வத்தின் மறைவு, தமிழர்களுக்கும் நீதிகட்சியினர்களுக்கும் பெரியார் அவர்களுக்கும் ஈடுசெய்ய முடியாத பேரிழப்பாக அமைந்தது.

**உங்கள் முன்னேற்றத்தைச் சரிபார்க்கவும்**

1. திராவிடர் இல்லம் யாரால் துவங்கப்பட்டது?
2. வெள்ளுடை வேந்தர் என்பவர்?

## 13.7 உங்கள் முன்னேற்றத்தைச் சரிபார்க்கும் வினாக்களுக்கான விடைகள்

1. திராவிடர் இல்லம் என்கிற மாணவர்களுக்கான விடுதியையும் நடேசமுதலியார் உருவாக்கினார். திராவிட சமூக மாணவர்களின் பிற்போக்கான நிலையைக் கண்டு வருந்திய அவர் இவ்விடுதியைத் தொடங்கினார்.

2. வெள்ளுடை வேந்தர் என்பவர் பி. தியாகராய செட்டி என்னும் பிட்டி தியாகராயர் ஆவார். இவர் நீதிக்கட்சியின் நிறுவனர்களுள் ஒருவராவார்.

## 13.8 சுருக்கவுரை

- டாக்டர் நாயரின் மறைவுக்குப் பின் அவர் எதிர்பார்த்த நீதிக்கட்சி ஆட்சி அமைந்து பல்வேறு சாதனைகளை சமூகத்திலும், அரசியலிலும் தங்களுக்கு அளிக்கப்பட்ட குறைந்த அதிகாரத்தில் செய்து சாதனை படைத்தது.

- தியாகராயரின் நினைவாக இன்றும் சென்னையிலுள்ள ஒரு கல்லூரிக்கும இவரது பெயர் உள்ளது. மேலும் சென்னை தியாகராயர் நகர் என்பது இவரைக் குறிப்பதுவே. பெங்களூரிலும் தியாகராயர் நகர் என்ற பகுதி உள்ளது. இந்திய அரசு அண்மையில் இவரினுருவம் பொறித்த அஞ்சல் தலையை வெளியிட்டுப் பெருமை சேர்த்தது. அஞ்சல் தலையின் பின்னணியில் தறி நெய்யும் நெசவாளியின் உருவம் காணப்படுகிறது.

- டாக்டர் நடேசனார் மரணம் அடைந்தபோது 'குடி அரசு' இதழில் பெரியார் எழுதிய இரங்கல் குறிப்பைப் படித்துப் பார்த்தால்

நடேசனாரின் கபடமற்ற தன்மையைப் புரிந்துகொள்ளலாம்: "டாக்டர் நடேச முதலியார் நலிந்தார் எனும் சேதி கேட்டு நம் நாட்டில் வருந்திடாத பார்ப்பனர் அல்லாத தமிழ் மக்கள் எவரும் இருந்திட மாட்டார்கள்.

- தஞ்சையை ஆண்ட அரசர் பரம்பரையினரால் அமைக்கப்பட்ட திருவையாறு கல்லூரியில் "சமற்கிருதம்' மட்டுமே பயிற்றுவிக்கப்பட்டு வந்தது. அதனை மாற்றி அங்குத் தமிழும் பயிற்றுவிக்கப்படும் நிலையைப் பன்னீர்செல்வம் உருவாக்கினார். மேலும் "சமற்கிருதக் கல்லூரி' என்று இருந்த பெயரை "அரசர் கல்லூரி' என்றும் பெயர் மாற்றினார்.

## 13.9 முக்கிய கருத்துப்படிமங்கள்

- டி எம் நாயர்
- சி நடேசமுதலியார்
- பி. தியாகராயச்செட்டியார்
- ஈ.வெரா பெரியார்
- ஏ.டி பன்னீர் செல்வம்

## 13.10 சுயமதிப்பீட்டு பயிற்சி வினாக்கள்

**குறுகிய வினாக்களுக்கு விடையளிக்கவும்**

1. டி எம் நாயர் பற்றி மதிப்பிடுக?

2 தியாகராயச்செட்டியார் பற்றி சிறு குறிப்பு வரைக?

**விரிவான வினாக்களுக்கு விடையளிக்கவும்**

1. ஈ.வெரா பெரியாரின் சமூகப் பணிகளைப் பற்றிக் கட்டுரை வரைக?

## 13.11 மேலும் படிக்க


- ஐயங்கார்,சீனிவாசீ. வு (2001), *தமிழர்களின் வரலாறு: ஆரம்ப காலத்திலிருந்து 600 கி.பி வரை.* டெல்லி
- கிருஸ்ணசுவாமி.அ, (1977) விஜயநகரபப் பேரரசின் வரலாறு (கிபி1525 வரை) தமிழ்நாட்டுப் பாடநூல் நிறுவனம், அண்ணாமலைநகர்.

- சர்மா,சு.ளு. (2006). *பண்டைய இந்தியாவின் முந்தைய காலம்.* ஆக்ஸ்∴போர்ட் யுனிவர்சிட்டி பிரஸ்.
- சாஸ்திரி, ராமசாமி. (2002) *தமிழர்கள்: மக்கள், அவர்களின் வரலாறு மற்றும் கலாச்சாரம்.* புதுடெல்லி, காஸ்மோ பப்ளிகேஷன்ஸ்
- சிராஜீத்தின, (2010), *தமிழ்நாட்டு வரலாறு (கி.பி. 1987 வரை),* பாவை பப்ளிகேசன், சென்னை
- தேவநேயப்பாவணர். (1992) *பண்டைத் தமிழர்* நாகரிகமும் *பண்பாடும்,* கழக வெளியீடு சென்னை
- மாதவன்,சித்ரா, (2005), *தமிழ்நாட்டின் வரலாறு மற்றும் கலாச்சாரம்: தொகுதி-1 (கி.பி.1310 வரை).* டெல்லி

# அலகு XIV

## பொபிலி அரசர் - பனகல்அரசர் - சௌந்தரப்பாண்டியன் அண்ணாமலைச்செட்டியர்



## 14.0 முன்னுரை

திவான் பகதூர் சர் ஆற்காடு இராமசாமி முதலியார் (1887 – 1976) ஓர் இந்திய வழக்கறிஞரும் அரசியல்வாதியும் இராசதந்திரியும் ஆவார். இவர் நீதிக்கட்சியின் மூத்த தலைவர்களுள் ஒருவர். இந்திய விடுதலைக்கு முன்னும் பின்னும் இந்திய அரசாங்கத்தில் நிருவாகம், ஆட்சி சார்ந்த பல பதவிகளை வகித்தவர்.

ராமகிருஷ்ண ரங்கா ராவ் என்னும் இயற்பெயர் கொண்ட பொபிலி அரசர் (பிப்ரவரி 20, 1901-மார்ச் 10, 1978) 1930 களில் நீதிக்கட்சியின் தலைவராகவும், சென்னை மாகாணத்தின் முதல்வராகவும் இருந்தவர். பின்னாளில் இந்திய அரசியலமைப்பு சட்ட ஆணையத்தின் உறுப்பினராகவும், ஆந்திர சட்டமன்ற உறுப்பினராகவும் இருந்தார்.

தற்கால ஆந்திரப் பிரதேச மாநிலத்தின் பொப்பிலி சமஸ்தானத்தின் மன்னராக இருந்தவர்.

குறிப்பு

பனங்கன்டி ராமராயநிங்கார் என்னும் இயற்பெயர் கொண்ட பனகல் அரசர் (ஜூலை 9, 1866 – டிசம்பர் 16, 1928) நீதிக்கட்சியின் தலைவர்களுள் ஒருவரும், சென்னை மாகாணத்தின் இரண்டாவது முதலமைச்சருமாவார்.

சௌந்திரப்பாண்டிய நாடர் பட்டிவீரன்பட்டியில் பிறந்து, தான் பிறந்த ஊர் பெயரைத் தனது பெயருடன் இணைத்த வ. பட்டிவீரன்பட்டி ஐயா சௌந்தரபாண்டியன் நாடார் அவர்கள், நாடார் மகாஜன சங்கத்தின் முக்கிய அங்கமாக இருந்தவர். சென்னை சட்ட சபை உறுப்பினராகத் தேர்ந்தெடுக்கப்பட்ட ‘முதல் நாடார்’ என்ற பெருமைக்குரியவர். பெரியார் அவர்கள், உருவாக்கிய சுயமரியாதை இயக்கத்தோடு, நாடார் சமூகத்தை இணைக்கப் பெரிதும் பாடுபட்டார்.

சமூக நோக்கும் மனித நேயப் பண்பாடும் வளர்ந்தோங்கிய நகரத்தார் சமுதாயத்திலே பெருஞ்செல்வமும் செல்வாக்கும் பெற்றிருந்த இளையாத்தங்குடி பட்டணசாமி பிரிவைச் சேர்ந்த சா.ராம.முத்தையாச் செட்டியாரும் ஒருவர். இவரின் நான்கு புதல்வர்களில் நான்காமவராக 1881 ஆம் ஆண்டு செப்டம்பர் திங்கள் 3ஆம் நாள் இராமநாதபுரம் மாவட்டம் கானாடுகாத்தான் என்கிற ஊரில் பிறந்தவரே அரசர் அண்ணாமலைச் செட்டியார். தெய்வபக்தி, அறச்சிந்தனை, தொழில் அர்ப்பணிப்பு ஆகியன மேலோங்கிய குடும்பத்தில் பிறந்ததினால் “கருவில் அமைந்த திருவே” இவரின் பிற்காலத்திய சாதனைகள் அனைத்திற்கும் அடிப்படையாக அமைந்தது எனலாம்.

## 14.1 நோக்கம்

- இராமசாமி முதலியார் நீதிக்கட்சியின் மூத்த தலைவர்களுள் ஒருவர் என்பதைப் பற்றி அறிந்துக்கொள்ள முடிகின்றது
- பொபிலி அரசர் இந்திய அரசியலமைப்பு சட்ட ஆணையத்தின் உறுப்பினராகவும், ஆந்திர சட்டமன்ற உறுப்பினராகவும் இருந்தார் என்பதைப் பற்றி அறிந்துக்கொள்ள முடிகின்றது
- பனகல்அரசர் சென்னை மாகாணத்தின் இரண்டாவது முதலமைச்சருமாவார் என்பதைப் பற்றி அறிந்துக்கொள்ள முடிகின்றது
- சௌந்தரப்பாண்டியன பெரியார் அவர்கள், உருவாக்கிய சுயமரியாதை இயக்கத்தோடு இணைந்துச் செயல்பட்டதைப் பற்றி அறிந்துக்கொள்ள முடிகின்றது

* அண்ணாமலைச்செட்டியர் "கருவில் அமைந்த திருவே" எனப் போற்றப்படுவதைப் பற்றி அறிந்துக்கொள்ள முடிகின்றது



## 14.2 இராமசாமி முதலியார்

திவான் பகதூர் சர் ஆற்காடு இராமசாமி முதலியார் (1887 – 1976) ஓர் இந்திய வழக்கறிஞரும் அரசியல்வாதியும் இராசதந்திரியும் ஆவார். இவர் நீதிக்கட்சியின் மூத்த தலைவர்களுள் ஒருவர். இந்திய விடுதலைக்கு முன்னும் பின்னும் இந்திய அரசாங்கத்தில் நிருவாகம், ஆட்சி சார்ந்த பல பதவிகளை வகித்தவர்.

**வாழ்க்கைக் குறிப்பு:** இராமசாமி முதலியார் 1887இல் தென்னாற்காட்டில் ஒரு வசதி படைத்த அகமுடையார் குடும்பத்தில் பிறந்தார். இவரும் ஆற்காடு லட்சுமணசாமி முதலியாரும் இரட்டையர்கள் ஆவர் . இவர் கர்னூலிலுள்ள முனிசிப்பல் உயர்நிலைப் பள்ளியில் படித்தார். சென்னை கிருத்துவக் கல்லூரியில் இளங்கலைப் பட்டமும் சென்னை சட்டக் கல்லூரியில்சட்டமும் பயின்றார். சட்டப்படிப்பு முடிந்தபின், அரசியலில் ஈடுபடுவதற்கு முன்பு வழக்குரைஞராகப் பணியாற்றினார். 1920இல் சென்னை சட்ட மன்ற உறுப்பினராகத் தேர்ந்தெடுக்கப்பட்டார்.1920 - 1926 1931-1934 காலகட்டங்களில் சட்ட மன்ற உறுப்பினராக இருந்த ராமசாமி முதலியார் 1934இல் இடம்பெற்ற சென்னை மாகாணச் சட்டமன்றத் தேர்தலில், எஸ். சத்தியமூர்த்தியிடம் தோற்றுப் போனார்.

**நீதிக்கட்சி:** இராமசாமி முதலியார், நீதிக்கட்சி ஆரம்பிக்கப்பட்ட காலத்திலிருந்தே (1917) கட்சியில் இருந்தவர். நீதிக்கட்சியின் பொதுச்செயலாளராகப் பொறுப்பு வகித்தார்.சூலை 1918இல் இராமசாமி முதலியார், மருத்துவர் டி. எம். நாயர்,கூர்ம வெங்கட ரெட்டி நாயுடு ஆகிய மூவரடங்கிய குழு ஒன்று இங்கிலாந்து சென்று நீதிக்கட்சி சார்பில் வகுப்புவாரியான பிரதிநிதித்துவத்தை வலியுறுத்தி அதற்கான சான்றுகளைப் பிரித்தானிய நாடாளுமன்றச் சீர்திருத்தச் செயற்குழு முன் சமர்ப்பித்தது. இவர் நீதிக்கட்சியில் படிப்படியாக முன்னேறி அக்கட்சியின் மூளையென்று கருதப்படும் அளவுக்கு உயர்ந்தார் இந்தியாவில் வெவ்வேறு பகுதிகளிலும் உள்ள பிராமணர்அல்லாதோரை ஒன்றிணைக்கவும் அவர்களையும் உள்ளடக்கி மாநாடுகளை நடத்தவும் முயற்சிகள் மேற்கொண்டார். இவர் ஒரு சிறந்த பேச்சாளர். இவரது பேச்சுக்கள் ஊக்கம் மிக்கவையாக அமைந்திருந்தன.

நவம்பர் 8, 1926இல் நடைபெற்ற சென்னை சட்டமன்றத் தேர்தலில் நீதிக்கட்சி 98இற்கு 21 இடங்களை மட்டுமே பிடித்து மிகப் பெரிய தோல்வியைத் தழுவியது. தோல்வியடைந்தவர்களில் முதலியாரும்

ஒருவர். தற்காலிகமாக அரசியலில் இருந்து ஓய்வு பெற்று பி. என். ராமன் பிள்ளைக்குப் பதில் நீதிக்கட்சியின் ஜஸ்டிஸ்செய்தித் தாளின் பொறுப்பை ஏற்று நடத்தினார்.இவரது மேற்பார்வையின் கீழ் அச்செய்தித் தாள் பிரபலமடைந்து அதன் விற்பனையும் அதிகமானது.மார்ச் 1, 1929இல் இவரும் நீதிக்கட்சியின் மற்றொரு முக்கியத் தலைவருமான சர் ஏ. டி. பன்னீர்செல்வமும் நீதிக்கட்சி சார்பில் கோரிக்கைகளை சைமன் குழு முன் வைத்தனர்.இவர் 1928 முதல் 1930 வரை சென்னை நகர மேயராகப் பணிபுரிந்தார். 1935இல் அரசின் வரித்துறையில் நியமிக்கப்பட்டதால் ஜஸ்டிஸ் செய்தித் தாளின் ஆசிரியர் பொறுப்பிலிருந்து விலகினார்.இவர் பிரித்தானியஅரசின் இந்தியத்துறை அமைச்சரின் செயற்குழு உறுப்பினராகவும் இருந்தார். பெப்ரவரி 25, 1937இல் பக்கிங்ஹாம் அரண்மனையில் இவருக்கு சர் பட்டம் வழங்கப்பட்டது.

**அனைத்திந்தியப் பிராமணரல்லாதோர் இயக்கம்:** இராமசாமி முதலியாருக்கு ஷாகு மகாராஜுடனும் மகாராட்டிரப் பிராமணரல்லாதோர் கூட்டத் தலைவர்களோடும் மற்ற வட இந்தியப் பிராமணரல்லாதோர் கூட்டத் தலைவர்களோடும் நட்புமுறையிலான நல்ல உறவு இருந்தது. ராமசாமி முதலியார் இந்தியாவின் வெவ்வேறு பகுதிகளிலும் உள்ள பிராமணரல்லாதோர் அமைப்புகளின் தலைவர்களை ஒருங்கிணைப்பதிலும் அவர்களுக்கான மாநாடுகள் நடத்துவதற்கும் உதவினார்.திசம்பர் 18,1922இல் சதாராவில் இரண்டாம் இராஜாராமின் தலைமையில் நடந்த பிராமணரல்லாதோர் மாநாட்டில் இவரும் பங்கேற்றார்.திசம்பர் 26, 1924இல் பெல்காமில் நடந்த அனைத்திந்தியப் பிராமணரல்லாதோர் மாநாட்டில் கலந்து கொண்டு இவர் ஆற்றிய சொற்பொழிவு அனைவராலும் பாராட்டிப் பேசப்பட்டது. பெப்ரவரி 8, 1925இல் நடந்த ஏழாவது பிராமணரல்லாதோர் மாநாட்டில் கலந்து கொண்டு பிராமணரல்லாதவர்களிடம் இருக்க வேண்டிய ஒற்றுமையின் அவசியத்தை வலியுறுத்திப் பேசினார்.

1925இல் சர் பி. டி. தியாகராய செட்டியின் மறைவுக்குப்பின் ஷாகு மஹாராஜின் சத்ய ஷோதக் சமாஜையும்நீதிக்கட்சியையும் இணைக்கும் பாலமாக இருந்தவர் முதலியார் ஒருவர் மட்டுமே. திசம்பர் 19, 1925இல் சென்னை விக்டோரியா மண்டபத்தில் அனைத்திந்தியப் பிராமணரல்லாதோர் மாநாடு நடத்த பனகல் அரசருக்குத் துணை புரிந்தார். திசம்பர் 26, 1925இல் இரண்டாவதாக மறுபடியும் ஒரு மாநாட்டை அமராவதியில் நடத்தினார். அது இரு தொடர்களாக நடந்தது. முதல் கூட்டத்தொடருக்குக் கோலாப்பூர் மகாராசாவும் இரண்டாவது தொடருக்குப் பனகல் அரசரும் தலைமை தாங்கினர். இரண்டாவது தொடரில் முதலியார் பேசியது: "பிராமணரல்லாதோர் இயக்கத்தினைப் பற்றி நான் விளக்க வேண்டிய கட்டத்தை அது தாண்டிவிட்டது. அதன் செயல்பாடுகள்பம்பாயிலிருந்து சென்னை வரையும் விந்திய மலையிலிருந்து கன்னியாகுமரி வரையும் பரவியுள்ளன. நாடு முழுவதும் அதன் கொள்கைகள் பரவிய மின்னல் வேகமும் வீச்சுமே இயக்கத்தின்

நிலையை விளக்கிவிடும். " முதலியாரின் பேச்சைத் தி இந்து நாளிதழ், பிற மாகாணத்தில் தன்னை நிலை நிறுத்திக் கொள்ள வேண்டும் என்ற அவரது விருப்பம் இந்த அளவுக்கு அவரது கற்பனையைத் தூண்டியிருக்கிறது என விமர்சனம் செய்தது.

**போர்க்கால அமைச்சரவையில்:** 1939இல் இரண்டாம் உலகப்போர் மூண்டபோது இராமசாமி முதலியார், வைசிராயின் செயற்குழு உறுப்பினராக நியமிக்கப்பட்டார். ஜுன் 1942ல் அவருக்கு கே.சி.எசு.ஐ (முஊளுஐ) பட்டம் வழங்கப்பட்டது. சூலை 1942இல் பிரித்தானியப் பிரதம மந்திரி வின்ஸ்டன் சர்ச்சிலின் போர்க்கால அமைச்சரவைக்கு நியமிக்கப்பட்ட இரு இந்தியரில் இவரும் ஒருவர். பிரித்தானியரின் ஆட்சிக்குட்பட்ட மற்றப் பகுதிகளின் பிரதிநிதிகளுக்கு வழங்கப்பட்டிருந்த உரிமைகளும் சலுகைகளும் இவர்களுக்கும் சமமாக வழங்கப்பட்டிருந்த்து.

**ஐக்கிய நாடுகள் பொருளாதார, சமூக மன்றத் (நுஊழுளுழுஊ) தலைவராக:** 1945இல் ஏப்ரல் 25 முதல் சூன் 26 வரை சான் பிரான்சிஸ்கோவில் நடைபெற்ற ஐக்கிய நாடுகள் அவையின் மாநாட்டில் இந்தியப் பிரதிநிதியாக முதலியார் கலந்து கொண்டார். அங்கு பொருளாதார, சமுதாயப் பிரச்சினைகளைப் பற்றி விவாதித்த செயற்குழுக் கூட்டதிற்குத் தலைமை தாங்கினார். சனவரி 23,1946 அன்று சர்ச் ஹவுஸ், இலண்டனில் நடைபெற்ற ஐக்கிய நாடுகள் பொருளாதார, சமூக மன்றக் கூட்டத்தில் மன்றத்தின் முதல் தலைவராகத் தேர்ந்தெடுக்கப்பட்டார்.முதலியாரின் தலைமையில் பெப்ரவரி 1946இல் நடந்த மன்றக் கூட்டத்தில் பன்னாட்டுச் சுகாதார மாநாடு ஒன்று நடத்தப்படவேண்டும் என்ற தீர்மானம் நிறைவேற்றப்பட்டது. சூன் 19, 1946இல் பன்னாட்டுச் சுகாதார மாநாடு நடந்தது. அதனை முதலியார் தொடங்கி வைத்தார். அம்மாநாட்டிற்றான் உலக சுகாதார அமைப்பு (றுர்ழு) உருவானது. அவ்வமைப்பின் சட்டதிட்டங்கள் விவாதிக்கப்பட்டு 61 நாடுகளைச் சேர்ந்த பிரதிநிதிகளாலும் ஏற்றுக்கொள்ளப்பட்டன.பொருளாதார, சமூக மன்றத் தலைவராக ஓராண்டு பணிபுரிந்து பின் பணிக்காலம் முடிவடைந்ததால் இந்தியாவுக்குத் திரும்பி மைசூரின் முதலமைச்சராகப் (திவான்) பதவியேற்றார். மைசூர் மகாராஜா ஜயச்சாமராஜ வாடியாருக்கு சுதந்திர இந்தியாவுடன் இணைய வேண்டாமென ஆலோசனை கூறினார்.

### 14.3 பொபிலி அரசர் மற்றும் பனகல் அரசர்

ராமகிருஷ்ண ரங்கா ராவ் என்னும் இயற்பெயர் கொண்ட பொபிலி அரசர் (பிப்ரவரி 20, 1901-மார்ச் 10, 1978) 1930 களில் நீதிக்கட்சியின் தலைவராகவும், சென்னை மாகாணத்தின் முதல்வராகவும் இருந்தவர். பின்னாளில் இந்திய அரசியலமைப்பு சட்ட ஆணையத்தின் உறுப்பினராகவும், ஆந்திர சட்டமன்ற உறுப்பினராகவும் இருந்தார்.

தற்கால ஆந்திரப் பிரதேச மாநிலத்தின் பொப்பிலி சமஸ்தானத்தின் மன்னராக இருந்தவர்.



**பிறப்பும் கல்வியும்:** தற்போதைய ஆந்திர மாநிலத்தில் 1901 -இல் ராமகிருஷ்ண ரங்கா ராவ் பொபிலி அரசகுலத்தில் பிறந்தார். அவரது தந்தை வெங்கட கிருஷ்ண ரங்கா ராவ் பொபிலியின் ஜமீந்தாராக இருந்தவர். ராமகிருஷ்ண ரங்கா ராவுக்கு ஐரோப்பிய ஆசிரியர்களைக் கொண்டு வீட்டிலேயே கல்வி அளிக்கப் பட்டது. 1921 இல் அவரது தந்தை மறைந்த பின் பொபிலியின் பதின்மூன்றாவது அரசராக இவர் அறிவிக்கப்பட்டார்.

**அரசியல் வாழ்க்கை:** ரங்கா ராவ் 1925 ஆம் ஆண்டு இந்திய நாடாளுமன்றத்தின் மேலவையில் (கவுன்சில் ஆ.ஃ.ப் ஸ்டேட்) உறுப்பினரானார் 27 வரை அப்பதவியில் நீடித்தார். 1930 இல் சென்னை மாகாண சட்டமன்றத் தேர்தலில் விசாகப்பட்டினம் தொகுதியில் நீதிக்கட்சி சார்பில் போட்டியிட்டு வெற்றி பெற்றார். (இக்காலகட்டத்தில் தான் அவர் ஆந்திர பல்கலைக்கழகத்தின் வேந்தராகவும் பணியாற்றினார்) 1931 இல் லண்டனில் நடை பெற்ற இரண்டாவது வட்ட மேஜை மாநாட்டில் இந்திய நிலச்சுவான்தார்களின் பிரதிநிதியாகக் கலந்து கொண்டார். அதே ஆண்டு நீதிக்கட்சியில் ஜமீந்தார்கள் கோஷ்டியின் தலைவரானார். நீதிக்கட்சித் தலைவரும், சென்னை முதல்வருமான முனுசாமி நாயுடுக்கு எதிராகக் கட்சிக்குள் போர்க் கொடி தூக்கினார். அமைச்சர் பதவிகிட்டாத ஜமீந்தார்கள் அவருக்கு ஆதரவாக இருந்தனர். 1932 அக்டோபரில் நடைபெற்ற நீதிக்கட்சியின் மாநாட்டில் பெரும் குழப்பத்திற்கிடையே ரங்கா ராவ், கட்சியின் தலைவராகத் தேர்ந்தெடுக்கப் பட்டார். கட்சித் தலைமையிலிருந்து வெளியேற்றப்பட்ட முனுசாமி நாயுடு, ரங்கா ராவ் அடுத்து தன் மீது நம்பிக்கையில்லாத் தீர்மானம் கொண்டு வருவார் என்ற அச்சத்தில் முதல்வர் பதவியிலிருந்து விலகினார். அவருக்குப் பதில் நவம்பர் 5, 1932 இல், ரங்கா ராவ் சென்னை மாகாண முதல்வரானார்.

**சென்னை மாகாண முதல்வர்:** 1937 வரை முதல்வராக நீடித்த ரங்கா ராவின் ஆட்சிக் காலத்தில், நீதிக்கட்சி உட்கட்சிப் பூசல்களால் நலிந்து மக்களின் ஆதரவையும் இழந்து அக்காலத்தில் நடந்த அனைத்து தேர்தல்களிலும் இந்திய தேசிய காங்கிரசிடம் தோல்வியடைந்தது. 1930 களில் உலகைப் பீடித்த பெரும் பொருளியல் வீழ்ச்சியினால் சென்னை மாகாண மக்கள் கடும் பாதிப்புக்குள்ளாகியிருந்தனர். பொபிலி அரசர் தனது ஆதரவாளர்களான ஜமீன்தார்களை திருப்தி படுத்த எடுத்த பல முடிவுகள் சாதாரண பொதுமக்களுக்குப் பெரும் கஷ்டங்களை ஏற்படுத்தின. சிறு விவசாயிகள் கடன் நெருக்கடியிலிருந்து விடுதலை பெற கடன் தள்ளுபடி சட்டம் கொண்டு வர ஆங்கில அரசு முயன்றபோது ரங்கா ராவ் அதனைத் தடுத்துவிட்டார். அதே போல் நிலவரியைக் குறைக்கக் கோரி காங்கிரசு

விவசாயிகளுக்கு ஆதரவாக நடத்திய போராட்டங்களை இரும்புக் கரம் கொண்டு ஒடுக்கினார். உள்ளாட்சி அமைப்புகளின் செயல்பாட்டில் தலையிட்டு அவற்றின் சுதந்திரத்தைப் பறித்தார். பொருளாதார நெருக்கடியின் காரணமாக மற்ற மாகாண அரசுகள் அமைச்சர்களின் எண்ணிக்கையைக் குறைத்துக் கொண்டிருந்த கால கட்டத்தில், தன் ஆதரவாளர்களைத் திருப்திப் படுத்த அமைச்சரவையை விரிவு படுத்த முயன்றார். அவரது அமைச்சரவையில் இடம் பெற்றிருந்தோர் அண்டைய மத்திய மாகாணத்தின் அமைச்சர்களைக் காட்டிலும் இரு மடங்கு சம்பளம் வாங்கிக் கொண்டிருந்தனர். நீதிக்கட்சியின் மீது மக்கள் கடும் கோபம் கொண்டனர். 1934 இல் நடை பெற்ற தேர்தலில் அக்கட்சியை தோற்கடித்தனர். ஆனால் வெற்றி பெற்ற காங்கிரசு இரட்டை ஆட்சிமுறையின் கீழ் பதவியேற்க மறுத்து விட்டதால் ரங்கா ராவே மீண்டும் சிறுபான்மை அரசமைத்தார்.

குறிப்பு

நீதிக்கட்சியின் தொடர் தோல்விகளால் அக்கட்சியின் பல தலைவர்களும், தொண்டர்களும் கட்சியிலிருந்து விலகிக் காங்கிரசில் இணைந்தனர். ஊழலும், நிர்வாகக் கோளாறுகளும் மலிந்த ரங்கா ராவின் ஆட்சியை நீதிக் கட்சியின் நிரந்தர ஆதரவாளர்களான ஐரோப்பியர் கூட வெறுக்க ஆரம்பித்தனர். ரங்கா ராவின் மீது பொது மக்களுக்கிருந்த கோபத்தைப் பற்றிச் செய்தி வெளியிட்ட “ஜமீன் ரயாட்” இதழ், “கிராமங்களில் கிழவிகள் கூடப் பொபிலி அரசு எப்பொழுது ஒழியும்” என்று ஏங்குவதாகக் கூறியது. இவ்வாறு அனைத்து தரப்பினரின் எதிர்ப்பையின் சம்பாதித்த நீதிக் கட்சி, 1937 இல் மாநில சுயாட்சி முறையின் கீழ் சென்னை மாகாணத்திற்கு நடத்தப்பட்ட முதல் சட்டமன்றத் தேர்தலில் படுதோல்வி அடைந்தது. 215 தொகுதிகளில் 21 தொகுதிகளில் மட்டுமே வென்றது. காங்கிரசு பெரும்பானமை பெற்று ராஜகோபாலாச்சாரி சென்னையின் முதல்வரானார். தோல்வியினால் நீதிக்கட்சி நிலை குலைந்து போனது. ரங்கா ராவ் ஐரோப்பிய நாடுகளுக்கு நெடும் பயணமாகச் சென்று விட்டார்.

ரங்கா ராவின் பதவிக்காலத்தில் சென்னை நகரத்தில் மீண்டும் மேயர் பதவி ஏற்படுத்தப்பட்டது. 1688 முதல் 1801 வரை பழக்கத்திலிருந்த மேயர் ஆட்சி முறையை ஜனவரி 17, 1933 இல் நகர முனிசிபல் சட்டத்தின் மூலம் ரங்காராவ் மீண்டும் கொண்டு வந்தார். நீதிக்கட்சியின் ஸ்ரீராமுலு நாயுடு சென்னையின் மேயரானார். அவருக்குப் பின் மற்றொரு நீதிக்கட்சித் தலைவரான முத்தையா செட்டியார் மேயராகப் பணியாற்றினார். ரங்காராவின் நிர்வாகம் ஜமீன்தார் ஆதரவு அரசாகவே பரவலாகக் கருதப்பட்டாலும், அவரது ஆட்சிகாலத்தில் சிறு விவசாயிகளுக்கு ஆதரவாகச் சில நிகழ்வுகளும் நடந்தன. ரங்கா ராவின் அரசு பண்ணைத்தோட்டங்கள் நிலச் சட்டம், 1908 ஐ திருத்தியதன் மூலம் சிறு விவசாயிகளின் சில உரிமைகளைப் பாதுகாத்தது இடைத்தரகர்களான ”இனாம்தார்”களின் பிடியிலிருந்து அவர்களை விடுவிக்க முயற்சியும் செய்தது. ரங்கா ராவின் ஆட்சி காலத்தில் (1936)

தான் சென்னை மாகாணத்தின் கஞ்சம் மாவட்டம் பிரிக்கப்பட்டு புதிதாக உருவாக்கப்பட்ட ஒரிசா மாநிலத்துடன் இணைக்கப்பட்டது.

குறிப்பு

**பிற்கால வாழ்க்கை:** ரங்கா ராவ் 1946-51 இல் இந்தியாவின் அரசியல் அமைப்பு சட்டத்தை இயற்றிய இந்திய அரசியலமைப்பு நிர்ணயமன்றத்தின் உறுப்பினராகப் பணியாற்றினார். பின்னர் பல ஆண்டுகள் அரசியலிலிருந்து ஓய்வு பெற்றார். 1967 ஆம் ஆண்டு ஆந்திர சட்டமன்றத் தேர்தலில் வென்று 1972 வரை சட்டமன்ற உறுப்பினராகப் பணியாற்றினார். ரங்கா ராவ் குதிரைப் பந்தயம், போலோ போன்ற விளையாட்டுகளில் ஆர்வம் கொண்டவர். ரங்கா ராவ், மார்ச் 10, 1978 இல் மரணமடைந்தார். அவருக்குப் பின் அவரது மகன் வெங்கடகோபால கிருஷ்ண ரங்கா ராவ் பொபிலியின் அரசரானார்

### 14.3.1 பனகல் அரசர்

பனங்கன்டி ராமராயநிங்கார் என்னும் இயற்பெயர் கொண்ட பனகல் அரசர் (ஜூலை 9, 1866 – டிசம்பர் 16, 1928) நீதிக்கட்சியின் தலைவர்களுள் ஒருவரும், சென்னை மாகாணத்தின் இரண்டாவது முதலமைச்சருமாவார்.

**பிறப்பும் கல்வியும்** ராமராயநிங்கார் வேளமா சமூகத்தைச் சேர்ந்த நிலச்சுவான்தார்கள் குடும்பத்தில் 1866 ஆம் ஆண்டு பிறந்தார். திருவல்லிக்கேணி இந்து உயர் நிலைப் பள்ளியில் பள்ளிப் படிப்பையும் சென்னை மாநிலக் கல்லூரியில் இளங்கலைப் படிப்பையும் முடித்தார். 1899 ஆம் ஆண்டு சட்டப் படிப்பை முடித்து முதுகலைப் பட்டமும் பெற்றார்.

**அரசியல் வாழ்க்கை** ராமராயநிங்கார் 1912 இல் இந்தியாவின் மத்திய நாடாளுமன்றத்திற்கு நில உரிமையாளர்கள் மற்றும் சமீன்தார்களின் பிரதிநிதியாகத் தேர்ந்தெடுக்கப் பட்டார் 1915 வரை உறுப்பினராக நீடித்தார். 1914 ஆம் ஆண்டு நடேச முதலியார் தொடங்கிய சென்னை திராவிடர் சங்கத்தில் சேர்ந்தார். ஷாஹு மகாராஜின் பிராமணரல்லாதோர் இயக்கத்திலும் இணைந்து செயல்பட்டார். 1917 இல் டாக்டர் டி. எம். நாயரும், தியாகராய செட்டியும் சேர்ந்து தென்னிந்திய நல உரிமைச் சங்கம் எனப்படும் நீதிக்கட்சியைத் தொடங்கிய போது அதில் சேர்ந்தார். 1919 இல் பிராமணரல்லாதோருக்கு வகுப்புவாரி பிரதிநிதித்துவம் கோரி பிரித்தானிய நாடாளுமன்றத்தில் வாதாட இங்கிலாந்து சென்ற நீதிக்கட்சிக் குழுவில் ராமராயநிங்கார் அங்கம் வகித்தார்.

**அமைச்சராக:** 1920 ஆம் ஆண்டு இரட்டை ஆட்சி முறையின் கீழ் சென்னை மாகாணத்திற்கு நடை பெற்ற முதல் சட்டமன்றத் தேர்தலில் வெற்றி பெற்று சட்டமன்ற உறுப்பினரானார். சுப்பராயலு ரெட்டியார்

தலைமையில் அமைந்த முதலாம் நீதிக்கட்சி அரசவையில் உள்ளாட்சித் துறை அமைச்சரானார்.



**முதல்வராக:** ஏப்ரல் 11, 1921 இல், சுப்பராயுலு ரெட்டியார் உடல் நலக் குறைவு காரணமாக முதல்வர் பதவியிலிருந்து விலகினார். அவருக்குப் பின் ராமராயநிங்கார் முதல்வராகப் பதவியேற்றார். அவரது அமைச்சரவையில் கல்வி மற்றும் சுங்கத் துறை அமைச்சராக ஏ. பி. பாட்ரோ, வளர்ச்சித் துறை அமைச்சராக கூர்ம வெங்கட ரெட்டி நாயுடு ஆகியோர் இடம் பெற்றிருந்தனர். அதே ஆண்டு அரசு பணிகளில் வகுப்புவாரி இட ஒதுக்கீடு வழங்கும் அரசாணையைப் பிறப்பித்தார். தலித்துகள் "பறையர்" என்று குறிக்கப் படாமல் "ஆதி திராவிடர்" என்று குறிக்கப்பட வேண்டும் என்ற சட்டம் கொண்டு வந்தார். ஆனால் அதே ஆண்டு பக்கிங்காம்-கர்நாடிக் ஆலையில் நடைபெற்ற தொழிலாளர் வேலை நிறுத்தத்தின் போது தலித்துகளின் மீது அவரது அரசு கடுமையாக நடந்து கொண்டது. இதனால் தலித்துகளின் தலைவர் மயிலை சின்னத்தம்பி ராஜா நீதிக்கட்சியை விட்டு வெளியேறினார்.

1923 ஆம் நடை பெற்ற இரண்டாம் சட்ட மன்றத் தேர்தலில் நீதிக்கட்சி வெற்றி பெற்று ராமராயநிங்கார் மீண்டும் முதல்வரானார். ஆனால் கட்சியில் நிலவிய அதிருப்தி, கட்சிக்குள் பிளவுகளை ஏற்படுத்தியது. சி. ஆர். ரெட்டி, நடேச முதலியார், கூர்ம வெங்கட ரெட்டி நாயுடு, சுப்பராயன் என பல தலைவர்கள் கட்சியிலிருந்து வெளியேறி தனித்துப் போட்டியிட்டதால், நீதிக்கட்சி குறைவான இடங்களையே பிடிக்க முடிந்தது. சட்டமன்றம் கூடிய முதல் நாளே சி. ஆர். ரெட்டி தலைமையில் எதிர்க் கட்சிகள் ராமராயநிங்கருக்கு எதிராக நம்பிக்கையில்லாத் தீர்மானம் கொண்டு வந்தன. ஆளுநரால் நியமிக்கப்பட்ட உறுப்பினர்களின் துணை கொண்டு அவர் அத்தீர்மானத்தைத் தோற்கடித்தார். அதே ஆண்டு பிரித்தானிய அரசு அவருக்கு "பனகல் அரசர்" என்ற பட்டத்தை வழங்கிப் சிறப்பித்தது.

பனகல் அரசர் தன் இரண்டாம் அமைச்சரவையில் தமிழர்களுக்கு இடம் அளிக்க வேண்டும் என்றெழுந்த கோரிக்கையை ஏற்று சிவஞானம் பிள்ளையை வளர்ச்சித் துறை அமைச்சராக்கினார். தெலுங்கர்களுக்கென ஆந்திர பல்கலைக்கழகமும், தமிழர்களுக்கு அண்ணாமலை பல்கலைக்கழகமும் இவரது ஆட்சி காலத்தில் தொடங்கப்பட்டன. 1925 ஆம் ஆண்டு இந்து ஆலயங்களின் நிர்வாகத்தை அரசின் கட்டுப்பாட்டில் கொண்டு வருவதற்காக இந்து அறநிலையச் சட்டத்தை இயற்றினார். சென்னை நகரினை விரிவு படுத்துவதற்காக, நகரின் கிழக்கில் இருந்த பெரிய குளத்தை வறளச் செய்து நிலமாக்கினார். சென்னை நகரின் தி. நகர் மற்றும் அதனைச் சுற்றியுள்ள பகுதிகள் அவ்வாறு நீர் பரப்பிலிருந்து மீட்சி செய்யப் பட்டவையே. இவரது ஆட்சி காலத்தில் தான் நலிவுற்ற ஆலைகளுக்கு அரசு நிதி உதவி செய்யும் சட்டம் இயற்றப் பட்டது. 1926 ஆம் ஆண்டு நடைபெற்ற மூன்றாம் சட்டமன்றத்

குறிப்பு

தேர்தலில் பனகல் அரசரின் நீதிக்கட்சி தோல்வியடைந்தது. வெற்றி பெற்ற சுயாட்சி கட்சி ஆட்சி அமைக்க மறுத்து விட்டதால், ஆளுனர் கோஷன் இரண்டாம் பெரிய கட்சியின் தலைவர் பனகல் அரசரை ஆட்சியமைக்க அழைத்தார். ஆனால் சிறுபான்மை அரசு அமைக்க விருப்பமில்லாததால் பனகல் அரசர் மறுத்து விட்டார் சுப்பராயன் தலைமையில் சுயேட்சைகளின் அரசு அமைந்தபோது, எதிர்க் கட்சித் தலைவரானார். பனகல் அரசர், டிசம்பர் 16, 1928 இல் இறந்தார். அவரது நினைவாக தி. நகரின் மையப் பகுதியில் உள்ள பூங்கா "பனகல் பூங்கா" என்றும் சைதாப்பேட்டையிலுள்ள மாவட்ட வருவாய்த் துறை அலுவலகம் "பனகல் மாளிகை" என்றும் அழைக்கப்படுகின்றன.

## 14.4 சௌந்தரப்பாண்டியன்

சௌந்திரப்பாண்டிய நாடர் பட்டிவீரன்பட்டியில் பிறந்து, தான் பிறந்த ஊர் பெயரைத் தனது பெயருடன் இணைத்த வ. பட்டிவீரன்பட்டி ஐயா சௌந்தரபாண்டியன் நாடார் அவர்கள், நாடார் மகாஜன சங்கத்தின் முக்கிய அங்கமாக இருந்தவர். சென்னை சட்ட சபை உறுப்பினராகத் தேர்ந்தெடுக்கப்பட்ட 'முதல் நாடார்' என்ற பெருமைக்குரியவர். பெரியார் அவர்கள், உருவாக்கிய சுயமரியாதை இயக்கத்தோடு, நாடார் சமூகத்தை இணைக்கப் பெரிதும் பாடுபட்டார். நாடார் சமூகத்தின் முடிச்சூடா மன்னனாகத் திகழ்ந்த பட்டிவீரன்பட்டி ஐயா சௌந்தரபாண்டியன் நாடார் அவர்களின் வாழ்க்கை வரலாறு மற்றும் நாடார் சமூகத்திற்குப் பெரிதும் பெருமை சேர்த்த அவர்களின் செயல்கள் பற்றியறிய மேலும் தொடர்ந்து படிக்கவும்.

பிறப்பு: 28 செப்டம்பர், 1892, பிறப்பிடம்: பட்டிவீரன்பட்டி, தமிழ்நாடு, இந்தியா, இறப்பு: 22 பிப்ரவரி, 1953, பணி: நாடார் மகாஜன சங்க தலைவர், சென்னை சட்ட சபை உறுப்பினர் வ. பட்டிவீரன்பட்டி ஐயா சௌந்தரபாண்டியன் நாடார் அவர்கள், இந்தியாவில் உள்ள தமிழ்நாட்டில் இருக்கும் திண்டுக்கல் மற்றும் கொடைக்கானல் அருகிலுள்ள பட்டிவீரன்பட்டியில் சொந்தமான காபி தோட்டங்கள் வைத்திருந்த முக்கிய பண்ணையார் குடும்பத்தில் செப்டம்பர் மாதம் 28 ஆம் தேதி, 1892 ஆம் ஆண்டில் பிறந்தார்.

**ஆரம்பகால வாழ்க்கை:** சிறு வயதிலிருந்தே சௌந்தரபாண்டியன் நாடார் அவர்கள், பிராமண ஆதிக்கத்தைப் பார்த்து வளர்ந்தார். நாடார் சமூக மக்களின் மேம்பாட்டுக்காக உழைக்க வேண்டுமென்ற எண்ணம் அவரது இளம் பருவத்திலிருந்தே அவரது மனதில் விதையாய் அரும்பி, வளர்ந்து வந்தது. அப்போது சுதந்திரப் போராட்ட சூழலே நிலவியதால், அதன் தாக்கமும் அவரைப் பெரிதும் பாதித்தது.

**தொழில் வாழ்க்கை:** நாடார் மக்களின் நலனுக்காகவும், முன்னேற்றத்திற்காகவும் உறுதியாக செயல்பட்ட அவர், நாடார் மகாஜன சங்கத்தின் முக்கியத் தலைவராகத் தேர்ந்தெடுத்தனர். அவர், அப்பதவியில் 1920 ஆம் ஆண்டிலிருந்து 1930 ஆம் ஆண்டு வரை செம்மையாக செயல்பட்டு, அவரது மக்களுக்காக பல நலத்திட்டங்களும், உதவிகளும் செய்து வந்தார். 1920 ஆம் ஆண்டில், பி. டி. ராஜன் அவர்கள் சௌந்தரபாண்டியன் நாடார் அவர்களை சட்டப் பேரவைக்குப் பரிந்துரைத்ததால், அவ்வாண்டில் சென்னை சட்டப் பேரவை உறுப்பினராகத் தேர்ந்தெடுக்கப்பட்டார். 1937 ஆம் ஆண்டு வரை சட்டப் பேரவை உறுப்பினராக பணியாற்றிய அவர், நாடார் சமூகத்தின் நலன்களை நீதி கட்சி மற்றும் கவுன்சிலில் எடுத்துரைக்கும் நபராக செயல்பட்டார். மேலும் அவர், ராமநாதபுரம் மாவட்ட நிர்வாகக் குழு தலைவராக 1928 முதல் 1930 வரை பணியாற்றினார். 1943 முதல் 1947 ஆம் ஆண்டு வரை, அவர் மதுரை மாவட்ட சபைத் தலைவராகவும் பணியாற்றினார்.

**சமூக சீர்த்திருத்தங்கள்:** தான் ஒரு சிறுவனாக இருந்து போதே, சமுதாயத்தில் நடந்த முறைகேடுகளைக் கண்டு வெகுண்டெழுந்த அவர், பெரியார் ஈ. வெ. ராமசாமி அவர்களின் கொள்கைகளால் பெரிதும் ஈர்க்கப்பட்டு அவரை தனது மானசீக குருவாகக் கருதி, அவர் சென்ற வழியைப் பின்தொடர்ந்தார். ஆகவே, அவர் பெரியாரின் கொள்கைகளைப் பின்பற்றும் தீவிர பக்தனாக உருவெடுத்தார். இதன் வெளிப்பாடாக அவர், புனித கயிறு புறக்கணிப்பு மற்றும் பிராமண பூசாரிகள் நிராகரிப்பு போன்ற மாறுதல்களை மக்களிடம் கொண்டுவந்தார். மேலும் அவர், சுய மரியாதை திருமணம் மற்றும் சாதிமத வேறுபாடின்றி உணவருந்தும் பழக்கத்தையும் அவரது சமூக மக்களிடம் வலியுறுத்தினார். அவரது இந்தப் புரட்சிகரமான செயல்களைக் கண்ட பெரியார் அவர்கள், 1929ல் சுயமரியாதை மாநாட்டின் தலைவராக அவரை நியமித்தார். நாடார் என்பதால், அவர் நாடார் மக்களின் நலனுக்காக மட்டும் பாடுபடவில்லை. அவர், தலித்துக்கள், தியாக்கள் போன்றோரின் முன்னேற்றத்திற்காகவும், பிற சமூக காரணங்களுக்காகவும் அயராது பாடுபட்டார். அவர் கமுதி தண்டனை வரியை மிகக் கடுமையாக எதிர்த்து, பல்வேறு போராட்டங்கள் நடத்தி அதற்கு முற்றுப்புள்ளி வைத்து வெற்றியும் கண்டார்.

**இறப்பு:** சௌந்தரபாண்டியன் நாடார் அவர்களது நிதிக் கட்சியில் உள்ள ஊழல் காரணமாக அவரது கட்சி செல்வாக்கு நாளடைவில் நலிவடைந்தது. மேலும், இந்திய தேசிய காங்கிரஸின் திட்டங்கள் மற்றும் அதில் நாடார் சமூகத்தை சேர்ந்த காமராஜர் போன்ற தலைவர்கள் வளர்ந்து வந்ததால், சௌந்தரபாண்டியன் நாடார் அவர்களின் அரசியல் வாழ்க்கை வீழ்ச்சி கண்டது. இதன் காரணமாக, அவரது உடல் நலம் குன்றி, அவர் பிப்ரவரி மாதம் 22 ஆம் தேதி, 1953 ஆம் ஆண்டில் மரணமடைந்தார்.

**குறிப்பு**

ஐயா சௌந்தரபாண்டியன் நாடார் அவர்கள், ஆட்சியில் இருந்த போது, பட்டிவீரன்பட்டியில் பல்வேறு பள்ளிகள், கல்லூரிகளை நிறுவினார். மேலும் பல கல்வி நிறுவனங்கள் அவரது பெயரில் செயல்பட்டு வருகிறது. 'நாடார் சமூகத்தின் முடிசூடா மன்னனாக' இருந்த அவர், பட்டிவீரன்பட்டியில் கா.ஃ.பி கூட்டுறவு பதன்படுதல் பணிகளை அமைக்கும் கருவியாகவும் இருந்தார். சென்னை மாவட்டத்தில் உள்ள முக்கியக் கடைத்தெருவான பாண்டி பஜாருக்கு, 'சௌந்தரபாண்டிய நாடார்' அவர்களின் பெயரிடப்பட்டது என்று பலரும் கூறுகின்றனர். அண்மையில், அந்தக் கடைத்தெருவின் நுழைவு வாயிலில், தலைவர் சௌந்தரபாண்டிய நாடார் அவர்களின் சிலை அமைக்கப்பட்டு, 'சௌந்தரபாண்டியன் அங்கத்' என்றும் ஒரு பேர் பலகை வைக்கப்பட்டுள்ளது.

**காலவரிசை**

- 1892: தமிழ்நாட்டில் இருக்கும் திண்டுக்கல் மற்றும் கொடைக்கானல் அருகிலுள்ள பட்டிவீரன்பட்டியில் செப்டம்பர் மாதம் 28 ஆம் தேதி, 1892 ஆம் ஆண்டில் பிறந்தார்.
- 1920: நாடார் மகாஜன சங்கத்தின் முக்கியத் தலைவராகத் தேர்ந்தெடுக்கப்பட்டார்.
- 1920: சென்னை சட்ட பேரவை உறுப்பினராகத் தேர்ந்தெடுக்கப்பட்டார்.
- 1928 – 1930: ராமநாதபுரம் மாவட்ட நிர்வாகக் குழு தலைவராகப் பணியாற்றினார்.
- 1943 – 1947: மதுரை மாவட்ட சபைத் தலைவராகப் பணியாற்றினார்.
- 1929: பெரியார் அவரை, சுயமரியாதை மாநாட்டின் தலைவராக அவரை நியமித்தார்
- 1953: அவரது உடல் நலம் குன்றி, அவர் பிப்ரவரி மாதம் 22 ஆம் தேதி, 1953 ஆம் ஆண்டில் மரணமடைந்தார்.

## 14.5 அண்ணாமலைச்செட்டியர்

சமூக நோக்கும் மனித நேயப் பண்பாடும் வளர்ந்தோங்கிய நகரத்தார் சமுதாயத்திலே பெருஞ்செல்வமும் செல்வாக்கும் பெற்றிருந்த இளையாத்தங்குடி பட்டணசாமி பிரிவைச் சேர்ந்த சா.ராம.முத்தையாச்

செட்டியாரும் ஒருவர். இவரின் நான்கு புதல்வர்களில் நான்காமவராக 1881 ஆம் ஆண்டு செப்டம்பர் திங்கள் 3ஆம் நாள் இராமநாதபுரம் மாவட்டம் கானாடுகாத்தான் என்கிற ஊரில் பிறந்தவரே அரசர் அண்ணாமலைச் செட்டியார். தெய்வபக்தி, அறச்சிந்தனை, தொழில் அர்ப்பணிப்பு ஆகியன மேலோங்கிய குடும்பத்தில் பிறந்ததினால் “கருவில் அமைந்த திருவே” இவரின் பிற்காலத்திய சாதனைகள் அனைத்திற்கும் அடிப்படையாக அமைந்தது எனலாம்.

**கல்வி:** தொடக்கக் கல்வியினைச் சொந்த ஊரான கானாடு காத்தானிலேயே பயின்ற அரசர் அண்ணாமலைச் செட்டியார் ஆங்கில அறிவினை அபிவிருத்தி செய்வதற்காக உள்ளூர் அஞ்சலக அதிகாரியிடம் அனுப்பி வைக்கப்பட்டார். வணிகக் குடும்பத்தில் உதித்தவர் என்ற போதிலும் தன்னைச்சுற்றி எப்போதும் வியாபார ரீதியிலான சூழல் அமைந்தாலும் அண்ணாமலையாரைக் கவர்ந்தது நூல்களும் ஏடுகளுமே. கரூரில் உயர் கல்வியினைப் பெற்ற அரசருக்குத் தான் கற்ற நூல்களில் மிகவும் கவர்ந்தது திருக்குறள்.

இளைஞரான அண்ணாமலையார் வியாபார நுணுக்கங்களை நன்கு அறிந்தார். இது தொடர்பாக பர்மா, மலேசியா மற்றும் கிழக்கிந்தியத் தீவுகள் வரை சென்று தம் நிறுவனங்களின் செயல்பாட்டினைச் செயல்பட வைத்தார். புதிய யுக்திகளைப் புகுத்தியதால் வருமானம் பன்மடங்காகியது. இச்சாதனையை அண்ணாமலைச் செட்டியார் நிகழ்த்தியபோது அவரின் வயது முப்பது. அண்ணாமலைச் செட்டியாருக்குப் பணம் ஈட்டுவது மட்டுமே நோக்கமாக இருக்கவில்லை. உலகின் அன்றாட வளர்ச்சிகளை நேரில் கண்டு பூரிப்பதிலும் மகிழ்வு கொண்டார். காசி முதல் இராமேசுவரம் வரை புனிதத் தலங்களைத் தரிசித்தார். இது தவிர பிரிட்டன், அமெரிக்கா, பிரான்ஸ் இங்கிலாந்து உள்ளிட்ட பல வெளிநாடுகளையும் வலம்வந்து வங்கித் தொழில் வளர்ச்சியை ஆய்வு செய்தார்.

இவரின் அனுபவ செறிவினைக் கண்ட செட்டிநாடு வாழ் மக்கள் அரசரை காரைக்குடி நகராட்சித் தலைவராக்கி மகிழ்ந்தனர். இதுதான் அவர் ஏற்றுக் கொண்ட முதல் மக்கள் சேவைப்பணி, அரசரின் சேவையினைக் கருத்தில் கொண்டு அன்றைய அரச நிர்வாகத்தார் அண்ணாமலைச் செட்டியாருக்க இராவ் பகதூர் திவான் பகதூர் ஆகிய பட்டங்களை வழங்கிக் கௌரவித்தனர். 1916ஆம் ஆண்டு சென்னை ராஜதானியின் சட்டமன்ற உறுப்பினரானார். 1921 ஆம் ஆண்டு தில்லியில் பாராளுமன்றத்தின் மேலவை உறுப்பினராகவும் தேர்வு செய்யப்பட்டார். இப்பொறுப்பில் மூன்ற முறை அங்கம் வகித்தார். அன்றைக்கு சமூகத்தின் உயர்நிலையில் இருப்பவர்கள் இடம் பெற்றிருந்த “லிபரல் கட்சி” இவரையும் அழைத்தது. அழைப்பினை ஏற்றார்.

குறிப்பு

சிதம்பரத்தில் உறையும் ஆனந்த நடராஜர்தான் அண்ணாமலைச் செட்டியாரின் குலதெய்வம். இதன் காரணமாக இவ்வூரில் உயர்பள்ளி ஒன்றினையும் நிர்வகித்து வந்தார். பின்பு, மதுரையில் 1920ஆம் ஆண்டு ஜூன் 24 ஆம் நாள் தம் தாயார் பெயரில் "ஸ்ரீ மீனாட்சி கல்லூரி" யினை அமைத்தார். 1912ஆம் ஆண்டு தம் உறவினர்களையும், நண்பர்களையும் பங்கு தாரர்களாகக் கொண்டு "இந்தியன் வங்கி" என்ற ஸ்தாபினத்தைத் தொடங்கினார். நாட்டுக்கோட்டை நகரத்தார் சமூகத்தினர் கோவில் திருப்பணிகள், அன்னசத்திரங்கள், சமஸ்கிருதப் பாடசாலைகள், பள்ளிகள், மருத்துவமனைகள் ஆகியவற்றை உருவாக்கிப் பராமரிப்பதை மனிதகுலச் சேவையாக, அறப்பணியாக செயல்படுத்தி வந்த்தார்கள். அண்ணாமலைச் செட்டியார் இதிலிருந்து சற்று மாறுபட்டு கல்வியும் மருத்துவமுமே நமது சமுதாயத்தின் அடிப்படை தேவை என்ற எண்ணங்கொண்டிருந்தார். எனவே ,இரண்டுக்கும் தாராள தானங்கள் செய்தார்.

தமிழில் தொன்மையான நூல்களை வெளியிடவும், ஆய்வுகள் பல மேற்கொள்ளவும், அழிந்து போகவுள்ள அரியக் கலைச் செல்வங்களைத் திரட்டிப் பதிப்பிக்கவும், தனித்தமிழ்ப் பல்கலைக்கழகம் ஒன்றை அமைத்து அதில் தமிழர்களின் தமிழ் அறிவுடமைச் சார்ந்த சொத்துக்களுக்கும் முன்னுரிமைத் தர விரும்பினார். தமிழர் பண்பாடு பாதுகாக்கப்பட உரிய நடவடிக்கைகளை மேற்கொண்டு 1927ஆம் ஆண்டு சிதம்பரத்தில் வடமொழிக் கல்லூரியும், தமிழ்க் கல்வியும் உருவாக்கப்பட்டன. தொடர்ந்து வித்வான் கல்லூரியும் இசைக் கல்லூரியும் தோற்றுவிக்கப்பட்டன. 1928ஆம் ஆண்டு ஒரு பல்கலைக்கழகத்தினை நிறுவுவதற்கான முறையான திட்ட அறிக்கையினை அரசிடம் பணித்தார் அரசர். இதற்கான மசோதா உடனடியாக நிறைவேற்றப்பட்டு 1929ஆம் ஆண்டு சனவரி 1 ஆம் தேதி அண்ணாமலைப் பல்கலைச் சட்டம் நடைமுறைக்கு வந்தது. அப்போதைய ஆளுநராக இருந்த எச்.ஜி.சர்.ஜார்ஜ் பிரடெரிக் ஸ்டான்லி அவர்களால் 1930 ஆம் ஆண்டு மார்ச் 24 ஆம் நாள் பல்கலைக்கழகம் முறைப்படி துவக்கப்பட்டது. முதல் துணைவேந்தராக சர் சாமுவேல் அரங்கநாதன் பொறுப்பேற்றார். 1929 இல் இங்கிலாந்து மன்னர் "ராஜா" என்ற பட்டத்தினை அண்ணாமலைச் செட்டியாருக்கு வழங்கிச் சிறப்பித்தார். அன்று முதல் ராஜா சர் அண்ணாமலைச் செட்டியார் என்றபெயர் நீடித்து நிலைத்தது.

அண்ணாமலைச் செட்டியார் இசை மீது வைத்திருந்த பற்று அலாதியானது. குறிப்பாகத் தமிழிசை மேம்பாட்டில் அதிக அக்கறை கொண்டிருந்தார். இசைக்கான ஒரு கல்வி அமைப்பினை உருவாக்கியவரும் இவரே. தமது பல்கலைக்கழகத்தின் மற்ற முக்கியத் துறைகளுக்கு இணையான அந்தஸ்தினைத் தமிழிசை பிரிவிற்கும் தந்தார். இவ்விசை வடிவம் புத்துயிர் பெறுவதற்காக உரிய வழி வகைகளை ஆராய அண்ணாமலை நகரில் இரண்டு பெரிய மாநாடுகளை

நடத்தினார். தமிழிசைக்குத் தமது இறுதிக் காலம் வரை தம்மால் இயன்ற தொண்டுகளைச் செய்து வந்த ராஜா அண்ணாமலைச் செட்டியார் 1948ஆம் ஆண்டு ஜூன் 15 ஆம் ஆடலரசனின் திருப்பாதங்களைச் சரண் அடைந்தார்.

**ராஜா சர் அண்ணாமலைச் செட்டியார் தமிழிசைச்சங்கம்**: 1943ஆம் ஆண்டு தமிழிசைச் சங்கம் நிறுவினார். ராஜா சர் அண்ணாமலைச் செட்டியார், புகழ்மிக்க இசைக் கலைஞர்களை ஒன்று திரட்டி அவர்களிடம் மறைந்திருந்த இசைப் பெருஞ் செல்வங்களை வெளிக் கொணர்ந்தார். தமிழிசை ஆராய்ச்சிகளை ஊக்குவித்தார். சுரதாளக் குறிப்புடன் (ழேவயவழைெ) கூடிய இருபது தமிழிசைப்பாடல் தொகுதிகள் (916 பாடல்கள்) வெளிவரவும். உதவி புரிந்தார். இப்பெருமை மிக்க பணியில் அரசருடன் இணைந்து பாடுபட்டார். அரசரின் நெருங்கிய சகாவான சர். ஆர்.கே.சண்முகம் செட்டியார் தமிழகத்தில் தமிழிசை இயக்கத்தின் வளர்ச்சிக்குப் பாடுபட்ட முழுப் பெருமையும் இந்த பெருமகனார்கள் இருவரையுமே சாரும். இதற்காக தமிழர்களம், தமிழ் கூறும் நல்லுலகத்தின் இசை உலகத்தவரும் இவர்களுக்கு என்றென்றும் நன்றிக் கடன் பட்டுள்ளனர். அரசரின் இந்தசேவை தமிழக வரலாற்றிலும், தமிழர் தம் இசை வரலாற்றிலும் பொன் எழுத்துக்களால் பொறிக்கப்பட வேண்டிய தகுதியினை எட்டியுள்ளது. தமிழிசை இயக்கத்திற்கு இறுதிக்காலம் வரை தம்மால் இயன்ற தொண்டுகளை செய்து வந்தார். சென்னை மாநகரின் பிரதானப் பகுதியில் பிரம்மாண்டமாக்க் காட்சி தரும் ராஜா அண்ணாமலை மன்றம் இன்றைக்கும் அன்னாரது பெருமையினைப் பறைசாற்றிக் கொண்டிருக்கிறது.

அண்ணாமலைச் செட்டியாரின் மூத்தப் புதல்வரான டாக்டர் ராசா சர் முத்தையாச் செட்டியாரது தமிழிசைப் பணிகள் மரபு வழி வந்த மாண்பாகும். ஒரு கட்டத்தில் பொது வாழ்விலிருந்து விலகிய இவர் பல்கலைக்கழக வளர்ச்சியையும், தமிழிசை மேம்பாட்டிற்கான பணிகளையுமே தமது இரு பெரும் நோக்கங்களாகக் கொண்டு செயல்பட்டு வந்தார். ஏறக்குறைய அரை நூற்றாண்டாக மங்கிப் போய்விட்ட தமிழிசையை முன்பிருந்த நிலைக்கு உயர்த்த வேண்டும் எனப் பாடுபட்டார். சென்னையில் அண்ணாமலை மன்றத்தை நிறுவி இசை விழாக் காலத்தில் அங்கே தமிழிசை விழாக்கள் நடக்கக் காரணமாக இருந்தார்.

தந்தையார் காலத்தில் சென்னையை மையப்படுத்தி இருந்த தமிழிசைப் பணிகளை தமிழகத்தின் இதர நகரங்களுக்கும் விரிவுபடுத்த திருச்சி-மதுரை போன்ற நகரங்களிலும் மன்ற அமைப்புகள் துவக்கப்பட்டன. மதுரையில் உள்ள எழில் நிறைந்த “முத்தையா மன்றம்” துவக்க விழாவில் அன்றைய முதல்வர் எம்.ஜி.இராமச்சந்திரன் அரசர் அவர்களுக்கு “தமிழிசைக் காவலர்” என்ற பட்டத்தினை வழங்கிப் பாராட்டினார். நூற்றாண்டு விழா நிறைவுற்ற குமார ராஜா முத்தையா

செட்டியார் அவர்கள் தம் தந்தையின் அடிச்சுவட்டைப் பின்பற்றித் தமிழிசை வளர்ச்சிக்குச் செய்துள்ள தொண்டு கல்லில் பொறித்த வாசகமாம் காலத்திற்கும் அழியாது.



அண்ணாமலை என்றாலே திருவண்ணாமலை ஞாபகத்திற்கு வருகிறதோ இல்லையோ தமிழிசை நினைவிற்கு வராமல் போகாது. அந்த வகையில் முன்னோர்களின் செம்மையான இசை மேம்பாட்டுப் பணிகளில் எம்.ஏ.எம்.இராமசாமி அவர்களும், அக்கறை காட்டி வருகிறார்கள். தமிழிசைக் கல்லூரியில் பயிலும் மாணவர்களுக்கு அறக்கட்டளை நிதியிலிருந்து உதவித் தொகை வழங்கி இசையாலும் மாணவர்களை உற்சாகப்படுத்தி வருகிறார். தம் தந்தையார் மதுரையில் நிறுவிய தமிழிசைச் சங்கத்தினைக் கொண்டு தென் தமிழகத்திலும் இசை வளர்த்து வருகிறார். இசைக்கலைக்கும் கலைஞர்களுக்கும் நல்லதொரு புரவலராகத் திகழ்கிறார். இவரின் வழிகாட்டலில் இயங்கி வரும் இராணி சீதை மன்றம் கலை நிகழ்ச்சிகளுக்கு சலுகைகள் அளித்து வருகிறது. இவர் தந்தையார் வழியில் தமது கல்விப் பணியினையும், அறப்பணிகளையும், தமிழிசைப் பணியினையும், பல்கலைக்கழக நிர்வாகத்தையும் திறம்படச் செயல்படுத்தி வரும் மாமனிதராவார்.

**உங்கள் முன்னேற்றத்தைச் சரிபார்க்கவும்**

1. பொபிலி அரசரின் இயற்பெயர் என்ன?
2. பனகல் அரசர் என்பவர் யார்?

## 14.7 உங்கள் முன்னேற்றத்தைச் சரிபார்க்கும் வினாக்களுக்கான விடைகள்

1. பொபிலி அரசரின் இயற்பெயர் ராமகிருஷ்ண ரங்கா ராவ் ஆகும்
2. பனங்கன்டி ராமராயநிங்கார் என்னும் இயற்பெயர் கொண்ட பனகல் அரசர் (ஜூலை 9, 1866 – டிசம்பர் 16, 1928) நீதிக்கட்சியின் தலைவர்களுள் ஒருவரும், சென்னை மாகாணத்தின் இரண்டாவது முதலமைச்சருமாவார்.

## 14.8 சுருக்கவுரை

- இராமசாமி முதலியார் சமூக மன்றத் தலைவராக ஓராண்டு பணிபுரிந்து பின் பணிக்காலம் முடிவடைந்ததால் இந்தியாவுக்குத் திரும்பி மைசூரின் முதலமைச்சராகப் (திவான்) பதவியேற்றார். மைசூர் மகாராஜா ஜயச்சாமராஜ வாடியாருக்கு சுதந்திர இந்தியாவுடன் இணைய வேண்டாமென ஆலோசனை கூறினார்.

- பொபிலி அரசர் ரங்கா ராவ் 1946-51 இல் இந்தியாவின் அரசியல் அமைப்பு சட்டத்தை இயற்றிய இந்திய அரசியலமைப்பு நிர்ணயமன்றத்தின் உறுப்பினராகப் பணியாற்றினார். பின்னர் பல

ஆண்டுகள் அரசியலிலிருந்து ஓய்வு பெற்றார். 1967 ஆம் ஆண்டு ஆந்திர சட்டமன்றத் தேர்தலில் வென்று 1972 வரை சட்டமன்ற உறுப்பினராகப் பணியாற்றினார்.

- பனகல்அரசர் ். பனகல் அரசர், டிசம்பர் 16, 1928 இல் இறந்தார். அவரது நினைவாக தி. நகரின் மையப் பகுதியில் உள்ள பூங்கா “பனகல் பூங்கா” என்றும் சைதாப்பேட்டையிலுள்ள மாவட்ட வருவாய்த் துறை அலுவலகம் “பனகல் மாளிகை” என்றும் அழைக்கப்படுகின்றன.

- சௌந்தரப்பாண்டியன் ஐயா சௌந்தரபாண்டியன் நாடார் அவர்கள், ஆட்சியில் இருந்த போது, பட்டிவீரன்பட்டியில் பல்வேறு பள்ளிகள், கல்லூரிகளை நிறுவினார். மேலும் பல கல்வி நிறுவனங்கள் அவரது பெயரில் செயல்பட்டு வருகிறது. ‘நாடார் சமூகத்தின் முடிசூடா மன்னனாக’ இருந்த அவர், பட்டிவீரன்பட்டியில் கா.ஃ.பி கூட்டுறவு பதன்படுதல் பணிகளை அமைக்கும் கருவியாகவும் இருந்தார்.

- அண்ணாமலைச்செட்டியா இசைக்கலைக்கும் கலைஞர்களுக்கும் நல்லதொரு புரவலராகத் திகழ்கிறார். இவரின் வழிகாட்டலில் இயங்கி வரும் இராணி சீதை மன்றம் கலை நிகழ்ச்சிகளுக்கு சலுகைகள் அளித்து வருகிறது. இவர் தந்தையார் வழியில் தமது கல்விப் பணியினையும், அறப்பணிகளையும், தமிழிசைப் பணியினையும், பல்கலைக்கழக நிர்வாகத்தையும் திறம்படச் செயல்படுத்தி வரும் மாமனிதராவார்

## 14.9 முக்கிய கருத்துப்படிமங்கள்

- இராமசாமி முதலியார்
- பொபிலி அரசர்
- பனகல்அரசர்
- சௌந்தரப்பாண்டியன்
- அண்ணாமலைச்செட்டியா

## 14.10 சுயமதிப்பீட்டு பயிற்சி வினாக்கள்

**குறுகிய வினாக்களுக்கு விடையளிக்கவும்**

1. பனகல்அரசர் பற்றி மதிப்பிடுக?

2 பொபிலி அரசர் பற்றி சிறு குறிப்பு வரைக?

**விரிவான வினாக்களுக்கு விடையளிக்கவும்**

1. இராமசாமி முதலியாரின் பணிகளைப் பற்றிக் கட்டுரை வரைக?



## 14.11 மேலும் படிக்க


- ஐயங்கார்,சீனிவாசீ. வு (2001), *தமிழர்களின் வரலாறு: ஆரம்ப காலத்திலிருந்து 600 கி.பி வரை.* டெல்லி
- கிருஸ்ணசுவாமி.அ, (1977) விஜயநகரபப் பேரரசின் வரலாறு (கிபி1525 வரை) தமிழ்நாட்டுப் பாடநூல் நிறுவனம், அண்ணாமலைநகர்.
- சர்மா,சு.ளு. (2006). *பண்டைய இந்தியாவின் முந்தைய காலம்.* ஆக்ஸ்.ஃபோர்ட் யுனிவர்சிட்டி பிரஸ்.
- சாஸ்திரி, ராமசாமி. (2002) *தமிழர்கள்: மக்கள், அவர்களின் வரலாறு மற்றும் கலாச்சாரம்.* புதுடெல்லி, காஸ்மோ பப்ளிகேஷன்ஸ்
- சிராஜீத்தின, (2010), *தமிழ்நாட்டு வரலாறு (கி.பி. 1987 வரை),* பாவை பப்ளிகேசன், சென்னை
- தேவநேயப்பாவணர். (1992) *பண்டைத் தமிழர் நாகரிகமும் பண்பாடும்,* கழக வெளியீடு சென்னை
- மாதவன்,சித்ரா, (2005), *தமிழ்நாட்டின் வரலாறு மற்றும் கலாச்சாரம்: தொகுதி-1 (கி.பி.1310 வரை).* டெல்லி

# மாதிரி வினாத்தாள் - II

**DISTANCE EDUCATION- CBCS (2019-2020 Academic Year Onwards)**

**Question Paper Patterns (ESE) – Theory**

(UG/PG/P.G. Diploma Programme)

குறிப்பு

Time: 3 Hours Maximum: 75 Marks

**Part-A** **(10X2= 20 Marks)**

**Answer All questions**

1. மாங்குடி மருதன் என்பவர் யார்?
2. உலக பொதுமறை என்றால் என்ன?
3. தமிழ்ப்புலவி என்பவர் யார்?
4. தொல்காப்பியரின் இயற்பெயர் என்ன?
5. செங்குட்டுவனின் தம்பி யார்?
6. தனித்தமிழ் இயக்கம் ஏற்பட்ட ஆண்டு எது?
7. பொது நிலைக் கழகம் என்றால் என்ன?
8. தமிழ்தாய் வாழ்த்தை இயற்றியவர் யார்?
9. அலுவல்மொழிச் சட்டம் எந்த ஆண்டு பிறப்பிக்கப்பட்டது?
10. இந்தியாவின் முதல் பெண் மருத்துவர் யார்?

**Part-B** **(5X5=25 Marks)**

**Answer all questions choosing either (a) or (b)**

11.(a) சங்கப் பாடல்கள் விவரிக்கவும்?

(அல்லது)

(b) திரு.வி.காவின் தமிழ்ப் பணியைப் பற்றிக் விளக்குக?

12 (a) மறைமலை அடிகள் பற்றி மதிப்பிடுக??

(அல்லது)

(b) திராவிட இயக்கத்தின் தமிழ் பணியைப் பற்றி கட்டுரை வரைக?

13 (a) திருவள்ளுவரைப் பற்றி சிறு குறிப்பு வரைக?

(அல்லது)

(b) இராமானுசர் பற்றி சிறு குறிப்பு வரைக?

14. (a) பிராமணர் அல்லாதோர் சங்கம் விவரிக்கவும்??

(அல்லது)



(b) திருமூலரைப் பற்றி மதிப்பிடுக?

15. (a) பனகல்அரசர் பற்றி மதிப்பிடுக??

(அல்லது)

(b) பெரியாரின் சமூக இயக்கங்களைப் பற்றிக் கட்டுரை வரைக?

**Part –C** **(3x 10=30)**

**Answer any 3 out of 5 Questions**

16. சங்கால இலக்கியங்கள் பற்றி கட்டுரை வரைக?

17. தமிழ் மொழி மற்றும் இலக்கியத்தின் மறுமலர்ச்சி பற்றி கட்டுரை வரைக?

18. வீரமாமுனிவரின் தமிழ்பணியைப் பற்றிக் கட்டுரை வரைக?

19. நீதிக்கட்சியின் கட்டமைப்புகளைப் பற்றி மதிப்படுக??

20.இராமசாமி முதலியாரின் பணிகளைப் பற்றிக் கட்டுரை வரைக??